அருள்மிகு

# பெரியநாயகி அம்மன் கோயில்

வேலங்குடி

# திருக்குட நன்னீராட்டு விழா.

சிறப்பு மலர் 10 - 6 - 2005





பாலைய நாட்டார் குல முதற் தெய்வம்

# அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோயில்

வேலங்குடி



# திருக்குட நீராட்டு விழா

## 10-6-2005

# சிறப்பு மலர்





அருள் பெரியநாயகி அம்மனுக்கு, நாட்டார்
அணி மலர், படையலாய் ஆக்கிப் பணிகின்றோம்.

உ
சிவமயம்



## பாலைய நாட்டாரின் குலதெய்வமாக வேலங்குடியில் குடிகொண்டிலங்கும்
## அருள்மிகு பெரியநாயகி அம்மன் திருக்கோவில்

ஜீர்ணோத்தாரண அஷ்டபந்தன ஜெயபந்தன

# திருக்குட நீராட்டு விழா அழைப்பிதழ்

**நிலைத்த காப்பு**

உருப்பெற்ற பொன்முடியை நடம்புரிந்தே
உணர்வூட்டி வல்லம்பர் தொடரும்
கருப்பொருளாம் பாலைமரப் பொற்றிருப்பதே
கலைப்பொருளாய்த் திருமேனி காட்டி நிற்றே
விருப்புற்ற முத்தலைவேள் பிடாரியை
விளக்குமுற முளைகாட்டி வழிபாடெற்று
நெருப்புற்ற பஞ்சாக வினைபொசிக்கும்
நிர்மலை பொன்னழகுமலை நிலைத்தகாப்பே!



**குலங்காவல் கொண்ட நாயகி**

[illegible]

மூவேந்தர் ஆட்சிக்கு வழிவகுத்த மூத்தகுடி வல்லம்பர் கொற்றவைக்குப்
பூவேந்தி வழிபட்டுப் பாலை மண்ணைப் பொன்னாக்கிப் புகழ்பரப்பி நாட்டாரானோம்!

-கவிஞர் கோமான் க. தேசிகனார்.

பேரன்புடையீர்,

வணக்கம். வாழிய நலமே!.. உலகம் யாவையும் தாமுளவாக்கி, நிலைபெறுத்தி, பாலைநாட்டார் பெருமக்களுக்கு முதற்பெருந்தெய்வமாய், பால் நினைந்து ஊட்டும் தாயினும் சாலப்பரிந்து அருள்பாலிக்கும் வண்ணம், செந்தமிழ் மணம்கமழும் தென்பாண்டிவளநாட்டில், நன் பாட்டுப்புலவனாய்ச் சங்கம்ஏறி நற்கனகக்கிழி தருமிக்கு அருளிய திருத்தளியான் கோயில் கொண்ட திருப்பத்தூருக்கும், தமிழ்க் குமரன் கொலுவீற்றிருக்கும் குன்றாத் திருக்குடியாம் குன்றக்குடிக்கும் கிழக்கேயும்-செம்புனல் பெருகும் திருக்காவிரி, திருவானைக்கா, திருமெய்யம் முதலான திருத்தலங்களுக்குத் தெற்கேயும் - தண்ணருள் உய்யவந்தாள் குடிகொண்டிலங்கும் சாக்கோட்டைக்கும் தண்ணிழல் வாவிசூழ் தனியொரு சிவன்கோயில் அமைந்த கல்லாங்குடிக்கும் மேற்கேயும் - கண்டதேவித்தலத்திற்கு வடக்கேயும், அமைந்திலங்கும் வேலங்குடி என்னும் நல்லூரில் கோயில் கொண்டுள்ள அன்னைபராசக்தியின் அருள்உருத்தாயாம் பெரியநாயகி அம்மனுக்குரிய வரலாற்றுச் சிறப்புமிக்க வளமுறு கோயிலின் கருவறை, பெருமண்டபம், உற்சவமண்டபம், கொற்றவை முற்றம், விமானம், இராஜகோபுரம், சுற்றுமதில் முதலானவற்றை அழகுறப் புதுப்பித்து ஜீர்ணோத்தாரணம் செய்து, நாளது கல்யப்தம் ஐயாயிரத்து நூற்று ஆறுக்கு பார்த்திப ஆண்டு வைகாசித்திங்கள் இருபத்தேழாம் நாள் (10-6-2005) வெள்ளிக்கிழமை சதுர்த்தி திதியும் புனர்பூச நட்சத்திரமும் சித்தயோகமும் கூடிய சுபயோக சுபதினத்தில் காலை 10.00 மணிக்கு மேல் 10.25க்குள் குரு ஹோரை கூடிய நிஷ்பஞ்சக கடக லக்னத்தில் அருள்மிகு பெரியநாயகியம்மன் திருக்கோயில் திருக்குட நீராட்டுவிழா கும்பாபிசேக சக்கரவர்த்தி திருவாவடுதுறை ஆதீனம் திருப்பெருந்திரு முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களது முன்னிலையில் சிறப்புற நடைபெறவுள்ளது. அவ்விழாவில் தாங்கள், உற்றார் உறவினர் சுற்றம் சூழ வந்து கலந்துகொண்டு, அன்னை பெரியநாயகி அம்பாள் அருளும், ஆசியும் பெற்று உய்யுமாறு வேண்டுகிறோம்.

### நிகழ்ச்சி நிரல்

| 2005 | பார்த்திப | நாள் | நேரம் | நிகழ்வுகள் |
|---|---|---|---|---|
| ஜுன் 8 | வைகாசி 25 | புதன் | காலை 9.00க்கு மேல் பிற்பகல் 1.00 மணிக்குள் | அனுக்ஞை, விக்னேஸ்வரபூஜை, கோ பூஜை, கணபதி ஹோமம், நவக்ரக ஹோமம், லெட்சுமி பூஜை, தன பூஜை, வடுக பூஜை, சுவாசினி பூஜை, வாஸ்து சாந்தி |
| | | | மாலை 5.00 | பிரவேச பலி, ரக்ஷோக்ன ஹோமம், மிருத்ஸங்கிரஹணம், அங்குரார்ப்பணம், கும்ப அலங்காரம், கலாகர்ஷணம், யாத்ராதானம், யாக சாலைப் பிரவேசம் |
| | | | இரவு 9.30 | முதல்கால யாக வேள்வி, பூர்ணாகுதி, தீபாராதனை, பிரசாதம் வழங்குதல் |
| ஜுன் 9 | வைகாசி 26 | வியாழன் | | ஆச்சார்ய விசேஷ சந்தி |
| | | | காலை 8.30 | இரண்டாம் கால யாக வேள்வி |
| | | | பகல் 12.00 | பூர்ணாகுதி, தீபாராதனை, பிரசாதம் வழங்குதல் |
| | | | மாலை 5.30 | மூன்றாம் கால யாக வேள்வி |
| | | | இரவு 9.00 | பூர்ணாகுதி, தீபாராதனை, பிரசாதம் வழங்குதல் |
| ஜுன் 10 | வைகாசி 27 | வெள்ளி | காலை 6.30 | நான்காம் கால யாக வேள்வி |
| | | | காலை 8.00 | ஸ்பர்ஸாகுதி, திரவ்யாகுதி |
| | | | காலை 9.00 | பூர்ணாகுதி, தீபாராதனை |
| | | | காலை 9.15 | யாத்ரா தானம் |
| | | | காலை 9.30 | கடம் புறப்பாடு |
| | | | காலை 10.00-10.25 | **திருக்குட நீராட்டுவிழா** |
| | | | பகல் 12.00 | மகா அபிஷேகம் |
| | | | பிற்பகல் 1.00 | மகா தீபாராதனை, பட்டு சாத்துதல், பிரசாதம் வழங்குதல் |
| | | | இரவு | அம்மன்திருவீதி உலா |

சர்வ சாதகம் : **சிவஸ்ரீ சண்முகசுந்தர பட்டர்**, அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் கோயில், மதுரை.

வான்முகில் வழாது பெய்க மலிவளம் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க குறைவிலாது உயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவ நீதி விளங்குக உலகமெல்லாம்!
திருச்சிற்றம்பலம்.

பார்த்திப வைகாசி 4
18-5-2005, வேலங்குடி.

இன்னணம்
**பாலைய நாட்டார்கள்**

வேள்விச்சாலை வழிபாட்டு நாட்களில் திருமுறை இசை, வேத பாராயணம், கலை இலக்கிய நிகழ்ச்சிகள் நடைபெறும்



பாலைய நாட்டுக் குல முதற் தெய்வம்

# அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோயில்

# திருக்குட நீராட்டு விழா

வேலங்குடி.

## கலை, இசை, இலக்கிய நிகழ்ச்சிகள்

### நாதசுரம்

மலேசியா புகழ் 'பெருவங்கிய மணி'

பட்டமங்கலம் S. **முத்துமாணிக்கம்** & S. **கண்ணன்** - நாதசுரம்

S. **பாக்கியநாதன்** & M. **கார்த்திக்** - தவில்கள்

### திருமுறை இசை

'இன்னிசைத் திருமுறை மாமணிகள்'

**திரு. S.S. மணி அய்யர் ஓதுவார்**

**திரு. வே. முத்தையா ஓதுவார்**

### முழவு இசை

**கேரள செண்டை இசைக் கலைஞர்கள்**

### 9-6-05 வியாழன் இரவு 9.00 மணி

**பரதம், கிராமிய நடன நிகழ்ச்சி**

கலைமாமணி - சிலம்பிசைச் செல்வி - முனைவர்

**மா.சுப.சரளா**, M.A.,Ph.D., அவர்களது

கலைக்கோயில் நாட்டியப் பள்ளி மாணவிகள்

### 10-6-05 வெள்ளி இரவு 9.00 மணி

**மாபெரும் நகைச்சுவைப் பட்டி மன்றம்**

நடுவர் : 'நகைச் சுவைத் தென்றல்'

பேராசிரியர் டாக்டர் **கு. ஞானசம்பந்தன்** M.A., M.Phil., Ph.D.,

**தலைப்பு : குடும்பம் என்பது குழப்பமா? குதூகலமா?**

**குழப்பமே!**

**டாக்டர் சுந்தர ஆவுடையப்பன்** M.A.,M.Phil.,Ph.D.,

பேராசிரியர் **மா. வளவன்** M.A.,M.Phil.,

**கவிஞர் சிவகுருநாதன்** M.A.,M.Phil.,

**குதூகலமே!**

பேராசிரியை **திருமதி செ. சுந்தரவல்லி** M.A.,M.Phil.,

**திருமதி சுமதி ராசகோபாலன்** M.A.,

பேராசிரியை **திருமதி குரு ஞானாம்பிகை** M.A.,M.Phil.,



கலங்காதிங் கரம்நோக்கக் கருணை தேக்கும்
கடைக்கண்ணால் எமைநோக்கி முறுவல் பூக்கும்
குலங்காவல் கொண்ட பெரியம்மா! வேலங்
குடிகொண்டாய்! அடிக்கமலம் முடிகொண் டோமே!

# அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோயில்
# திருக்குட நன்னீராட்டு விழாக் குழுவினர்

தலைவர்



சித.அரு.கயி. அருணாசலம் அம்பலம்
கோட்டையூர்

செயலாளர்



சுப.பழநியப்பன் அம்பலம்
பலவான்குடி

பொருளாளர்



சி.ஆ.பெரி. கணபதி அம்பலம்
வேலங்குடி

துணைத் தலைவர்



ஆ.சோ.ராம. ராமசாமி சேர்வை
நேமத்தான்பட்டி

துணைச் செயலாளர்



பூ.ச. ராமநாதன் சேர்வை
பள்ளத்தூர்



ராம. கருப்பையா அம்பலம்
கண்டனூர்



ம.சி.பெ. சொக்கையா அம்பலம்
பாலையூர்



அரு. ராமசாமி அம்பலம்
கருவியப்பட்டி



நெ. சிதம்பரம் சேர்வை
வடகுடி



மு. ராமச்சந்திரன் அம்பலம்
மணச்சை



பூசித.ராம. கிருஷ்ணன் அம்பலம்
கொத்தரி



வயி. அருணாசலம் அம்பலம்
கானாடுகாத்தான்



சி.பெரி.சி.மெ. நடராசன் அம்பலம்
காரைக்குடி



மு. அழகப்பன் அம்பலம்
கழனிவாசல்



பெ.க. முத்துச்சாமி அம்பலம்
சுட்டிநெல்லிபட்டி



நா.அரு. முத்து அம்பலம்
முள்ளாம்பட்டி

நாட்டுச் சேர்வை



ப.ராம. ராமச்சந்திரன் சேர்வை
பள்ளத்தூர்

நாட்டு அம்பலம்



பா.பெரி. நல்லகருப்பன் அம்பலம்
பள்ளத்தூர்

# நிதி திரட்டு & ஆலோசனைக் குழுவினர்



P. சுப்பையா அம்பலம்
வேலங்குடி



வெ.கரு. கிருஷ்ணன் அம்பலம்
வேலங்குடி



சோ.கரு. துரைராஜ் அம்பலம்
வேலங்குடி



அரு. சுப்புராமன் அம்பலம்
கோட்டையூர்



முரு. சோலைமலை அம்பலம்
மணச்சை



நெ. சேதுராமன் அம்பலம்
கருவியப்பட்டி



பி. மீனாட்சிசுந்தரம் அம்பலம்
கானாடுகாத்தான்



ராம. சின்னச்சாமி அம்பலம்
பள்ளத்தூர்



சோலை. இராமச்சந்திரன் சேர்வை
பள்ளத்தூர்



கோ.மு.ந. சின்னையா சேர்வை
பள்ளத்தூர்



சொ. துரைசிங்கம் அம்பலம்
கானாடுகாத்தான்



ராம. முத்துராமன் அம்பலம்
காரைக்குடி



ராம. சின்னையா அம்பலம்
கண்டனூர்



சே. ராமசாமி சேர்வை
பாலையூர்



நல்லபிச்சன் நா. சேதுராமன் அம்பலம்
கானாடுகாத்தான்



வ.கு. குப்புசாமி அம்பலம்
பாலையூர்



பேராசிரியர் டாக்டர் அய்க்கண்
கண்டனூர்

# சிறப்பு மலர்க் குழுவினர்



பேராசிரியர் டாக்டர் அய்க்கண்



சோலை. இராமச்சந்திரன் சேர்வை



ராம. சின்னச்சாமி அம்பலம்



சுப. பழநிவேலு அம்பலம்
கழநிவாசல்

*மலர் உருவாக்கம்*

KN. சரவணன்



## அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோயில், வேலங்குடி.

**இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை அறங்காவலர்கள் நியமனம்**

**நாள் : 8-6-1953 ந.க. எண் 5 / 8-6 / 1953**

திரு. **கயி. அரு. அருணாசலம் அம்பலம்**, கோட்டையூர்

திரு. **ராம. லெ. ராம. ராமசாமி அம்பலம்**, கோட்டையூர்

திரு. **சி. ஆ. பெரி. பெரியணன் அம்பலம்**, வேலங்குடி

நாள் : 29-8-1960 ந.க. எண் : 6/29-8/1960

திரு. **கயி. அரு. கைலாசம் அம்பலம்**, கோட்டையூர்

திரு. **ராம. லெ. ராம. ராமசாமி அம்பலம்**, கோட்டையூர்

நாள் : 21-4-1966 ந.க.எண் : 4025/65

திரு. **சி.ஆ.பெரி. வெள்ளைச்சாமி அம்பலம்**, வேலங்குடி

நாள் : 31-1-1973 ப.மு.எண். 2095 / 73

திரு. **சி.ஆ.பெரி. வெள்ளைச்சாமி அம்பலம்**, வேலங்குடி

நாள் : 17-8-1978 ந.க.எண் : 9505 / 78

திரு. **சி.ஆ.பெரி. கணபதி அம்பலம்**, வேலங்குடி

நாள் : 26-3-1983 ந.க. எண்: 4555 / 83

திரு. **சி.ஆ.பெரி. கணபதி அம்பலம்**, வேலங்குடி

பாலையநாட்டார்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு ஸ்கீம் சூட் ஓ.மு.எண் : 9929 / 2003 / இ1

நாள் : 28-11-2003 தீர்ப்புப்படி

### இந்து சமய அறநிலைய ஆட்சித்துறையால் புதிதாக நியமனம் ஆகப்போகும் அறங்காவலர்கள்

திரு. **சி.ஆ.பெரி.வெ. திருநாவுக்கரசு அம்பலம்**, வேலங்குடி

திரு. **சுப. கருப்பையா அம்பலம்**, கண்டனூர்

திரு. **ஆறு. ஜெகராசன் அம்பலம்**, மணச்சை

திரு. **அழ. சுப்பிரமணியன் அம்பலம்**, கழனிவாசல்

திரு. **சொ. துரைசிங்கம் அம்பலம்**, கானாடுகாத்தான்.

பாலையநாட்டார் அறப்பணிகள் டிரஸ்ட் (பதிவு எண் : 1517 - 21-8-1971)
பாலைய நாட்டார் அலுவலகம்
வேலங்குடி தொலைபேசி : 283315

பாலையநாட்டார் அறப்பணிகள் டிரஸ்ட், வேலங்குடி சி.ஆ.பெரி. வெள்ளைச்சாமி அம்பலம் அவர்களால் தோற்றுவிக்கப்பெற்று, கீழ்க்கண்ட அங்கத்தினர்கள் நியமனம் செய்யப்பெற்று நிர்வாகம் நடந்துவந்தது.

1. திரு. **சி.ஆ.பெரி. வெள்ளைச்சாமி அம்பலம்**, தலைவர்
2. திரு. **தே.லெ.ராம. அருணாசலம் அம்பலம்**, வடகுடி
3. திரு. **பழ.பெரி.கருப்பணன் அம்பலம்**, பலவான்குடி
4. திரு. **கரு. சுப்பையா அம்பலம்**, காரைக்குடி
5. திரு. **சி. பெரி. வயிரவன் அம்பலம்**, கழநிவாசல்

இவர்களது ஆயுட்காலத்திற்குப் பின்பு நியமனமானவர்கள்

1. திரு. **சி.ஆ.பெரி. காசிவிஸ்வநாதன் அம்பலம்**, தலைவர்
2. திரு. **கரு. சுப. கண்ணன் அம்பலம்**, காரைக்குடி
3. திரு. **சுப. பழநியப்பன் அம்பலம்**, பலவான்குடி
4. திரு. **மு. முத்துச்சாமி சேர்வை**, வடகுடி
5. திரு. **சுப. பழநிவேலு**, கழநிவாசல்

ஈசுவர வருஷம் பங்குனி மாதம் 5ஆம் தேதி (19-3-1998), வடகுடி அருள்மிகு நெல்லியாண்டவர் கோயிலில் நடைபெற்ற நாட்டுக் கூட்டத்தின் தீர்மானப்படி அந்தந்த ஊர் நாட்டார்களால் நியமனம் செய்யப்பெற்ற பாலையநாட்டார் அறப்பணிகள் ட்ரஸ்ட் உறுப்பினர்கள் :

1. திரு. **சித. கரு. சோலைமலை அம்பலம்**, கோட்டையூர்
2. திரு. **சி. ஆ. பெரி. கணபதி அம்பலம்**, வேலங்குடி
3. திரு. **செ. பிரமன் அம்பலம்**, கண்டனூர்
4. திரு. **கு. வெ. வயிரவன் அம்பலம்**, பாலையூர்
5. திரு. **சித. காசிவிஸ்வநாதன் அம்பலம்**, கருவியப்பட்டி
6. திரு. **தே. ந. சி. ராம. சின்னக்கருப்பன் அம்பலம்**, வடகுடி
7. திரு. **பூ.ச. ராமநாதன் சேர்வை**, பள்ளத்தூர்
8. திரு. **சி.பெரி. சுப்பிரமணியன் அம்பலம்**, மணச்சை
9. திரு. **பழ. சோ. கருப்பையா அம்பலம்**, கொத்தரி
10. திரு. **உ. சுப்பையா**, தேவிரிப்பட்டி
11. திரு. **பி.ராம. சோலைமலை அம்பலம்**, கானாடுகாத்தான்
12. திரு. **ஆ. சோ. ராம. ராமசாமி சேர்வை**, நேமத்தான்பட்டி
13. திரு. **பெரி. சோலைமலை அம்பலம்**, பலவான்குடி
14. திரு. **ராம. செந்தில் வடிவேல் அம்பலம்**, காரைக்குடி
15. திரு **சுப. பழநிவேல் அம்பலம்**, கழநிவாசல்
16. திரு. **பெ. க. முத்துச்சாமி அம்பலம்**, சுட்டிநெல்லிபட்டி
17. திரு. **ம. சே. சுப்பிரமணியன் அம்பலம்**, முள்ளாங்காடு

# நன்றியுரை

இராமாயணத்து ஆரண்யத்தில் வந்த பொன்மான், இராமபிரானின் அவதாரநோக்கத்தை நிறைவு செய்ய ஏதுவாக அமைந்தது. பாலைக் காட்டில் வந்து நடம்புரிந்த பொன்முயல், நாட்டார்களின் குல தெய்வத்தைக் கண்டெடுக்கும் பொன்னான வாய்ப்பாக அமைந்தது. பிரணவத்தின் 'ஓம்' வடிவப் பொந்தில் காட்சியளித்த அருள்மிகு அன்னை, கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே வல்அம்போடு முன்தோன்றி மூத்தகுடியான நாட்டார்பெருமக்களின் குலமுதற் தெய்வமாய் இலங்கி அருள்வழங்கியது.

அருள்மிகு பெரியநாயகியம்மன் குடிகொண்டிலங்கும் வேலங்குடித் திருக்கோயிலுக்குக் குடநன்னீராட்டு விழா நடத்துவது தொடர்பாக, வடகுடியில் கூடிய நாட்டார் பெருமக்கள், விழா நடத்துவதற்காக ஊருக்கு ஒரு சார்பாளரைத் தெரிந்தெடுக்கத் தீர்மானித்தார்கள். அவ்வாறு தெரிந்தெடுக்கப்பெற்ற பதினாறு பேரும் ஒருங்குகூடி, தலைவர், துணைத் தலைவர், செயலாளர், துணைச் செயலாளர், பொருளாளர் ஆகிய பொறுப்புகளுக்கு எங்களைத் தேர்ந்தெடுத்தமைக்கு எங்களது மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

நாட்டுக் கூட்டத்தையும் குழுக் கூட்டங்களையும் ஒருங்கிணைத்து செயற்பாடுகளில் வழிகாட்டி, எங்களுக்கு அவ்வப்போது ஊக்கமும் உற்சாகமும் அளித்து உதவிய **நாட்டுச் சேர்வை திரு.ப.ராம.இராமச்சந்திரன் சேர்வை** அவர்களுக்கும் **நாட்டு அம்பலம் திரு. பா.பெரி. நல்லகருப்பன் அம்பலம்** அவர்களுக்கும் எங்கள் இதயமார்ந்த நன்றியைப் புலப்படுத்திக்கொள்கிறோம். விழாவைச் சிறப்போடும் பொலிவோடும் நடத்திட எங்களுக்குப் பூரண ஒத்துழைப்பு வழங்கிய விழாக் குழு உறுப்பினர்கள் அனைவருக்கும் எங்கள் மனமார்ந்த நன்றி.

குடநீராட்டு விழாவிற்கு உயிர்த் தேவையான நிதி திரட்டுவதற்கும், ஆலோசனை வழங்குவதற்கும் தெரிந்தெடுக்கப்பெற்ற சான்றோர் பெருமக்கள், எங்களுக்கு உற்ற துணையாகவும் வழிகாட்டியாகவும் செயல்பட்டு எங்களுக்குப் பேருதவியாக இருந்தார்கள். தேவையான நிதி என்று இலக்காக வைத்திருந்த தொகையையும் கடந்து அதிக அளவில் நிதி திரட்ட அவர்கள் காட்டிய ஆர்வத்தையும் உழைப்பையும் முயற்சியையும் நன்றியோடு நினைவுகூர்கிறோம்.

திருக்குட நீராட்டு விழாவிற்கு யாகசாலை அமைப்பது முதல், அனைத்துக் காரியங்களையும் மரபின் வண்ணம் நடைமுறைப்படுத்தி, வேள்விச் சாலை வழிபாடுகளைச் சிறப்புற நடத்தி, நன்னீராட்டு விழாவையும் சிறப்புற நடத்தித் தந்த **சிவஸ்ரீ சண்முகசுந்தரபட்டர்** (மதுரை அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவர் திருக்கோயில்) அவர்களுக்கும் அவருக்குத் துணைநின்ற சிவாச்சாரியப் பெருமக்கள் அனைவருக்கும் எங்களது மனமார்ந்த நன்றி. வேள்விச்சாலை வழிபாட்டில் தேவாரத் திருமுறைகளைப் பாடிச் சிறப்பித்த ஓதுவார் பெருமக்களுக்கும் எங்கள் நெஞ்சார்ந்த நன்றி.

திருக்கோயில் நீராட்டுவிழாவிற்கு முதல்நாளே வருகை தந்தருளிய '**கும்பாபிஷேக சக்கரவர்த்தி திருவாவடுதுறை ஆதீனம்** திருப்பெருந்திரு **முத்துக்குமார சுவாமித் தம்பிரான்** சுவாமிகள் அவர்கள், யாகசாலைக்கு எழுந்தருளி ஓர் அரிய கருத்துக்களஞ்சியமான ஆன்மீக உரையை மக்கள் மனம்கொள்ளுமாறு நிகழ்த்தி ஆசி வழங்கினார்கள். குடநீராட்டு நிகழ்ச்சிகளை மேற்பார்வையிட்டு வழிகாட்டிய வணக்கத்திற்குரிய ஆதீனகர்த்தர் அவர்களது பொன்னார் திருவடிகளில் எங்கள் நன்றியைச் சமர்ப்பித்துக்கொள்கிறோம்.

கோயில் வளாகத்தையும் சுற்றுவட்டாரத்தையும் ஒளிமயமாக்கி, கண்ணையும் கருத்தையும் கவரும் வண்ணம் ஒளிச்சித்திரங்களை நிறுவி அணிசெய்த பொன்னமராவதி ராக்காயி ஒலி, ஒளி அமைப்பாளர்களுக்கு எமது நன்றியும் பாராட்டும் உரித்தாகுக.

ஒரு குடநீராட்டு விழாவின் உயிர்மூச்சான பணி, அன்னதானம், கும்பாபிஷேகத்தின் விசேஷ அம்ஸம், மகேஸ்வர பூஜையே என்பர்.

*'மண்திணி ஞாலத்து மக்கட்கெல்லாம்*
*உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே'* என்று 'மணிமேகலை' போற்றும்... ஆயிரக்கணக்கான பக்தர்களுக்கு அன்னதானம் வழங்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்ட கோட்டையூர் நாட்டார் குழுவும் வேலங்குடி நாட்டார் குழுவும் மிகச் சிறப்பாக எந்த விதக் குறைக்கும் இடம் தராமல், பொறுப்போடு நிறைவேற்றித் தந்தார்கள். குடமுழுக்கு நாளன்று மக்களை அமைதியாக அமர்த்தி, பொறுமையாக உணவு படைத்து விருந்தோம்புவதற்கு, பாலைநாட்டின் அனைத்து ஊர்களிலிருந்தும் வந்திருந்த இளைய தொண்டர்களுக்கும் எங்கள் இதயமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம். பெரிய அளவிற்கு உணவு தயாரித்தாலும், சுவை குறையாமல் இனிய விருந்தாய் ஆக்கி வழங்கிய சமையற் கலைஞர்களுக்கும் எமது நன்றி...

குடமுழுக்கு நிகழ்ச்சியையும், கலை, இலக்கிய நிகழ்ச்சிகளையும் அழகு மிளிரும் வண்ணச் சுவரொட்டியாக அமைத்து ஊர்கள்தோறும் விளம்பரம் செய்து உதவிய கோட்டையூர் ஆன்மீகத் தொண்டர் திரு. A. பழநியப்பன் அம்பலம் அவர்களுக்கு எமது நன்றி உரித்தாகுக.

மக்கள் நடமாட்டத்தை ஒழுங்குபடுத்தப் பெருமளவில் உதவிய N.C.C. இளைஞர்களுக்கும் அவர்களை நெறிப்படுத்திய ஆன்மீகச் செம்மல் - அறப்பணிச் செல்வர் கர்னல் சிங் ரத்தோர் (Singh Rathor) அவர்களுக்கும் எமது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம். பெருந்திரளாகக் கூடிய மக்களுக்குப் பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்து உதவிய பள்ளத்தூர் நிலையக் காவல் துறையினர்க்கும், விழாவிற்கு வந்து திரும்பிய பொதுமக்களின் வசதிக்காகச் சிறப்புப் பேருந்துகளை இயக்கி உதவிய தமிழக அரசுப் போக்குவரத்துக் கழக நிர்வாகத்திற்கும். விழாக்காலங்களில் மின்தடை ஏற்படாவண்ணம் செயலாற்றி உதவிய மின்துறையினர்க்கும் எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

விழாபற்றிய செய்திகளை விரிவாகவும், தெளிவாகவும் தம் ஊடகங்கள் வழியே மக்களுக்குத் தெரிவித்துதவிய பத்திரிக்கை நண்பர்களுக்கும் தொலைக் காட்சி அன்பர்களுக்கும், பொதுவாக, நீராட்டுவிழாவை ஒரு மகோன்னத ஆன்மீகத் திருவிழாவாக, அசம்பாவிதம் ஏதும் இன்றி நடத்தி நிறைவேற்ற, பல்லாற்றானும் உதவிசெய்த அனைத்து மக்களுக்கும் எங்களது நெஞ்சார்ந்த நன்றியை நிறைவாகக் காணிக்கையாக்குகிறோம்.

——— ✻ விழாக்குழுவினர் ✻ ———

| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |
|---|---|---|
| **கயி. அருணாசலம் அம்பலம்** | **சுப. பழநியப்பன் அம்பலம்** | **சி.ஆ.பெரி. கணபதி அம்பலம்** |

| துணைத்தலைவர் | துணைச்செயலாளர் |
|---|---|
| **ஆ.சோ.ராம. ராமசாமி சேர்வை** | **பூ.ச. இராமநாதன் சேர்வை** |

# நல்ல உள்ளங்களுக்கு நன்றி சொல்வோம்....

பேராசிரியர் டாக்டர் **அய்க்கண்**

தலைவர், சிறப்பு மலர்க்குழு

## 1985...

20 ஆண்டுகளுக்கு முன்பு... நினைவுகள் 'ஃப்ளாஷ் - பேக்' காய் பின்னோக்கிச் செல்கின்றன... அப்போது அருள்மிகு பெரியநாயகியம்மன் கோயிலில் நடந்த திருக்குட நன்னீராட்டு விழா நிகழ்ச்சிகள், என் விழித்திரையில் நினைவுச் சித்திரங்களாக அணிவகுத்துச் செல்கின்றன.. அப்போதைய நம் சமுதாயத்தின் செல்வாக்கு மிக்க தூண்களாக இலங்கிய இனிய தொண்டர் **S.PR. ராமசாமி அம்பலம்,** காங்கிரஸ் பெருந்தலைவர் **AL.S. சுப்பையா அம்பலம்,** காரைக்குடி முன்னாள் நகர்மன்றத் தலைவர் **KR. சுப்பையா அம்பலம்,** அறப்பணிகள் டிரஸ்டி திரு. **சி. ஆ.பெரி. காசிவிசுவநாதன் அம்பலம்,** பாராளுமன்ற முன்னாள் உறுப்பினர் **P. சுப்பையா அம்பலம்** ... எனப் புகழ்பெற்ற சமுதாயப் பிதாமஹர்களோடு, எளியேனும் இணைந்து செயல்பட்ட நாட்களின் இனிமை என் இதயத்தில் மீண்டும் ஊற்றெடுக்கிறது...

சேதுக் கரையிலே வலுவான ராம தூதர்களோடு இணைந்து சில மணற்துளிகளை அணையில் சேர்த்த எளிய அணிலாக, நானும் விழா ஏற்பாடுகளிலே பங்கேற்கிறேன்... பெருந்தலைவர்களுக்குப் பின்னால், சிறிய வாலாகச் செயலாற்றிய பெருமை, இன்னும் என் நெஞ்சில் வலுவாகப் பதிந்துள்ளது...

விழாவின் முத்தாய்ப்பாக ஒரு மலர் வெளியிடும் பொறுப்பு எளியேனிடம்... சமுதாயத்திலேயே முதல்முறையாக ஒரு சிறப்பு மலர் உருவாக்கும் வாய்ப்பு... வழக்கமான வாழ்த்து, கட்டுரை, கவிதை, துதிப்பாடல்கள் அடங்கிய புத்தகமாக இல்லாமல், நம் சமுதாயத்தின் வரலாறும், பண்பாடும், கலாச்சாரமும் வெளியுலகத்திற்குப் புலப்படும் வகையிலான தொகுப்பாகவும் எதிர்காலத் தலைமுறைகளுக்குப் பயன்படும் ஓர் ஆவணமாகவும் அந்த மலர் நிலைத்திருக்கவேண்டும் என்ற குறிக்கோளோடும் முனைப்போடும் செயல்படுகிறோம்...

முடிவில் - நம் சமுதாயத்தினர் மட்டுமல்ல - மலர்கள் உருவாக்கும் அனுபவத்தில் துறைபோன சமுதாயத்தினரே பாராட்டிப் போற்றும் வகையில் அந்தச் சிறப்பு மலர் முகிழ்த்தது. அம்மனின் அருள்... அம்மனின் அருள் அத்துடன் அமையவில்லை. அந்த மலரின் மூலம் லாபமாகக் கிடைத்த ஒருசில நூறு ரூபாயை, ஏழை மாணவர்களின் படிப்புச் செலவுக்காகப் பிரித்து வழங்கிவிடலாம் என்று சிலர் கூறினார்கள். ஆனால், அந்தச் சிறுதொகையை மட்டும் கொடுத்துவிட்டுக் 'கையைக் கழுவிக் கொண்டுவிடாமல்' அதை மூலதனமாக வைத்துக் கணிசமான நன்கொடை திரட்டி, அதன் வட்டிப் பணத்தில் ஆண்டுதோறும் ஏழை மாணவர்களுக்கு உதவித் தொகை வழங்கலாம் என்று நான் யோசனை சொன்னேன்.

ஆனால் அனுபவமும் அறிவும் நிறைந்த சான்றோர் பெருமக்கள் சிலர் "வேண்டாம், அய்க்கண்!... சில நூறுகளாக இருக்கும் நிதி, சில ஆயிரங்களாகப் பெருகிவிட்டால், கருத்து வேறுபாடும் குழப்பங்களும் ஏற்பட்டு, செயற்பாடு முடங்கிப் போய்விடும்" என்று அன்போடு எச்சரித்தார்கள். எனினும் செயல்திறனும் முயற்சியும் வாய்ந்த செம்மல்கள் சிலர், எனக்குத் துணைநின்றனர். அந்தக் கூட்டத்திற்கு வந்திருந்த நல்லோர், சுமார் 30 நிமிடங்களுக்குள்ளே 35 ஆயிரம் ரூபாய் நன்கொடை அறிவித்தது. நம் சமுதாய வரலாற்றிலே ஓர் இனிய திருப்பம்.

இவ்வாறு தோற்றம்கொண்ட **"பாலையநாட்டு வல்லம்பர் கல்வி அறக்கட்டளை"** இன்று லட்சக்கணக்கான ரூபாய் கொண்ட நிதியாக வளர்ந்து, நூற்றுக்கணக்கான மாணவர்களுக்கு ஆண்டுதோறும் உதவித்தொகையும் பரிசுத்தொகையும் அளித்துவருகிறது. IAS, IPS முதலான படிப்புகளை மேற்கொள்ளும் நம் மாணவர்களுக்கு உதவி வழங்கிட ஒரு லட்சரூபாய் வைப்பு நிதியை ஏற்படுத்தியுள்ள காரைக்குடி முன்னாள் நகர்மன்றத் துணைத்தலைவர் திருமிகு **ஆ. காசி அம்பலம் - பாவலர்மணி ஆ. பழநி** இருவரது அருங்கொடையை நன்றியோடு நினைவுகூர்கிறேன்... இத்தகைய இனிய நிகழ்வுகளைக் கொண்டிருந்த 1985-ஆம் ஆண்டு திருக்குட நீராட்டு விழா, எனக்குள் ஓர் அழியாத வேதனைச் சுவட்டைப் பதித்திருக்கிறது என்பதையும் மறைக்க விரும்பவில்லை.

அந்த விழாவில் காரைக்குடி திரு. **M. மணிராஜன்** அவர்களது இசைக்கச்சேரியை இடம்பெறச் செய்யவேண்டும் என்பது எனது வேணவா... நம் சமுதாயத்தில் இன்றளவும் - "வாராது போல் வந்துதித்த" இசைமணி திரு. மணிராஜன். அந்தக் காலத்தில் கர்னாடக இசைத்துறையில் தன்னேரில்லாத புலி, **டைகர் வரதாச்சாரியார்**. அவர், தன் சிஷ்யராக, ஒரு பிராமணரல்லாதவரை - அதிலும் ஒரு வல்லம்பரை ஏற்றுக்கொண்டது, அந்த இசைமேதையின் பெருந்தன்மைக்குச் சான்று மட்டுமல்ல; நம் மணிராஜனின் இசைத்திறமைக்கும் சான்று எனக்கொள்ளலாம்... பின்னர் ஒரு வழக்கில் சாட்சி சொல்ல, நீதிமன்றக் கூண்டில் ஏறிய திரு மணிராஜன், தான் "டைகர் வரதாச்சாரியாரின் சிஷ்யன்" என்று சொன்னதும் நீதிபதி ஒரு நொடி நேரம் தன்னை மறந்து எழுந்துநின்றுவிட்டார் என்று சொல்வார்கள்... அத்தகைய பெருமைவாய்ந்த குருவின் சீடராகச் சீரும் சிறப்பும் பொங்க, வெளிநாடுகளுக்கும் சென்று புகழ்பெற்றார் நம் மணிராஜன்... திரைப்படம் தயாரிக்கவும் முனைந்து, தன் இனிய குரலில் முதன் முதலாகப் பின்னணிப் பாடல்களும் பதிவுசெய்திருந்தார். திருக்குறளின் முதல் அதிகாரமான கடவுள் வாழ்த்துப் பாடல்களை அவர் இசையமைத்துப் பாடியிருந்ததைக் கேட்டு நான் நெக்குருகிப்போனேன்.

அவர் இசையுலகில் மீண்டும் கொடிகட்டிப் பறப்பதற்கு ஏதுவாக, நம் விழாவில் அவரைப் பாடவைக்கவேண்டும் என்று எண்ணினேன். அவர் தனக்கென்று சன்மானம் வாங்கிக்கொள்ள மறுத்து, சென்னையிலிருந்து வரும் பக்கவாத்தியக்காரர்கள் செலவுக்கு மட்டும் எழுநூறு ரூபாய் கொடுக்கச் சொன்னார். நான் திரு.**காசி அம்பலம்** அவர்களை அணுகி என் விருப்பத்தை வெளியிட்டேன். என்னிடம் அளப்பரிய அன்பும் பரிவும் கொண்ட அவர்களுக்கும், இசைநிகழ்ச்சியை நிகழ்த்த விருப்பம்தான். ஆனால், விழாவின் வரவு - செலவுத் திட்டத்தை என்னிடம் காட்டினார் அவர். அந்த பட்ஜெட்டில் எழுநூறு ரூபாய் உபரியாகக் கிடைக்கவில்லை; எனவே, திரு. **மணிராஜன்** அவர்களுடைய இசைநிகழ்ச்சியை அந்த விழாவில் அமைக்கமுடியவில்லை; இந்த வேதனையான ரகசியம், எங்கள் மூன்றுபேருக்கு மட்டுமே தெரியும்...

ஓர் எழுநூறு ரூபாய் - ஆம், வெறும் எழுநூறு ரூபாய் - வழங்க முடியாத பட்ஜெட்டைக் கொண்டிருந்த அதே திருக்குடநீராட்டு விழாவில், இப்போது இசை, இலக்கிய, பொழுதுபோக்குகளுக்காக முப்பதாயிரம் ரூபாய்க்கு மேல் செலவிட, விழாக்குழுவினர் மகிழ்ச்சியோடு ஒப்புதல் அளித்திருக்கிறார்கள் என்றால் - இடைப்பட்ட 20 ஆண்டுகள், நம் சமுதாயத்தில் ஏற்படுத்தியிருக்கின்ற பொருளாதார வளர்ச்சியைக் கண்டு நான் பிரமித்துப்போய் நிற்கிறேன்...

இருபது ஆண்டுகட்கு முன்பு நிகழ்ந்த விழாவையும், இப்போதைய விழாவையும் காணும் பேறு பெற்றவர்களுக்கு, இந்தப் பிரம்மாண்டமான வளர்ச்சி புலப்படும்... விழாவின் ஒவ்வொரு கூறிலும், இந்த மகத்தான வளர்ச்சியின் பரிமாணத்தைப் புரிந்துகொள்ளலாம்... இந்த மாபெரும் வளர்ச்சிக்கு 3 காரணங்கள் அமையும் என்று நினைக்கிறேன். முதலாவதாக - இந்த 20 ஆண்டுக்காலத்தில், நம் சமுதாயத்தில் பலர், கல்வியிலும் தொழிலிலும் வணிகத்திலும் உயர்நிலையை எட்டிப் பிடித்திருக்கிறார்கள். 20 ஆண்டுகளுக்கு முன்பு, ஒவ்வொரு ஊரிலும் எத்தனை பட்டதாரிகள் என்று விழா மலரில் பட்டியல் போட்டுப் பெருமைப்பட்டுக் கொள்ளவேண்டியிருந்தது; ஆனால், இன்றோ வீட்டுக்கு வீடு பட்டதாரிகள், பொறியாளர்கள், ஆசிரியர்கள், அரசு அலுவலர்கள்...

வெளியூர்த் தொழிற்சாலைகளுக்குப் பிழைக்கச் சென்றவர்களின் அடுத்த தலைமுறை, தொழிலதிபர்களாக முன்னேறியிருக்கிறது... அந்தக் காலத்தில், நம் வீட்டுத் திருமண விழாக்களில் கூட, ஒன்றிரண்டு கார்களைத்தான் தரிசிக்கமுடியும்; ஆனால், இப்போது நம்வீட்டுக் குழந்தையின் காதுகுத்தும் விழாவுக்குக்கூட, நிறைய கார்கள் அணிவகுத்து நிற்கின்றன!... நம் இளைஞர்கள், வெளியூர் என்ன - அமெரிக்கா, சிங்கப்பூர், மலேயா, ஜெர்மனி, ஆஸ்திரேலியா.. என வெளிநாடுகளுக்குக் கணிசமான எண்ணிக்கையில் சென்று இருப்பதைக்கண்டு என் நெஞ்சம் மகிழ்ச்சி என்ற வானில் பெருமைச் சிறகுகளை விரித்து பூரிப்போடு பறந்து கொண்டிருக்கிறது...

இரண்டாவதாக - பிற சமுதாயத்தினரோடு பழகியதன் தாக்கமாக நம் சமுதாயத்தினரும் பொதுக்காரியங்களுக்கும் நற்பணிகளுக்கும் நன்கொடை கொடுக்க முன்வருகிறார்கள் (எல்லோருமா? - என்று நீங்கள் முணுமுணுப்பது என் காதில் விழுகிறது!... எல்லா நடைமுறைகளுக்கும் விதிவிலக்குகள் உண்டு என்பதை நினைவுபடுத்திக்கொள்ளுங்கள்!) உழைப்பினாலும் முயற்சியாலும் முன்னுக்கு வந்தவர்கள் எல்லாம், கணிசமாக வாரிவழங்கும் "நன்கொடைக் கலாச்சாரம்" நம்மிடையே வளர்ந்திருப்பதைக் கண்டு பெரிதும் மகிழ்ச்சியடைகிறேன்... இந்த வள்ளல் பெருமக்களை மனதிற்கொண்டுதான், நன்கொடை இலக்கை அதிக உயரத்தில் நிர்ணயித்துக்கொண்டோம்...

மூன்றாவதாக... இலக்கை நோக்கி முன்னேறும் எங்கள் நடையில், எந்தச் சோர்வுக்கும் தளர்வுக்கும் இடம் கொடுக்கவில்லை. எங்களுக்கென்று எந்த Personality-யும் Image-ம் Ego-வும் வைத்துக்கொள்ளாமல், வீடுவீடாக கால் வலிக்க ஏறி இறங்கி, கை வலிக்கக் கும்பிட்டு வணங்கி, வாய் வலிக்க விளக்கம் சொல்லி, ஊர்ஊராக அலைந்ததன் பயன்தான் - இலக்கையும் தாண்டிக் கடந்து நிற்கின்ற நன்கொடைத் தொகை...

'இந்தச் சாதனையிலே முழு திருப்தி அடைந்திருக்கிறீர்களா' என்று நீங்கள் கேட்பது எனக்குப் புரிகிறது. இல்லை : முழு திருப்தி இல்லைதான்!... படிப்பு, தொழில், வணிகம், உத்தியோகம் முதலியவற்றில் தனிப்பட்டவர்கள் உயர்ந்து நிற்கிறார்களே தவிர, ஒட்டுமொத்தமாக - சமுதாயத்தில் சிந்தனை, மனோபாவம், பண்பாடு, கலைத்திறன், நுண்கலை நுகர்வு, இலக்கிய ஈடுபாடு முதலியவற்றில் வளர்ச்சியோ, உயர்வோ, முன்னேற்றமோ காணப்படவில்லையே!

அமரர் மணிராஜனுடைய இடத்தைக் கடந்த முப்பதாண்டுகளில் யாருமே நிறைவு செய்யவில்லையே? நிறைவு செய்வது இருக்கட்டும் - அந்தப் பாதையிலேயே யாரும் அடியெடுத்துவைக்கவில்லையே?... இப்போதுதான். காரைக்குடி முன்னாள் சட்டப்பேரவை உறுப்பினர் திரு. **சுப. துரைராஜ்** அவர்களின் மகள் **இந்திரா பிரியதர்ஸினி**, கோவை (கானாடுகாத்தான்) திரு.**ராம. சிதம்பரம் அம்பலம்** அவர்களின் மகள் **மகாலெட்சுமி** ஆகிய இரு மொட்டுக்கள், சென்னை கலாக்ஷேத்ராவின் இசைத்துறைச் சோலையிலே அரும்பிக் கொண்டிருக்கின்றன...

கவிதைத் துறையிலே **பாவலர்மணி ஆ.பழநி** அவர்களின் பக்கத்தில் யாரையும் காணோம். தமிழகத்து அறிஞர் பெருமக்களால் பெரிதும் போற்றிப் பாராட்டப்பெறும் ஆ.பழநி அவர்களது 'அனிச்ச அடி' என்னும் காவியம் தமிழன்னைக்குக் கிடைத்த ஓர் அழகிய அணிகலன் ; சங்கப் பாடல்களில் தோய்ந்த தனியார்வத்தின் பயனாய், சங்கப் பாடல்களுக்கு இணையாகச் சொல்நயமும் கருத்தாழமும் சிவணிய பாக்களை யாக்கும் திறன் நிறைந்த பாவலர் அவர். அந்தக் கவியரசரை நம்மில் எத்தனை பேர் அறிந்திருக்கிறோம்? நாம் அவரைப் பாராட்டாததால், அவருடைய புகழ்ச்சிகரத்திலிருந்து இம்மியும் அவர் தாழ்ந்துவிடப்போவதில்லை: ஆனால் நாம், பாராட்டிப் பெருமைகொள்ள வேண்டிய ஒன்றை இழந்து நிற்கிறோம்...

ஆன்மீகத் துதிப்பாடல்களுக்கு ஒரேயொருவர் : நம் சண்முகக் கவிமணி **சோலை. இராமச்சந்திரன்**தான் தனித்துநிற்கிறார். சமுதாயச் சிந்தனையும் முற்போக்குக் கருத்துக்களும் செறிந்த கட்டுரைகள் எழுத, பேராசிரியர் **மு. வைரவன்**, எழுத்தாளர் - கட்டடக் கலைஞர் **திரு. சா. நடராசன்**, **இராம. சின்னச்சாமி** முதலான வெகு சிலரே... (பள்ளிப்பருவத்தில், என்னோடு கையெழுத்துப் பத்திரிக்கை நடத்திய இலக்கிய வாசனை, இப்போதுதான் நண்பர் சின்னச்சாமியைத் தாக்கத் தொடங்கியிருக்கிறது... 'மிஸ்டு' காலத்தை ஈடுசெய்ய மும்முரமாக எழுத ஆரம்பித்துவிட்டார்!...) பெண்கள் சளைத்தவர்களா, என்ன? சமுதாயத்தின் முன்னோடி எழுத்தாளராக **திருமதி காந்திமதி கந்தப்பன்** இலங்க, **திருமதி வைரஜோதி நாராயணன்** தொடர்கிறார்... ஒரு சிறந்த சிறுகதை எழுத்தாளராகப் பரிணமித்துக்கொண்டிருக்கிறார், செல்வி **சோ. சண்முகவள்ளி...**

இப்படியே பட்டியலிட்டாலும், இரண்டு கைவிரல்களைத் தாண்டவில்லையே?... நம்மைவிட ஜனத்தொகை குறைவான சமுதாயங்களிலே, இப்படி படைப்பாளிகளை எண்ணத் தொடங்கினால் எத்தனை கை வேண்டும்? - சற்று சிந்தித்துப்பாருங்கள்!...

மற்ற சமுதாயத்தினரைவிட, நாம் மஞ்சுவிரட்டு, மாட்டுப்பந்தயம், கரகாட்டம் முதலானவற்றை நடத்துவதில், முன்னிலையில் - 'முன்னேறிக்கொண்டே' செல்கிறோம்...

சிறிய அளவில் நடந்த மஞ்சுவிரட்டுகள், மாட்டுப்பந்தயங்கள் எல்லாம், இப்போது பெரும் பொருட்செலவில், பெருமையாக வண்ண போஸ்டர் அடித்து விளம்பரப்படுத்தி, விருந்துவைத்து நடத்துவதில், முன்னேறியிருக்கிறோம்... (மஞ்சுவிரட்டிலே 'வடமாடு' என்ற ஒரு புதிய வகையை 'ஆராய்ச்சி' செய்து கண்டுபிடித்திருக்கிறார்கள்!) கரகாட்டத்தின் ஆபாசம் போதாது என்று இப்போது 'கலக்கல்' என்று ஒன்றை நடத்துகிறார்கள். இவையெல்லாம் புனிதமான கோயில் விழாக்களில் தெய்வங்களின் முன்னிலையில்... கடவுள்களின் சந்நிதிகளில் ...

அருள்மிகு பெரியநாயகியம்மன் கோயில் திருக்குட நன்னீராட்டுவிழாவுக்கு உந்து சக்தியாக விளங்கியவர் நம் கல்வி வள்ளல் - முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் திருமிகு **P. சுப்பையா அம்பலம்** அவர்கள்தான். மூன்று ஆண்டுகளுக்கு முன்பிருந்தே, திருக்குட நீராட்டுவிழா நடத்த வேண்டும் என்று வலியுறுத்திக் கொண்டேயிருந்தார்கள். தானே முன்வந்து, இந்த விழாவுக்கு ஒரு லட்ச ரூபாயும் அடுத்த குடநீராட்டு விழாவுக்கு இன்னொரு லட்ச ரூபாயும் நன்கொடையாக அவர் அறிவித்தது, நாட்டார்களுக்கு உத்வேகம் அளித்தது. (இன்னொரு லட்சரூபாய் அடுத்த விழாவின்போது 4 லட்சரூபாயாக வளர்ந்திருக்கும் என்பது K.V.P. கணக்கு) யாகசாலைக்கான செலவில் பெரும்பகுதியைத் தொழிலதிபர் - சமுதாய வள்ளல் - திரு. **கரு. கிருஷ்ணன்** ஏற்க முன்வந்தது விழாக் குழுவினர்க்கு உற்சாகமூட்டியது. மேலும் திரு. **சோ. கரு. துரைராஜ்** அவர்கள், பலரிடமும் பேசித் தூண்டிக் கணிசமான நன்கொடை பெறக் காரணமாக இருந்தது குறிப்பிடத்தக்கது.

சென்னைக்கு நாங்கள் சென்றபோது எங்களை அன்போடு வரவேற்று உபசரித்து, தனிவீட்டில் எங்களைத் தங்கவைத்து உணவு வழங்கி விருந்தோம்பினார் ஆன்மீக வள்ளல் மணச்சை திரு. **முரு. சோலைமலை** அவர்கள். அவரும் திரு. **சோலை. ராமச்சந்திரன்** அவர்களும், எங்களுக்காக தம் வேலையை ஒதுக்கிவைத்துவிட்டு, மூன்றுநாட்கள் கார்களில் எங்களை அழைத்துக்கொண்டு நகர்முழுதும் சுற்றி நன்கொடை வசூலித்துக்கொடுத்தார்கள். அதைப்போல் கோயம்புத்தூருக்கு நாங்கள் சென்றபோது, சமுதாய வள்ளல் கருவியப்பட்டி திரு. **N. சேதுராமன் அம்பலம்** அவர்கள், எங்களை வரவேற்று அன்போடு உபசரித்து, விருந்தளித்து, நகர்முழுவதும் கூட்டிச்சென்று கணிசமான நன்கொடைபெற உதவினார்கள்.

"நீங்கள் பெங்களூர் வந்து அலைய வேண்டாம்: நானே நம்மவர்களிடம் நன்கொடை வசூலித்து அனுப்பிவிடுகிறேன்" என்று பெருந்தன்மையோடு அறிவித்து, எங்கள் அலைச்சலைக் குறைத்து, நிறைவான தொகையைத் திரட்டி அனுப்பிவைத்த தொழிலதிபர், கானாடுகாத்தான் திரு. **P. மீனாட்சிசுந்தரம்** அவர்களின் பேருதவி, நம் நெஞ்சில் நிலைத்த நினைவாகப் பதிந்துள்ளது.

பொதுவாக, திருப்பணிக்கு என்று நாங்கள் நேரில் சென்று கேட்டவர்கள் எல்லோரும், தாராளமாக நன்கொடை வழங்கினார்கள். மனமுவந்து கொடுத்தார்கள். நாங்கள் எதிர்பார்த்தபடியே கொடுத்தவர்களுமுண்டு. எதிர்பார்த்ததற்கு மேலேயே கொடுத்த பெருங்குணத்தவர்களும் உண்டு. எதிர்பாராமலே, தெருவிலே, ரயில்நிலையத்திலே சந்தித்துக் கொடுத்தவர்களும் உண்டு. வீட்டுக்கு அழைத்து விருந்தும் நன்கொடையும் வழங்கியவர்களும் உண்டு. வீடு தேடி வந்து கொடுத்த நல்லுள்ளத்தோரும் உண்டு. இதுவரை எந்த நன்கொடையும் தராதவர்கள்கூட இத்திருப்பணிக்கு முன்வந்து கொடுத்தார்கள்.

'எல்லோரும் கொடுத்தார்களா?' என்று கேட்காதீர்கள்... பணம் இருக்கிற எல்லோராலும் நன்கொடை கொடுக்க முடியாது- என்ன புரியவில்லையா?... கொடுப்பதற்கு, கொடுத்து வைத்திருக்க வேண்டும்... எல்லோராலும் கொடுக்க முடியாது... திருப்பத்தூர் வள்ளல் ஆறுமுகம் பிள்ளை அவர்கள் அடிக்கடி என்னிடம் சொல்வார். "அய்க்கண்! பணக்காரர்கள் எல்லோரும் வள்ளல்கள் ஆகிவிடமுடியாது. பணம் வைத்திருப் பவர்களெல்லாம் கொடுத்துவிட முடியாது. கொடுப்பதற்கு ஏற்கனவே புண்ணியம் செய்திருக்க வேண்டும். புண்ணியம் செய்தவர்களுக்குத்தான் கொடுக்கின்ற எண்ணம் வரும்." என்பார்.

ஆகவே நாங்கள் பணக்காரர்களைப் பார்த்துவிட்டு வெறும் கையோடு திரும்பும்போது வேதனைப்படவில்லை. புண்ணிய சீலர்களைப் பார்த்து நிறைந்த மனத்தோடு மகிழ்ச்சியடைந்தோம்.

இந்தத் திருப்பணியில் பங்கெடுத்துக்கொண்ட பல வள்ளல்களின் பெயர்களையும் நான் இங்கே குறிப்பிடவில்லை. எனினும் இப்பணியில் என் நெஞ்சை நெகிழ்வித்த ஒரேயொரு நிகழ்ச்சியை மட்டும் பெயர் குறித்துப் பதிவு செய்ய விரும்புகிறேன்.

அருள்மிகு பெரியநாயகியம்மன் கோயில் திருக்குட நன்னீராட்டு விழாவுக்கு நன்கொடை திரட்டுவதையறிந்து, காரைக்குடியில் சொற்ப சம்பளத்தில் தற்காலிகப் பணியாற்றும் **அழகம்மை** என்னும் பெண் (அமரர் பெரி. மெய்யப்பன் அம்பலம் அவர்களின் இளைய மகள்) என் வீடு தேடி வந்து தன் பங்காக ரூ. 51 கொடுத்ததைக் கண்டு, மெய்சிலிர்த்துப் போனேன். அவர் கொடுத்த பணத்தின் 'நாணய' மதிப்பு 51 ரூபாய்தான். ஆனால் அதன் 'தார்மீக' மதிப்பு 51 லட்சங்களுக்கு மேல்... என்பதை உணர்ந்தேன். பெரியபுராணத்தில் திருநின்ற ஊரில் ஏழை பக்தர் பூசலார் நாயனார், மனத்திற்குள் கட்டிய கோயில் என் நினைவுக்கு வந்தது. பொருள் வசதி ஏதும் இல்லாத அந்த நாயனார், சிவபெருமானுக்கு ஒரு கோயில் கட்ட வேண்டும் என்று நினைத்து, மனதிற்குள்ளேயே, கோபுரம், கருவறை, பிரகாரம், சுற்றுமதில் என்று கற்பனையாகக் கட்டி முடித்து, கும்பாபிஷேக நாளையும் குறித்துவிட்டார். நாட்டையாண்ட பல்லவ மன்னவன், தன் தலைநகர் காஞ்சியில் கற்கோயில் கட்டி அதே நாளில் கும்பாபிஷேகம் குறித்தபோது சிவபெருமான் "நான் பூசலார் கட்டிய கோயிலுக்குப் போகவேண்டும். நீ வேறொரு நாள் குறித்துக்கொள்" என்று மன்னனிடம் சொல்லி, பக்தனுடைய புனித உள்ளத்திற்கு முதலிடம் அளித்த வரலாறு என் நினைவுக்கு வந்தது.

இப்படிப்பட்ட எத்தனையோ தூய அன்புள்ளங்களின் எண்ண வலிமையால், திருப்பணி சிறப்பாக நடைபெற்றது என்று உணர்கிறேன். இருபதாண்டுகளுக்கு முன் நடந்த விழாவில் அனுபவமும் ஆற்றலும் செறியச் செயல்பட்ட நாட்டுச் சேர்வை திரு. **ப. ராம. இராமச்சந்திரன் சேர்வை** அவர்கள், எங்களுக்கு அளித்த உற்சாகமும் ஊக்கமும் எங்கள் பணிக்கு உரமாக அமைந்தன. "தயங்காமல் செயல்படுங்கள். நீங்கள் சரியாகவே செயல்படுவீர்கள் என்ற நம்பிக்கை எனக்குண்டு. தொடர்ந்து செயலாற்றுங்கள்" என்று அடிக்கடி அவர் கூறிய பாராட்டுச் சொற்கள், எங்கள் உள்ளங்களுக்குப் புது ரத்தம் பாய்ச்சிய வலுவூட்டியது.

விழாக் குழுவின் தலைவர் திரு. **கயி. அருணாசலம் அம்பலம்**, கள்ளங்கபடமற்ற கர்ம வீரர். அவர் அணியும் கதர்ச் சட்டையைவிட, வெள்ளை மனத்தவர். தூய உள்ளத்தவர். தம் வயதையும் பொருட்படுத்தாது எங்களோடு சுறுசுறுப்பாய்ச் செயலாற்றுபவர். என்னிடம் தனிப்பட்ட அன்பும் பாசமும் கொண்டவர். 'சிறியன சிந்தியாதான்' என்று கம்பன் காட்டிய வாலி போல, 'உள்ளவதெல்லாம் உயர்வு உள்ளல்' என்ற வாழ்வு நெறியாளர். 'மாப்பிளே!' என்று, தன் வீட்டுத் தொலைபேசியில் அவர் கூப்பிடுவது, என் வீட்டுக்கு நேரடியாகக் கேட்கும்!. வெளியூர் செல்லும்போதெல்லாம், அவரைப் பத்திரமாக வீடு கொண்டுவந்து சேர்க்க வேண்டுமே என்ற கவலை எங்கள் உள்ளத்திற்குள் எழுந்து நிற்கும். தன் முதுமை, அறிவு அனுபவம் எல்லாவற்றையும் மறந்து எங்கள் நிலைக்கு இறங்கி வந்து பழகும் எளிமையான உன்னத மனிதர் அவர்.

துணைத் தலைவர் திரு. **ஆ.சோ. ராமசாமி அம்பலம்** நயம்படப் பேசிச் செயலாற்றும் திறனாளர். 'யாரொடும் பகை கொள்ளலன் என்ற பின், போரொடுங்கும் புகழ் ஒடுங்காது' என்ற கம்பனின் இலக்கணத்திற்கு இலக்கியமாக வாழ்பவர்... யார் மனத்தையும் புண்படுத்தாது செயல்படும் நனிநாகரிகம் நிறைந்தவர். தமது இனிய பேச்சுக்களால், எங்களுடைய பயணக் களைப்பையும் அலைச்சல் தளர்வையும் நீக்கி உற்சாகமடையச் செய்வார்.

செயலாளர் திரு. **சுப. பழநியப்பன்**, நம் பாலைய நாட்டிற்குக் கிடைத்த அற்புதக் கருவூலம் என்பேன். பொதுக் காரியங்களில் ஈடுபடும்போது எதிர்ப்படும் கருத்து வேறுபாடுகளை அமைதியாக எதிர்கொண்டு செயலின் இருபக்கங்களையும் பதற்றமின்றி ஆய்வுசெய்து, சோம்பலின்றி உறுதியோடு காரியம் செய்து முடிக்கும் திறமை இவரிடம் மிகுந்திருப்பது கண்டு மகிழ்கிறேன். வருங்காலத்தில், எந்தப் பொதுப் பணியையும், இந்தப் பொதுப்பணி காண்ட்ராக்டரிடம் ஒப்படைக்கலாம் என்பதற்கு, இவ்விழாப் பணி ஒரு வலுவான சான்று.

எங்களுடன் தோளோடு தோள் நின்று பணியாற்றிய என் தோழர் **இராம. சின்னச்சாமி** ஒரு வங்கியின் மண்டல அலுவலரின் ஸ்தானத்தில் ஓய்வுபெற்றவர். இப்போதையப் பணி ஒவ்வொன்றையுமே, வங்கி மேலாளருக்குரிய துல்லியத்துடனும் ஒழுங்குடனும் திட்டமிட்டு மேற்கொள்கிறவர். பணியிலும் பேச்சிலும் கண்டிப்பாக இருந்தாலும், நண்பர்களிடம் மனிதநேயம் செறிந்த அன்பும் பாசமும் காட்டும் மாண்புறு பண்பாளர் அவர். பால் நினைந்து ஊட்டும் தாய்போல், எங்கள் தேவையை உணர்ந்து உதவும் கருணை உள்ளம் பெற்றவர்.

விழாக் குழுவில் உள்ள எல்லா உறுப்பினர்களுமே, பொறுப்போடும் கடமை உணர்வோடும் எங்களுக்கு முழுமையான ஒத்துழைப்பு வழங்கியருளினார்கள்.

பத்திரிக்கை நிருபர்களும் தொலைக்காட்சியாளர்களும் எங்களுக்கு பூரண ஆதரவு நல்கிப் பொதுமக்களிடையே விழாபற்றிய செய்திகளை வெளியிட்டு உதவினார்கள்.

மிகப்பெரும் விழாக்களுக்கு அமைவதுபோல், நம் திருக்குட நீராட்டு விழாவுக்கும் விறு விறுப்பான நேர்முகவர்ணனை செய்த சண்முகக் கவிமணி **சோலை. இராமச்சந்திரன்**, 'சொல்லின் செல்வன்' **ஜெயங்கொண்டான்** ஆகியோரும் பாராட்டுக்குரியவர்களே.

கேரளத்து முழவுக் கலைஞர்கள் பங்கேற்ற **'செண்டை'** இசை, விழாவுக்கு ஒரு தெய்வீக சாந்நித்யத்தை ஏற்படுத்தித் தந்தது.

திருக்குட நீராட்டு விழாவின் எல்லா ஏற்பாடுகளையும் அங்கீகரித்து ஆசிவழங்குவதுபோல், கருட பகவான் மும்முறை வருகைதந்து காட்சியருளியது, எங்களது முயற்சிக்கும் செயலுக்கும் வழங்கிய வரமாகத் தோன்றியது. இத்தனை உழைப்புக்கும் செயற்பாட்டுக்கும் அப்பால் - எங்களுடைய மலர்க் குழுவின் பணி தொடங்கியபோது - நாங்கள் தனியே திகைத்துத் தடுமாறிப் போய் நின்றோம். இத்தனை நாட்களும் இணைந்து நெருங்கி நின்றவர்கள் எல்லாம் விலகிப் போய்விட்டதைப் போல் உணர்ந்து திணறினோம்.

பாலையநாட்டின் சிறப்பை வெளிக்கொணரும் வகையில் மலர் தொடுக்க, ஏறத்தாழ ஐம்பதாயிரம் ரூபாய் தேவைப்படுமே?

ஏற்கனவே திருப்பணி நன்கொடை என்று கேட்டுப்போய் நின்றவர்களிடம்தானே, மறுபடியும் மலருக்கு விளம்பர நன்கொடை என்று போய் நிற்கவேண்டும்? ஒரு பத்து, இருபது நாட்களுக்குள் மீண்டும் எந்த முகத்தை வைத்துக்கொண்டு அதே நல்ல உள்ளங்களிடம் போய் நிற்பது?

பொங்கிவந்த சிந்தனைகளையெல்லாம் ஒருபுறம் ஒதுக்கிவைத்துவிட்டு, மீண்டும் களத்தில் இறங்கினோம்.

மீண்டும் அதே முயற்சி. அதே அலைச்சல்... முன்பு, வீடுவீடாக... இப்போது கடைகடையாக... காரைக்குடியில் S.M.S.V. மேநிலைப் பள்ளியின் தலைமையாசிரியராகப் பணியாற்றிப் புகழும் செல்வாக்கும் பெற்றிருக்கும் திரு. சுப.பழநிவேலு அவர்களால், பல விளம்பரங்கள் கிடைத்தன. தன்நிறைவோடு மலரை உருவாக்கிவிடலாம் என்ற உறுதி மனதிற்குள் முளைத்து வளர்ந்தது.

'முயற்சி தன் மெய்வருத்தக் கூலி தரும்' என்றார் வள்ளுவர்: அந்த நம்பிக்கையை நெஞ்சில் அழுந்தப் பதித்துக்கொண்டு செயலில் ஈடுபட்டோம்...
முயற்சியில் முகிழ்த்த மலர்க் குழந்தையை உங்கள் பாசக் கரங்களில் தவழவிடுகிறோம்...

*'யாழொடும் கொள்ளா: பொழுதொடும் புணரா:*
*பொருளறிவாரா: ஆயினும் தந்தையர்க்கு*
*அருள்வந்தனவாற் புதல்வர்தம் மழலை'* (புறநானூறு : 92)

என்றார் அவ்வையார்...
அவ்வாறே எமது எளிய படைப்பையும் ஏற்க வேண்டுகிறோம்...





பாலைய நாட்டு மக்கள் பண்போடும் உயர்ந்திடவே
வேலைப்பாடமைந்த சிற்பம் விண்தொடும் கோபுரமே!



ஏழரின் திருவிழாவில் எண்ணரிய அன்பர் காண
ஏழ்வண்ணம் திகழ்தேரில் எழுந்தருளும் எங்கள் அன்னை.



அழகிய வேலங்குடி நகரினில் மையமாய்
எழிலொடு கோபுரங்கள் இலங்கிடும் தோற்றம்.




பன்னெடுங் காலமாகப் பாலைய நாட்டார் உள்ளம்
எண்ணிய வண்ணம் இன்று எழுந்ததே அலுவலகம்.



இருள் விரட்டும் மின்னொளியாய்த் தெய்வக் காட்சி
இருவிழியும் கவர்ந்து மின்னி ஒளிரும் மாட்சி.



அண்டை மாநிலம் கேரளத்தின் இளம் கலைஞர்
செண்டை எனும் இசையால் செவிகளையே நிறைக்கின்றார்.



திருக்கோயில் கோபுரங்கள் நன்னீராட்ட
அருட்குடங்கள் வேள்விக்கே அமைத்த சாலை.



திருமகள் உறையும் செய்ய தாமரை போன்ற
பெருமைசால் பீடத்தில் பிறங்கிடும் திருக்குடங்கள்.



சிலம்பிசைச் செல்வி சரளாவின் கலைக் கோயில்
நலங்கொண்ட நங்கையர் நல்கிடும் கலைக்காட்சி.



நகைச்சுவைத் தென்றல் முனைவர் ஞானசம்பந்தன்
தகவுடன் நிகழ்த்திய தமிழ்ச்சுவைப் பட்டிமன்றம்.



திருவாவடுதுறை ஆதீன முத்துக்குமாரசாமித் தம்பிரான்
அருள் தவழப் பூசனையில் ஆசியுரை வழங்குகிறார்.



பாலையநாட்டின் பண்புநிறை தலைமக்கள்
கோலமலர்த் தட்டேந்திக் கோயில்வலம் வருகின்றார்.



ஏஜமானர்' கிருஷ்ணன் – சோலைமுத்து இணையர்க்கு
மா கருணைத் தம்பிரானார் வாழ்த்துரைக்கும் அருட்காட்சி.



வானகத்தில் மூன்றுமுறை மா கருடன் வருகை தர,
ஞானமுனி முன்னிலையில் நன்னீரே பொழிதல் காணீர்!



பன்னரிய நலம் பயக்கும் குடமுழுக்குக் கண்டவர்க்கு
அன்னதானம் மனம் மகிழ அளிக்கின்றார் இளைய தொண்டர்.



நாட்டுச் சேர்வை இராமச்சந்திரன், நல் 'எஜமானர்' கிருஷ்ணன்
நாடுபுகழ் பரிவட்டம் நல்கப்பெறும் காட்சி.

உ

சிவ சிவ

"தன் கடன் அடியேனையும் தாங்குதல்
என் கடன் பணிசெய்து கிடப்பதே"

தவத்திரு
குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்

# வாழ்த்துரை

வேலங்குடியில் வீற்று அருள்பாலிக்கும் பாலையநாட்டு அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவில் திருக்குடமுழுக்கு விழாக் காண்பது குறித்து மட்டற்ற மகிழ்ச்சி.

குடமுழுக்கு விழாவின் மணி மகுடமாக அம்மையின் பெயரால் ஆன்மிக மலர் மலர்ந்து மணம் கமழ்வது மட்டற்ற மகிழ்வளிக்கிறது. தேனீக்கள் தேனைச் சேகரித்து உறைப்பதைப் போல மலரை உருவாக்கப் பாடுபடும் டாக்டர் அய்க்கண் தலைமையிலான குழுவினருக்கு நல்வாழ்த்துக்கள்! பாராட்டுக்கள்!!

அம்மையின் அருளால் குடமுழுக்கு விழா சீரும் சிறப்புமாய் நிகழ, இறையருளை எண்ணிப் போற்றி வாழ்த்துகின்றோம். அனைவருக்கும் இனிய நல்வாழ்த்துக்கள்.

என்றும் வேண்டும் இன்ப அன்பு.

பொன்னம்பலம்

திரு டாக்டர் அய்க்கண் அவர்கள்
12, கைலாச நகர் 3ஆம் தெரு
காரைக்குடி - 630 002.

★ திருக்குறளே நமது பொதுமறை ★ திருமுறைகளே நமது மறை ★

**KOVILOOR MADALAYAM**
**Koviloor - 630 307**
(Via - Managiri)
Sivagangai District.



# பல்லாண்டு வாழ்க

பண்புமிக்கார் பலர்வாழும் பாலையநன் னாட்டைப்
பாதுகாத்து வருகின்ற பழம்பெருமை மிக்காள்
கண்போல அடியவரைக் காக்கின்ற செல்வி
கவின்பெரிய நாயகிக்குத் திருக்குடநீ ராட்டு
விண்போற்றக் காண்கின்றார் வியனமரர் கூடி
வியத்தகுநல் மலர்சூடி வேண்டுகின்ற வேளை
பண்ணார்ந்த தமிழ்பாடிப் பாதமலர் போற்றிப்
பரவுகின்ற அடியவர்கள் பல்லாண்டு வாழ்க.

பேரமுதச் சொல்லுடையாள் பீடுடைய செல்வி
பித்தனவன் இடமுறையும் பேரழகி ஆன
பேர்பெரிய நாயகியாள் பெற்றெடுத்த தாய்போல்
பேணிவரும் அருளுடையாள் பெருங்கருணைச் செல்வி
தாரணிந்து பொலிகின்ற தங்கமயில் ஆவாள்
தன்கோவில் வருவாரை வாவென்று சொல்லி
ஊரறிய நாட்டார்கள் உடன்பணியும் வேளை
உவந்துலகம் காக்கவென உருவான தேவி

மங்கலையின் பொற்பாதம் மறவாத நீங்கள்
மதிபெற்று நிதிபெற்று மகிழ்வுடனே வாழ்க
திங்களணி கொற்றவாள் ஈசர்திரு நெல்லை
திகழ்குருவாம் ஆண்டவரின் திருவருளால் வாழ்க
பொங்குபுனல் செழித்துலகில் செல்வவளம் சேர்க
போற்றுபல நல்லறங்கள் நாளுமினி வாழ்க
செங்கமலத் தாள்பெரிய நாயகியின் ஆசி
சிறப்போடு கிடைக்கட்டும் சீருடனே வாழ்க.

- சீர் வளர் சீர் **நாச்சியப்ப ஞான தேசிகர்**
கோவிலூர் ஆதீனம்.



His Holiness Thirukaiyilaya Parambarai
**23rd Guru Maha Sannidhanam Sri-La-Sri**
**Sivaprakasa Desika Paramacharya Swamigal**
**Aadheenakarthar, Thiruvavaduthurai Aadheenam**
**THIRUVAVADUTHURAI - 609 803.**

*"நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க*
*இமைப்பொழுதும் என்நெஞ்சின் நீங்காதான் தாள் வாழ்க*
*கோகழி ஆண்ட குருமணிதன்தாள் வாழ்க."*

# அருள் வாழ்த்துரை

வேலங்குடி, பாலையநாட்டு அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோயில் திருக்குட நீராட்டு விழா 10-6-2005 அன்று நடைபெற இருப்பது மகிழ்ச்சிக்குரியது. இவ்விழாவையொட்டி குடமுழுக்கு விழா மலரும் வெளியிடயிருப்பது பாராட்டத்தக்கது.

சக்தி வழிபாடு சங்க காலம் தொட்டு நடைபெற்று வருகிறது. சக்தியை கொற்றவையாக, காளியாக, உமையாக இலக்கியங்கள் போற்றி வருகின்றது. உமையை பெரியநாயகி அம்மன், அங்காளம்மன் என்னும் பெயர்களால் வழங்குகிறார்கள். மேலும் அவ் அம்மையைத் தங்கள் குலதெய்வமாக மக்களில் பலர் கொண்டாடி வருகின்றனர். அங்காளம்மன் என்பது எல்லாம் வல்ல சிவபெருமானின் அங்கத்தை ஆளும் அம்மன் என்று பொருள் கூறுவர். பெரியநாயகி என்பது பெருமையுடைய நாயகி என்னும் பொருளிலும் வழங்கி வருகிறது. பல தலங்களில் சிவராத்திரியன்று சிவபெருமானுக்குச் சிறப்பு வழிபாடு நடைபெறுவதுபோல் அங்காளம்மன், பெரியநாயகி அம்மன் கோயில்களிலும் சிறப்பு வழிபாடு நடைபெறுகின்றன.

அம்பிகையைப் போற்றும் சமயம் சாக்தம் ஆகும். அறுவகைச் சமயங்களில் சாக்தம் ஒன்றாகும். அபிராமி பட்டர், கவிகாளமேகம், காளிதாசர் முதலான அருளாளர்கள் அம்பிகையின் அருளைப்பெற்ற அருட் கவிஞர்கள் ஆவார். சமயக் குரவர்களில் ஒருவராகிய திருஞானசம்பந்தப் பெருமானுக்கு அம்பிகை பொற்கிண்ணத்தில் ஞானப்பால் தந்து அருளிய சிறப்பைப் பெரியபுராணம் எடுத்துரைக்கின்றது. திருவிளையாடல் புராணமும் **கவுணியர்க்குப் பால்சுரந்த கலசம் போற்றி** என்று அம்பிகையைப் போற்றுகிறது.

*செறிதரு முயிர்தொறுந் திகழ்ந்து மன்னிய*
*மறுவறு மரனிட மரபின் மேவிய*
*அறுவகை நெறிகளும் பிறவும் ஆக்கிய*
*இறைவிதன் மலரடி யிறைஞ்சி யேத்துவாம்.*

என்று கந்தபுராணம் குறிப்பிடுவது போன்று இறைவியின் சிறப்பினை உணர்ந்து அருள்மிகு பெரியநாயகி அம்மன் திருக்கோயிலைத் திருப்பணி செய்து, குடமுழுக்கு விழா நடத்தும் அருட்செல்வர்கள் யாவரும் நலம் யாவும் பெற்றுச் சிறக்கவும் குடமுழுக்கு விழா மலர் திருநெறிய மணம் வீச நமது வழிபடு கடவுளாகிய அருள்மிகு ஞானப்பெருங்கூத்தன் திருவடி மலர்களைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

**பெறுநர் :** திரு டாக்டர் அய்க்கண் அவர்கள்
12, கைலாச நகர் 3-வது தெரு
காரைக்குடி - 630 002.

கயிலைமாமுனிவர் வித்துவான்

**காந்தலிங்க இராமசாமியடிகள்**

பேரூராதீனம், பேரூர் (அஞ்சல்)

கோயமுத்தூர் - 641 010, தமிழ்நாடு.




சாந்தலிங்கர் தாண் மலர் வாழ்க


**பெறுதல் :**

பேராசிரியர் டாக்டர் அய்க்கண்,

12, கைலாச நகர் 3-ஆம் தெரு

காரைக்குடி - 630 002.


## அருள்மிகு சாந்தலிங்கப் பெருமான் இன்னருள் பெருகுக

## வாழ்த்து

*வேலங்குடியில் எழுந்தருளி வேண்டும் வரங்கள் தரும் அன்னை*
*ஆலம் உண்ட பெருமானின் அருளை முகந்து தரும் தெய்வம்*
*சீலத்தவர் போற்றிடும் பெரியநாயகி தன்திருக்கோயில்*
*சாலச் சிறந்த திருக்குட நீராட்டும் சான்றோர் பணி வாழி.*

*மனமாசறுத்து அருட்காட்சி வழங்கும் பெரியநாயகியைத்*
*தினமும் தமிழால் போற்றும் அன்பர் செயல்கள் ஓங்கும் திருவுடனே*
*மனதுள் மலர்ச்சி பெற அருள்வாள் நாளும் தமிழால் மலருடனே*
*புனலும் சொரிந்து போற்றும் முறை பொலிவுற்றிடவே வாழ்த்துகின்றோம்.*

*தாயாய் நமக்கு அருள் வழங்கும் தமிழின் சுவையைச் சான்றோர்கள்*
*தூயராகிச் செந்தமிழால் சூழ்ந்து போற்றி வழிபட்டார்*
*நேயத்துடனே கருவறையில் நெகிழ்ந்தெல்லோரும் வழிபடுவோம்*
*காயப் பிணியும் மனப்பிணியும் அகலக் கசிந்து போற்றிடுவோம்.*

*பண்பார்ந்து இலகும் பாவையை நாட்டுப் பயிலும் குடிகள் ஒதுங்காமல்*
*நண்பாய் கோயிலுட் புகுந்து நாளும் ஒளியும் நறும்புகையும்*
*பண்சேர் இறைவி திருநாமம் பரவிப் பாடும் தமிழிசையும்*
*உண்மை வழிபாடாய் வளர்க உலகம் வாழி தமிழ் வாழி.*

பேராசிரியர் டாக்டர் அய்க்கண் அவர்களுக்கு, தங்கள் மடல் கிடைத்தது. திருக்குடநீராட்டு விழா மலருக்கான வாழ்த்து வருகிறது. தக்கவாறு பயன்படுத்திக்கொள்ளுங்கள்.

வேண்டுந்தங்களன்பு.

அன்புள்ள,

(தவத்திரு சாந்தலிங்க இராமசாமியடிகளார்)

பேரூராதீனம்.

ஓம் சக்தி!



சுயம்பு அருள்மிகு

# ஆதிபராசக்தி சித்தர்பீடம்

மேல்மருவத்தூர் - 603 319



ஆன்மிககுரு, அருள்திரு
**பங்காரு அடிகளார்**

மேல்மருவத்தூர்

## ஆசியுரை

"ஆலயம் தொழுவது சாலவும் நன்று! கோபுர தரிசனம் பாவ விமோசனம்" "கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்பன இந்நாட்டு மக்களிடையே வழங்குகிற அனுபவம் மிக்க பழமொழிகள்!

திருக்கோயில்களில் நித்திய, நைமித்திக வழிபாடுகள் குன்றாமல் நடந்தால்தான் நம்மைச் சுற்றியுள்ள ஊரும் உலகமும் சுபிட்சம் பெற முடியும், திருக்கோயில்களில் வழிபாடுகள் குன்றினால் நாட்டின் வளம் குன்றும் என்று திருமூலர் போன்ற சித்தர்கள் எச்சரித்துள்ளனர்.

பார்க்கும் இடமெங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் தெய்வ சக்தியை, ஒரு விக்கிரகத்தில் ஈர்த்துப் பிடித்து வைத்து, அதற்கு ஒரு கோயில் கட்டிக் காலம் காலமாக எங்களுக்கும், எங்கள் தலைமுறைகட்கும் அருள்பாலிக்க வேண்டும் என்றெண்ணியே கோயில்கள் கட்டி வைத்தார்கள். வழிபாடுகள் செய்தார்கள். நம்மையும் அறியாமல் ஏற்பட்டுவிடுகிற குறைபாடுகளை நிவர்த்தி செய்யவும் தெய்வ சக்திக்கு உயிர்ப்பு உண்டாகவும் கும்பாபிடேகம் செய்தார்கள்.

திருக்கோயில் திருக்குட நீராட்டுவிழா போன்ற பணிகள் மீண்டும் சிரத்தையுடன் செய்யப்படுவது கேட்டு எமக்கு மகிழ்ச்சி!

விழா சீரும் சிறப்புடனும் நடைபெற எல்லாம் வல்ல அன்னை அருள் பாலிப்பாளாக! இத்துடன் எம் அன்பும், ஆசியும். அன்னையின் பிரசாதமும் அனுப்பி வைத்துள்ளோம்.

ஓம் சக்தி

இங்ஙனம்,
**பங்காரு அடிகளார்.**

உ

சிவமயம்

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க!

**திருக்கயிலாய பரம்பரை, திருக்கோவலூராதீனம், திருப்பாதிரிப்புலியூர்,**

**ஸ்ரீமத் ஞானியார் மடாலயம் எட்டாம் பட்டம்**

**சிவத்திரு ஞானியார் அடிகள்** வழங்கிய

# ஆசியுரை

*உரையேறு சைவநெறிவளர்ந் தேறச் சமணரெலாம் உட்கி மாழ்கிப்*
*புரையேறக் கண்டவர்கள் ஆனந்தக் களிப்பேறப் புகழ்நாவேந்தை*
*கரையேற விட்டபிரான் ஒருபாகம் வளர் கருணைப் பிராட்டியான*
*தரையேறு புகழ்ப்புலிசைப் பெரியநாயகி சரணம் தலைமேற்கொள்வாம்.*

- திருப்பாதிரிப்புலியூர் புராணம்-5

எனச் சிதம்பரநாதமுனிவர் தாம் பாடிய திருப்பாதிரிப்புலியூர்ப் புராணத்தில் பெரியநாயகியம்மையைத் துதித்து மகிழ்வார்.

திருப்பாதிரிப் புலியூரைப் போலவே, திருக்கோவலூர், திருவதிகை, திருமுதுகுன்றம் முதலாய பல தலங்களிலும் அன்னை, பெரியநாயகி என்ற பெயரில் எழுந்தருளி அருள் பொழிகிறாள்.

அத்தகைய தலங்களுள் ஒன்று, வேலங்குடி என அறியப் பெறுகிறோம். பாலைய நாட்டு அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோயில் திருக்குட நீராட்டுவிழா 10-06-2005 இல் சிறப்பாக நிகழ உள்ளதை அறிந்து மகிழ்கிறோம்.

சிறந்த எழுத்தாளரான பேராசிரியர் முனைவர் அய்க்கண் அவர்களும், மற்றும் அன்பர்களும் வரலாற்றுச் சிறப்பு மிக்க அவ்விழா நிகழ்வுகளை எதிர்காலத்திற்கான ஆவணமாகப் பதிவு செய்யும் அளவில் ஒரு சிறப்பு மலர் வெளியிட இருப்பதும் மிகவும் மகிழ்வுக்குரியதே.

நம்முன்னோர்கள் எதையும் முறையாகப் பதிவு செய்யாததாலேயே இன்று வரலாற்றாய்வில் சில முரண்பாடுகள் நிலவுகின்றன. ஆய்வுப் பேரறிஞர் திரு அய்க்கண் அவர்கள் அந்தக் குறையுணர்ந்தே இத்திருக்குடமுழுக்கையும், அதன் நிகழ்வுகளையும் பின் சந்ததியினர் அறியும் வகையில் மலராகப் பதிவு செய்யும் முயற்சியில் ஈடுபட்டுள்ளார்கள்.

அச்சிறப்பு மலர் பக்தி மணமும், இலக்கிய மணமும், சமுதாயப் பண்பாட்டு மணமும் கமழ்வதாக எதிர்கால மக்களுக்கு நல்வழிகாட்டுவதாக அமையும் என்பதில் ஐயமில்லை.

திருக்குடமுழுக்கு சிறப்பாக நிகழவும், மலர் ஞான மணம் கமழவும் நம் மடாலயத்தில் எழுந்தருளியுள்ள செந்தமிழ்க் குரவன் செவ்வேள் இணையடி மலரையும், நம் மடாலய முந்தைய குருநாதர்கள் முண்டகச் சேவடிகளையும் வணங்கி வாழ்த்துகின்றோம்.

பாலமுருகனடிமை

அருள்மிகு பாலமுருகன் திருக்கோவில்
இரத்தினகிரி, கீழ்மின்னல் - 632 517,
வேலூர் மாவட்டம், தமிழ்நாடு.

# அருளாசி

"சிவத்திலே சக்தி சேர்ந்தால் சிவத்துக்கு வலிமை சேரும்!
சிவத்தினை விட்டுச் சக்தி சிறுநொடி அகன்று நிற்பின்
சிவத்துக்கே இயக்கமில்லை! சக்தியே சக்தியன்றோ?
சிவத்தையே இயக்குகின்ற சக்தியைச் சிந்தை செய்வோம்!"

"தாயிற் சிறந்ததொரு கோவிலுமில்லை" என்பது ஒரு தாயின் வாக்கு. தாய் குழந்தைக்குப் பாலமுதம் ஊட்டும்போது அன்பின் திருவுருவம். குழந்தைக்குத் தீங்கு செய்பவரை எதிர்ப்பதில் வீரத் திருவுருவம். கல்வி கற்பிக்கும் போது கலைவடிவம்.

அலைமகளாக விளங்கிச் செல்வம் செழிப்பதிலும் கலைமகளாக விளங்கி கல்வி செழிப்பதிலும், மலைமகளாக விளங்கி வீரம் விளைவிப்பதிலும் முன்னிற்பவர்கள் தாய்த் தெய்வங்களே.

தெய்வத்தைத் தாய் வடிவில் வணங்கும் வழக்கம் நம்நாட்டில் தொன்று தொட்டு வழக்கில் இருந்து வருகிறது. மதுரை மீனாட்சி, காஞ்சி காமாட்சி, காசி விசாலாட்சி முப்பெரும் தாய்த்தெய்வங்கள். கொடியிடையம்மன், வடிவுடையம்மன், திருவுடையம்மன் தமிழகத்தில் வடபகுதியில் சிறப்புற்று விளங்கும் தெய்வங்கள். நீலத்திரைகடல் ஓரத்திலே நின்று நித்தம் தவம்செய்யும் குமரித் தெய்வம் பற்றி நாம் நன்கறிவோம். வீரத்திலகம் சிவாஜியும், கவிஞர் திலகம் பாரதியும், ஆன்மிகத் திலகம் பரமஹம்சரும் தாய்த் தெய்வங்களை வணங்கி வரம் பெற்றவர்களன்றோ!

அந்த வகையில் வேலங்குடியில் குடிகொண்டு அருளாட்சி செய்யும் பெருங்கருணை பெரியநாயகி அம்மன் திருக்கோவில் சிறப்புடையது. அத்திருக்கோவிலுக்குத் திருக்குடமுழுக்கு விழா நடைபெற இருப்பதறிந்து உள்ளம் மிக உவகை கொள்கிறேன். விழாவின் பொருட்டு சிறப்பு மலர் வெளியிடுவது விழாவுக்குரிய சிறந்த நினைவுச் சின்னமாகவும், வருங்கால இளந்தலைமுறையினர் அறிந்துகொள்ள வேண்டிய விளக்க ஆவணமாகவும் விளங்கும் என்பதில் ஐயமில்லை.

திருக்கோவிலின் திருக்குட நன்னீராட்டு விழாவும், சிறப்பு மலரும் எல்லாவகையிலும் எழிலும் ஏற்றமும் நிறைந்தவையாக அமைய எல்லாம் வல்ல எந்தை முருகனை இறைஞ்சி வாழ்த்தும்.

**தயானந்த சந்திரசேகரன்**
சண்மத ஆலயம்,
திலகவதியார் திருவருள் ஆதீனம்,
1120, மச்சுவாடி, புதுக்கோட்டை - 622 001.

சிவாய நம

அருள்நிறைந்த புண்ணிய மண் நம் தமிழ் மண். மக்களைச் செம்மைப்படுத்தவும், பக்குவப்படுத்தவும் நம் முன்னோர்கள், அருளாளர்கள் திருக்கோயில்களை உருவாக்கி நன்னெறிப் பாதையில் செல்ல வழி வகுத்துத் தந்துள்ளார்கள்.

அந்த வகையில், சிவகங்கை மாவட்டம் காரைக்குடி அருகிலுள்ள வேலங்குடியில் பாலைய நாட்டு அருள்மிகு பெரியநாயகி அம்மன் குடிகொண்டு மக்களுக்கு அருள்பாலித்து வருகிறாள். சக்தி வழிபாட்டில் மிகுந்த நம்பிக்கை கொண்டவர்கள் நம் தமிழ்ப் பெருமக்கள்.

மக்கள் நலமுடனும், வளமுடனும் வாழ அருள்பாலித்து வருகின்ற பாலைய நாட்டு அருள்மிகு பெரியநாயகி அம்மன் திருக்கோயில் திருக்குட நீராட்டு விழா நடைபெறுவது மிகவும் போற்றத்தக்க செயலாகும். ஆன்மீக அன்பர்களுக்கு மட்டுமல்லாது இப்புவியில் வாழும் அனைவரும் மகிழ்ச்சியுடனும், அமைதியுடனும் என்றும் வாழ அருள்மிகு பெரியநாயகி அம்மன் அருள்புரிவாள் என்பது திண்ணம்.

இத்திருக்கோயில் திருக்குட நீராட்டுப் பணியில் ஈடுபட்டுள்ள அனைவரும் புண்ணியம் செய்தவர்கள். அந்த வகையில், அருள்பாலித்து வருகின்ற பெரியநாயகி அம்மன் அருளினைப் போற்றி வணங்குகின்ற வகையிலும், எதிர்கால சந்ததிகள் அறியும் வண்ணமும் அற்புதமான முறையில் ஆவணமாகச் சிறப்பு மலர் வெளியிட இருப்பதை அறிந்து மிகுந்த மகிழ்ச்சி அடைகின்றோம். அறிஞர் தமிழ்த்திரு பேரா. டாக்டர் அய்க்கண் அவர்களின் தலைமையில் தமிழறிஞர்கள் மலர் குழுவினர்களாக இருந்து பணியாற்றி வருவது பெரும் சிறப்புக்குரியது. இறைவனது திருவருள் துணையுடன் நடைபெற இருக்கின்ற திருக்குட நீராட்டு விழாவில் வெளியிட உள்ள சிறப்பு மலர் புண்ணியத் தலத்தின் மணம் பரப்பும் வகையில் அமைய எல்லாம் வல்ல இறையருளையும், அன்னையின் குருவருளையும் வணங்குகிறோம்.

என்றும் சமய, சமூக சேவையில்,

**தயானந்த சந்திரசேகரன்**

உ

குருவே துணை

Thavathiru Kumaragurubara Swamigal
HEAD OF THE MUTT
Siravanapuram
KAUMARA MATALAYAM
Chinnavedampatti (P.O.),
Coimbatore - 641 006, Tamilnadu.

தவத்திரு. குமரகுருபர சுவாமிகள்
மடாதிபதி
சிரவணபுரம்
கௌமார மடாலயம்
சின்னவேடம்பட்டி (அஞ்சல்)
கோயமுத்தூர் - 641006, தமிழ்நாடு

# வாழ்த்து

வேலங் குடியில் குடிகொண்டு
மேவும் உலக மாந்தர் எலாம்
விரும்பி வேண்டும் அருள்ஆசி
மேவி வாழப் பெருங்கருணைச்

சீலப் பெரிய நாயகியாம்
தேவி வந்து கொலுவிருக்கும்
திருவார் கோயிற் குடமுழுக்குத்
திருவி ழாவின் நினைவாக

ஞாலம் மதிக்கும் சான்றோர்கள்
நாட்டும் புலமை எழுத்தாளர்
நயந்து வழங்கும் சிறப்புமலர்
நன்றாய் அமையக் குருபரன்சீர்க்

கோலப் பொலிவார் குகப்பெருமான்
கொங்குத் திருத்தாள் இணைநினைந்து
கும்பிட் டாசி வழங்குகின்றோம்
குலவி வாழ்க வாழ்க என்றே.

அன்புடன்

[signature]

சுவாமி கோவிந்தானந்தா
ஸ்ரீ நாராயண ஆசிரமம்
பிள்ளையார்பட்டி

தொ.பே.எண் : 95-4565 - 264236

எல்லாம் வல்ல அருள்மிகு வேலங்குடிப் பெரியநாயகி அம்பாளின் திருக்குட நீராட்டு விழாவும் அண்மையில் சிறப்புடன் நிகழ்ந்ததை ஒட்டி வெளியிடப் பெறுகின்ற மலர் சிறப்படைய வாழ்த்துகின்றோம்.

தீரமும் ஈரமும் மிக்க பாலையநாட்டாரின் வழிபடு தெய்வமாக விளங்குகின்ற பெரியநாயகி அம்பாள் தனம் தருபவள், அழியா முத்தி ஆனந்தம் தருபவள், தன்னை வணங்குவார்க்கு வாழ்வுதரும் வள்ளல் பெருமாட்டி. இவளே மறைமுடிவாய் இலங்கும் மகாசக்தி. காலங்கள் அனைத்தையும் தன்னுடைய கட்டுக்குள் வைத்திருக்கும் இவளுடைய அருள் பெற்றவர் பேறு பெற்றவர்.

'பூத்தவளே, புவனம் பதினான்கையும் பூத்த வண்ணம் காத்தவளே, பின் கரந்தவளே, கறைக்கண்டனுக்கு மூத்தவளே, மூவா முகுந்தற்கு இளையவளே, மாற்றவளே, உன்னையன்றி மற்றோர் தெய்வம் வந்திப்பதே' என்ற அன்னை அபிராமியிடம் அபிராமிப் பட்டர் வேண்டிய பாடல் இங்கே நினைவுக்கு வருகின்றது.

நவகோண நாயகி, நாதாந்த போதம் கடந்த பரஞ்சுடரான அன்னை பெரியநாயகி அனைத்து நலன்களையும் பேறுகளையும் அனைவர்க்கும் அருள வேண்டும் என்று மனம் மொழி மெய்களால் இறைஞ்சுகின்றோம்.

உ

ஸ்ரீ கற்பக விநாயகர் துணை

**K. பிச்சைக் குருக்கள்**

தலைமை அர்ச்சகர்

ஸ்ரீ கற்பக விநாயகர் கோயில்

பிள்ளையார்பட்டி – 630 207

# வாழ்த்துரை

*சூலந்தண்டு ஒள்வாள் சுடர்பாறை ஞானமாய்*
*வேலம்பு தமருக மாகிளி விற்கொண்டு*
*காலம்பூப் பாசம் மழுகத்தி கைக்கொண்டு*
*கோலஞ்சேர் சங்கு குவிந்தகை எண்ணதே.*

- திருமந்திரம்

பரம்பொருளான சிவன் உலகைப் படைக்க உளம் கொண்டபோது அவனுடன் பொருந்தி அருளாற்றலை வழங்கி உலக உயிர்கள் எல்லாவற்றோடும் இரண்டறக்கலந்து அப்பொருள் எல்லாமும் தானாக இருந்து தாங்கி அருள்புரிபவள் பராசக்தி. உலகங்கள் எல்லாவற்றிற்கும் உயிர்ப்புண்டாக்கி ஒளிதரவல்ல பேரொளிப்பிளம்பாக இருப்பவளும் அவளே. அன்பர்மனத்தில் கோயில்கொண்ட அருளரசி ஒளியாய், ஓசையாய் உலகளாவியிருந்து நின்றனள்.

இத்தகைய சக்தி வழிபாடு நமது பாரததேசத்தில் புகழ்பெற்று விளங்குகிறது. தென்தமிழகத்தில் அம்மனுக்கு என்று தனியாக ஆலயம் அமைத்து, செவ்வாய் உற்சவம் முதலியவை சிறப்பாக நடைபெறுதல் காணலாம். அந்த வகையில் வேலங்குடியில் பெரியநாயகி அம்மனாக எழுந்தருளி, பக்தர்களுக்கு விதியை வெல்லும் வல்லமையையும், வினைப்பயனால் வரும் பிறவித்துயரையும், தன்னை அறியும் மெய்யுணர்வாகிய நல்ல நெறிகளையும் வழங்கி காத்து வருகின்றாள்.

பெருமைகள் அனைத்தும் பெற்ற இந்த அன்னையின் மகா கும்பாபிஷேக விழா சிறப்புடன் நிகழ்வுபெற்று கும்பாபிஷேகமலர், வெளியிடுவது அளவற்ற மகிழ்சிதருவதாகும்.

கும்பாபிஷேக மலர் பக்திமணம் பரப்பவும் இத்தகைய ஆன்மிகப் பணியில் ஈடுபட்டுள்ள நாட்டார்கள் அனைவரும் எல்லாவளமும் பெற்று வாழவும் ஸ்ரீ கற்பகவிநாயகப் பெருமான் திருவடிகளை வணங்கி வாழ்த்துகிறோம்.

वित्त मंत्री
भारत
नई दिल्ली-110001

FINANCE MINISTER
INDIA
NEW DELHI-110001



அன்புடையீர்,

பாலையநாட்டு **அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோயில் திருக்குட நீராட்டு விழா 10-6-2005** அன்று நடைபெற இருப்பது அறிந்தும் அது தொடர்பாக சிறப்பு மலர் ஒன்று வெளியிட இருப்பது அறிந்தும் மிக்க மகிழ்ச்சியடைகிறேன்.

திருக்குட நீராட்டு விழா சிறப்புடன் நடந்தேறவும், சிறப்பு மலர் சீருடன் வெளிவரவும் எனது இதயம் நிறைந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அன்புடன்

**ப. சிதம்பரம்**

பேராசிரியர் டாக்டர் அய்க்கண்
12, கைலாச நகர் 3-வது தெரு
காரைக்குடி - 630 002.

இரா. விசுவநாதன்
போக்குவரத்து மற்றும் மின்சாரத் துறை
அமைச்சர்
தலைமைச் செயலகம்
சென்னை – 600 009



நாள் : 20-6-2005

# வாழ்த்துச் செய்தி

வேலங்குடி, அருள்மிகு பெரியநாயகி அம்மன் திருக்கோயில் குடமுழுக்கு விழா 10-06-2005 அன்று நடந்தேறியது அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். இக்கோயிலின் திருப்பணிகள் சிறக்கவும், குடமுழுக்கையொட்டி நடைபெறும் 48 நாள் மண்டல விழாக்கள் இனிதே நடைபெறவும் எனது இதயங்கனிந்த நல்வாழ்த்துக்களை தெரிவித்துக்கொள்கிறேன்.

இரா. விசுவநாதன்
20/6/2005

(இரா. விசுவநாதன்)

'அறமனச் செம்மல்'

**பழ. படிக்காசு**

தலைவர், தமிழ்நாடு வல்லம்பர் சங்கம்



## *வாழ்த்துரை*

சங்ககாலத்தில் 'வல்வில் ஓரி' 'வல்வில் அம்பின்' என்ற தொடர்களால் குறிக்கப்பெற்ற வல்லம்பர் சமுதாயம், பண்டைக் காலத்திலிருந்து மண்ணின் மைந்தர்களாய் வாழும் வரலாற்றுச் சிறப்புடையது. பாலைக் காட்டுக்குள் வேட்டையாடச் சென்றபோது, பொன்வண்ண முயலாய்த் தோன்றி விளையாடி 'ஓம்' எனும் வடிவாயமைந்த மரப்பொந்தினுள் சென்று பெரியநாயகியாய்த் தோற்றமளித்த தெய்வமே, பாலையநாட்டாரின் குல முதல் தெய்வம் என்பது புராணவரலாறு. அவ்வாறு தோன்றி வேலங்குடியில் குடிகொண்டிலங்கும் அருள்மிகு பெரியநாயகியம்மன், அனைத்து மக்களுக்கும் அருள்வழங்கும் தெய்வமாய், பால் நினைந்து ஊட்டும் தாயினும் சாலப்பரிந்து நம்மைக் காப்பாற்றும் தெய்வ அன்னையாய்த் திகழ்வதை நாம் அறிவோம்.

அந்தக் கருணைத் தெய்வத்தின் திருக்கோயிலுக்குத் திருக்குட நன்னீராட்டு விழா நடைபெறுவது கண்டு பெரிதும் மகிழ்கிறேன். அவ்விழா தொடர்பான சமுதாய ஆவணமாகவும் சரித்திரக் குறிப்பேடாகவும் வெளிவர இருக்கும் சிறப்பு மலர், ஆன்மிகமும் இலக்கியமும் இணைந்து மணக்கும் மலராகச் சிறக்க மனமார வாழ்த்துகிறேன்

**பழ. படிக்காசு**

பள்ளத்தூர்

சுப . துரைராஜ் D.E.E., Ex.MLA.,
5, சுப்பையா அம்பலம் சாலை
கண்ணதாசன் நகர்
காரைக்குடி-3.



அன்புடையீர்,

வணக்கம்!

வேலங்குடியில் குடியிருக்கும் ஸ்ரீ பெரியநாயகி அம்மனுக்கு வருகிற 10-6-2005 தேதி அன்று "கும்பாபிஷேக சக்கரவர்த்தி" திருவாவடுதுறை ஆதினம் "திருப்பெருந்திரு முத்துக்குமாரசுவாமி தம்பிரான் சுவாமிகள்" தலைமையில் நடைபெறுவது வரலாற்றுச் சிறப்புமிக்க நிகழ்வாகும்.

குடமுழுக்கு விழா நினைவாக சிறப்பு மலர் ஒன்று வருவது நமது வருங்கால சந்ததியினர்க்கு வழிகாட்டியாகத் திகழும் என்பதை அறிந்து எனது பாராட்டுகளையும், வணக்கத்தையும், விழாக்குழுவினர்க்கு தெரிவித்துக் கொள்வதில் மிகுந்த மகிழ்ச்சியும் மனநிறைவும் அடைகின்றேன்.

நன்றி, வணக்கம்!

சுப . துரைராஜ்

பெறுநர் :-
பேராசிரியர் டாக்டர் அய்க்கண் M.A.B.T.D.Lit.
(அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோயில்
திருக்குட நீராட்டு விழா சிறப்புமலர் குழு)
காரைக்குடி - 630 002.



N. சுந்தரம், Ex. M.L.A.,

காரைக்குடி

போன் : (அ) 04565 - 226888

செல் : 94431 - 33032



## வாழ்த்து மடல்

கோட்டையூர்-வேலங்குடியில் குடிகொண்டிருக்கும் பாலைநாட்டார் பெருமக்களின் முதற்பெருந்தெய்வமான அருள்மிகு பெரியநாயகி அம்மன் திருக்கோவில் திருக்குட நீராட்டுவிழா சிறப்புற நிகழவும் திருக்குட நீராட்டுவிழா சிறப்பு மலர் சிறப்புற மணக்கவும் எனது நல்வாழ்த்துகளைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அன்புடன்

N. Sh...

**N. சுந்தரம்** Ex.MLA.,

கோட்டையூர்-630 106

சிவகங்கை பாராளுமன்ற உறுப்பினர்

தொகுதி அலுவலகம்,

17, சுப்பிரமணியபுரம் முதல் தெரு,

காரைக்குடி - 630 002.

# பெரியநாயகி நிறைநெடுந்தாண்டகம்

கவிஞர் கோமான்-பேராசிரியர் க. தேசிகனார்

## காப்பு

தாண்டவம் செய்வாற்கும் தாரகமே! மூவுலகும்
நீண்டளந்தான் தங்கைநிறையுருவே! வேண்டுநெடும்
தாண்டகத்தில் வந்தருள்க! தாயேவே லங்குடிக்கண்
ஆண்டருளும் மாபெரியம் மா.

## 1. அலங்காரவல்லி

வலங்கொண்ட திரிசூலம் வானம் நோக்க
வாய்மையெனும் பைங்கிளியுன் வண்ணம் நோக்கக்
கலங்காதிங் கறம்நோக்கக் கருணை தேக்கும்
கடைக்கண்ணால் எமைநோக்கி முறுவல் பூக்கும்
அலங்கார வல்லியண்ட கோடி யெல்லாம்
ஆகாயத் திருமுடியில் ஆக்கிக் காக்குங்
குலங்காவற் கொண்டபெரி யம்மா! வேலங்
குடிகொண்டாய்! அடிக்கமலம் முடிகொண் டோமே!

திரிசூலம் :- தன்னைப் பணிவோர்க்கு நலம் பயப்பது. ஒரு காலையுடையது. பயங்கரப் பற்களையுடையது. இரண்டாயிரம் கிரணங்களையுடையது. பலவகையான சின்னங்களையுடையது. கற்பாந்த காலத்தில் பிரம்மாதி தேவர்களையும் அழிக்கவல்லது.

ஆகாயத் திருமுடி :- மகுடமாகிய வான் வெளியில் வெண்ணிறக் கற்கள் கிரகங்களாகவும், செந்நிறக் கற்கள் சூரியர்களாகவும் அமையும்.

## 2. மகாமாரி

தாயேஉன் கோபந்தான் சிங்க ஏறாய்த்
தாளடியில் முழங்கல்பூ கம்ப மாகும்,
ஓயாத இடிமின்னல் முழக்க மெல்லாம்
ஓங்கியகைத் திரிசூலம் உற்ற கோபம்;
சேயாகும் எம்மீதுன் கருணைக் கண்கள்
செழிக்கச்செய் பெருமுழக்கம்; செல்வம் கீர்த்தித்
தேயாத நெடுவாழ்வு வீரம் பக்தித்
திசைதோறும் பொழிகின்ற மாரி-அம்மா

கோபம் :- ஆடிதானவனைச் சபிக்கவந்த கோபம் சிங்க உருவத்துடன் சக்தி தேவியின் பக்கத்தில் தங்கியது.

'மாரி - அம்மா' :- பெரியநாயகி தேரேறும் போதெல்லாம் மழை பொழிதல் மரபு என்னும் தொனிப் பொருள் கொண்ட தொடர்.

## 3. பராசக்தி

ஈடற்ற பராபரையே! கூறு கூறாய்
எத்துணையோ சக்திகளின் வடிவங் கொண்டாய்
பீடத்தில் வெட்டுண்ட தலைகள் பாடும்
பெரும்பாடல் பலகேட்டுப் பிழைபொ றுத்தாய்
ஊடுற்ற தீவினைகள் ஒருங்கே மாய
உயிர்உற்ற பிறப்பெல்லாம் தொடர்ந்து தாயாய்க்.
கூடுற்ற பலகோயிற் குடிகொண் டாலும்
கோலந்தான் இமயமுதல் குமரி ஒன்றே!

பராபரை :- பெரியநாயகி சிவத்தோடு அபின்னையாயிருப்பதால் பராசக்தி யெனப்பட்டுத் தன் சக்தியில் ஆயிரத்தில் ஒரு கூறாக ஆதிசக்தியையும், ஆதி சக்தியின் ஆயிரத்தில் ஒரு கூறாக இச்சா சக்தியையும், இச்சா சக்தியில் ஆயிரத்தொரு கூற்றில் ஞான சக்தியையும் இப்படியாகக் கிரியா சக்தியையும் தோன்றச் செய்கிறாள். இச்சக்தி அளவிடப்படா ஆன்மாக்களை ஈன்றும், வளர்த்தும், மலபரி பாகத்தில் பேரின்பத்தைக் கொடுத்துவருதலின் உலக மாதா பெரியநாயகி என அழைக்கப்பெற்றாள்.

கூடுற்ற :- சேர்ந்த; உடம்புகொண்ட; கோபுரக்கூடுகள் பொருந்திய.

## 4. பிராமி - மகேசுவரி

உற்றொருகால் உனைநோக்கத் தாயே! அன்னம்
ஊர்ந்திடுவாய்ப் பொன்மேனி புயங்கள் நான்காய்
வெற்றிடமே இல்லாப்பொற் கமண்ட லங்கொள்
வேதாவாய் அபிராமி விளக்கங் காட்டி;
சுற்றியதீச் சடைமகுடங் காட்டி வெள்ளைச்
சோதிவிடைக் கொடிகாட்டித் தூய நீறு
நற்றவத்தி வடிவாகி முக்கண் சூலம்
நாகங்கள் சீறிடநீ நகுவா யம்மா!

பிராமி :- பிரமன் சக்தியின் வடிவில் அடங்கிக் காட்சியளிக்கும் நிலையில் பிராம்ஹி எனப்படுவள்.

நற்றவத்தி வடிவாகி :- மஹேச ரூபிணியாகி.

## 5. கௌமாரி - நாராயணி - வராகி

அங்குசம்வேல் அபயகரம் செம்பட் டாடை
அணியார கேயூரம் கொடியில் தோகை
கும்குமப்பூ நிறங்கொள்கௌ மாரி யாகிக்
கோலமணி மகுடமிசைக் கொண்டு பின்னர்
இங்கிதப்பொற் கருடனுமே கொடிக்கண் தோன்ற
எழில்நீல வண்ணம்சங் காழி ஏந்திச்
செங்கமலக் கண்ணுடைநா ரணியாய் நின்று
சிரித்திடுவை வராகியெனக் கலப்பை ஏந்தி

இங்கிதம் :- குறிப்பறிந்து ஆக்கம்புரிதல்.

## 6. இந்திராணி - காளி

வயிரத்தின் படையேந்தி வேழ மேறி
வரமபய கரம்வண்ணத் தானை யார்ந்த
அயிராணி யெனமேனி அமையக் காட்டும்
அமரர்க்குத் தொழுகுலமாம் அம்மா! மேன்மேல்
வெயிலேறும் பாலைநிலக் காளி யாகி
விளையாடும் பந்தாலே அசுரர் வீழ்த்தி
முயலாகப் பாலைமரப் பொந்தில் இங்கு
முகங்காட்டப் புகுந்ததனி மூலம் நீயே

காளி :- பெரியநாயகி தன் கலைகளில் ஒன்றைச் சிவமூர்த்தியின் காளம் ஆகிய நச்சுக்கறையில் படியச்செய்து அவர்தம் அக்கினிக்கண்ணின் வழியாக வெளிவரும்படியாகச் செய்து கோபாக்கினி வடிவமாக அமையச் செய்தனள். அவ்வடிவே காளி. மகிட வாகனமுடையவள்.

பந்தாலே அசுரர் வீழ்த்தி :- ஒரு கற்பத்தில் சிவகணம்போல் வேடம்பூண்டு வந்த விகுளன், உற்பலன் என்னும் அசுரரை இறைவன் குறிப்பின்வழி உணர்ந்து விளையாடும் பந்தாலே மோதிக்கொன்றனள். அப்பந்து சிவலிங்கமாயிற்று.

## 7. உபாசனைத் தேவி

[1]தத்துவங்கள் ஒளிவீசத் [2]தழைத்த வாய்மை
[3]தன்னில்தான் நிலைத்திடுவை [4]புலன்க ளைந்தும்
ஒத்திசைக்க வகைபுரிவை [5]வேண்டும் அன்பர்
உவந்திடநீ திருமேனி கொள்வை அம்மா!
[6]பத்திநிலைக் குணப்பெருக்கம் உன்பேர் சொல்லப்
படர்ந்தெழுமே [7]பவக்கடலைத் தாண்டும் ஓடம்,
[8]சித்திதரும், [9]பதினாறு பேறுங் கொண்ட
சிறுபேழை, [10]நாமணக்கச் செப்பும் [11]பூவே.

1 கௌரி ; 2 சத்யை; 3 நித்யை, பகவதி ; 4 சதி ; 5 அம்பை ; 6 சிவை ; 7 சர்வாணி ; 8 ஈசானி ; 9 சர்வமங்கலை ; 10சநாதனி, வித்யாமானை ; 11புட்ப காசை - என்னும் தேவிக்குரிய உபாசனை மந்திரச் சொற்கள் இப்பாடலில் ஒளியும் மணமும் பெற்றிருக்கக் காணலாம் ; உபாசனைக்குரிய மகாமந்திரப் பாடல். 'உன் பேர் சொல்லப் பக்திநிலைக்குணப் பெருக்கம் படர்ந்தெழும்' என்றும், 'உன்பேர் பவக்கடலைத் தாண்டும் ஓடம்' என்றும் கொண்டு கூட்டுக

## 8. பார்வைப் பயன்

ஏர்கொண்ட உழவன்கைச் சிறிய கோலும்
ஏற்றமிகு துலாக்கோலும் இகலே யின்றித்
தார்கொண்ட படைவேந்தன் செங்கோல் தானும்
தவஞானி முக்கோலும் தாயே! உன்றன்
நேர்கொண்ட பார்வைக்கீழ் மேருவைப் போல்
நிறைநெல்லும் பொன்மணியும் நீதி வாழ்வும்
சீர்கொண்ட பேரின்ப வீடு மாகிச்
செயல்கொண்ட திறங்கண்டு சேவித் தோமே.

முக்கோல் :- அரி அயன் அரன் ஆகிய மூவரும் ஒன்றென்று காட்டும் திரிதண்டக்கோல், ஏரடிக்கும் சிறுகோல் பெரியநாயகியின் பார்வைபட்டு மேருமலை போன்ற நெற்குவியலாகத் திகழ்கின்றது- இவ்வாறே ஏனையவற்றையும் இணைத்துக் காண்க!

செங்கோல் மேருவைப்போல் நீதி வாழ்வு :- நெடுந்தொலைவிலுள்ளாருங் கண்டு போற்றத்தக்க மலைமாண்புடன் எல்லா நீதிகளும் தன்னிடத்து விநாயகர் கோடுகொண்டெழுதிய தனித்தன்மையும் உடையது மேரு.

## 9. அழகுவெள்ளம்

காண்கின்றார் களிமனங்கள் கோடி கோடிக்
கருவண்டாய்ப் படிந்தாலும் கவின்மா றாத
மாண்கொண்ட மலராலொப் பனைகள் செய்தார்
மலர்வழியே உன்னழகு மடைபாய்ந் தோடி
நாண்மதிவெண் ணிலவாய்ச்செங் கதிர்க ளாகி
நங்கையர்தம் உளத்திண்மை நாட்டுங் கற்பாய்
வீணென்ற சொல்லறியார் கவிதைச் செந்நா
விளங்குமகா மந்திரமாய்க் கீதம் ஆமே!

கீதம் :- மகாகவி பாரதியாரின் ஓம்சக்திப்பாடலை மனத்துட்கொண்டு அமைத்த சொல். பழையூரில் பெரியநாயகிக்கு மலர்களால் செய்த ஒப்பனைகண்டு மகிழ்ந்துரைத்த பாடல். தாயழகு கண்ணிலும் மனத்திலும் வாயிலும் களி நடம்புரியுமாறு கூறப்பெற்றது.

## 10. தெய்வநாயகி

நிலமெங்குந் தடையின்றி வணிகர் செல்லும்
நெறியெல்லாம் அறந்தழைக்கு மென்றே யெண்ணி
வலயங்கொண் டெறிவீரர் வந்து சுற்ற
வல்லம்பர் வழிகண்டு வில்வ ளைத்தே
புலனைந்துங் கண்ணாகி விலங்கைத் தேடப்
போயொளிக்கு முயல்போலப் பொந்தில் புக்கு
நவமுந்துந் தனைக்காட்டி நின்ற தெய்வ
நாயகிதாள் மறவார்வான் நாட்டார் தாமே!

வணிகர் நகரத்தார் எனப்படுவர். காடுகட்கிடை வாணிகத்தின் பொருட்டேகும் குழுவுக்கு வாணிகச்சாத்து எனப் பெயர். இவர்கள் வாணிகம் தடையற நடைபெறவேண்டி ஆட்சியினரால் அங்கங்கே கோட்டைகள் முள்வேலிகட்கிடை அறம் தழைக்கச் செயல்புரியும் வில்லம்பு வீரர்களாக நிறுத்தப் பெற்றவர்களே வல்லம்பராவர். சங்க இலக்கியம் இவர்களை 'உறுகணை மறவர்' என்று சாற்றும். கல்வெட்டுச் சாசனங்களில் 'எறிசிங்க வீரர்', 'ஏறி வீரர்', 'மறக்குல மாணிக்கர்' என்னுந் தொடர்கள் நாட்டாரையும், நகரத்தாரையும் குறிக்கக் காணலாம்.

## 11. வயலாட்சி வாழ்வரசி

மணத்துக்கண் மாசகற்றி வளம் பெருக்கும்
மாபெரிய நாயகிதாள் மறவோம்; வாழும்
இனத்துக்குள் இனம்பெருமை சிறுமை எண்ணோம்
எல்லோரும் ஓர்குலமே; எமனை யஞ்சோம்;
தினத்துக்குத் தினம்வேலங் குடியை நோக்கித்
தியானமிகு நெஞ்சேஅம் பலமாக் கொண்டோம்;
வனத்திருந்து வயலாட்சி புரிய வந்த
வாழ்வரசி! பொன்னடிக்கே வணக்கம்; வாழ்க!

அம்மையும் அப்பனும் வீற்றிருந்து அரசோச்சுமிடமே அம்பலம். அறம் வாகைசூடி ஆடல்புரியுமிடமுமாம்.

## 12. பெரியநாயகியைச் சார்ந்த சகோர சாதகப்புட்கள்

'நிலாமுகி' வெண் ணிலவுப்பால் வேண்டி வானில்
நிலைகொள்ளா தலைந்துனையே சரண டைந்தால்,
கலாமதிகள் பலவுண்டு மீண்டு முன்றன்
கைபடியக் கண்டமரார் கரங்கு விப்பர்;
உலாவருங்கார் மேகமழைத் துளிகட் கேங்கி
ஓடுவன சாதகப்புள்; உன்னைச் சார்ந்தால்
விலாநிறைய மேகமொடுங் கடலை யுண்டே
வெளிக்கக்கு மிந்திரனை வருணன் றன்னை

**ஒட்டக்கூத்தர் பாடிய :–**

'பானிலாவைப் பசுங்கதிர்க் கொத்தொடு
மேனிலாவுஞ் சகோரங்கள் மேயவே'
'கோனம் போதரங்கும் போதரம்புக
வானம் பாடியே கூடிமடுப்பவே,' –
என்னும் தக்கயாகப்பரணித் தாழிசைகளில் நோக்குக.

நிலாக்கதிருக்கலைந்த சகோரமாகிய நிலாமுகிப்புள், முழுமதிகள் பல கிடைக்கப்பெற்றுண்டு பசியாறுவதும் சாதகப்புள் மேகங்களையும் கடலையும் அவற்றின் அதிதேவதைகளோடு பருகி அத்தெய்வங்களை மீண்டும் உமிழ்வதும் பெரியநாயகியின் தொடர்பால் விளைந்த அற்புத விளைவுகளாம்.

## 13. புறாவும் கிளியும்

மேய்ந்துபொடிக் கல்லுண்ணும் புறாவும் உன்கை
மேவியபின் கொடுமுடிக ளெட்டு முண்டே
காய்ந்தெரியு மூழித்தீப் புகைபோல் சுற்றிக்
காட்சிதரும் பெருமைக்காம், கதிரோன் மீது
பாய்ந்தனுமன் பழமென்றே பற்றிச் சோர்ந்தான்.
பசுங்கிளியோ கதிரென்று, பறந்து பற்றி
ஏய்ந்தகதிர் பன்னிரண்டா யிரமுங் கொள்ளும்.
இறைவிபுகழ் யாமளநூல் இனிது ரைத்தே!

**ஒட்டக்கூத்தரின் தக்கயாகப்பரணியில் :–**

'ஏறுமேறு மலைகளெல்லாம் புக
வேறுவேறு கபோதங்கள் மேயவே'
'பதங்கர் வெங்கதிர் பன்னிரண்டாயிரம்
கதங்கொள் நீலிகைக்கிள்ளை கவரவே'
என்னும் தாழிசைகளின் கருத்து.

'துவாத சாதித்தர் கதிர்களாகிய பன்னிரண்டாயிரம் கதிர்களையும் பற்றுதற்குரியது கிளி' என்னுங்குறிப்பு.

புறாவுக்கு – தீப்புகையை உவமை கூறல் மரபு. அனுமான் சூரியனைக்கனியென்று கருதிப்பாய்ந்து பற்றுமுன் சூரியனின் கதிர்களால் முகம் தகிக்கப்பெற்று மீண்டான். பெரியநாயகியின் கையில் உள்ள கிளியோ கதிர்களைப் பற்றிக் கொணர்ந்தன.

## 14. மயிலும் கின்னரப்புள்ளும்

உருகுமுளப் பைரவியோ கினிகள் கற்க
ஓரடிமற் றோரடிவைத் தாடும் தோகை,
பெருகுபிலப் பாம்புகளை அலகில் பற்றிப்
பேய்ப்பூதம் பயந்தோடக் குதிகொண் டாடும்;
அருகிழுத்தே அசுரர்களை இசையில் ஆழ்த்தி
ஆரோக அவரோகச் சுரம யக்கில்
உருகிடச்செய் தவருடம்பைக் கிழிக்கும் புள்ளாய்
உரங்கொண்ட கின்னரப்புள் ஒதுங்க லுண்டே

ஒட்டக்கூத்தர் அருளிய

'யூத நாயகரோடு உரகேசரை
வேதநாயகி தோகை விழுங்கவே'
'முன்னாம்பினு முத்தர் மிடற்றினுங்
கின்னரம்சுரர் நெஞ்சங் கிழிக்கவே' -

என்னும் தாழிசைகள் வழிநின்று பாடிய பாடல், அலகில்பற்றி - தான் நின்றாடும் இடத்திலிருந்தபடியே நீண்டகழுத்தினைப் பாதலத்திற் செலுத்திப் பாம்புகளைப் பற்றி - ஒரே கொத்தாகப் பற்றி

கின்னரங்கள் இசையாகிய மயக்க மருந்தால் மயக்கி அசுரர்கள் அறியாதபடியே அவர் மார்பைப்பிளந்து கொல்லும் புதுமையைக் குறிக்கும் குறிப்பு

## 15. சக்கர வாகமும் கருடனும்

வாயலகைக் கோத்தபடி ஆணும் பெண்ணும்
வளிசுழலச் சுழல்சக்ர வாகப் புட்கள்,
மேயபகைப் படைமுழுதும் பொடித் தூளாக
மிளிர்சக்கரப் படையாய் மேவும் உன்பால்;
தாயெனவே அடிவருடும் கருடப் புள்ளும்
தனித்திருடன் ஆயிரங்கண் குருடென் றாக்கும்
நாயகனாம் பரசிவனார் நெற்றா ளென்றால்
நாயகி நீ நடுநிற்குங் கதிர்தா னம்மா!

தக்கயாகப் பரணியில் ஒட்டக் கூத்தர்

'சக்ரமாய்ச் சென்று சக்ரவாகங்களே
விக்ரமாயுத வெள்ளத்தை வெட்டவே'
'திருடனிந் திரனுய்ந்து திரியுமோ
கருடனாயிரங் கண்ணுங் கவரவே'

என்று பாடியதை ஒட்டிப்பாடிய பாடல்

தனித்திருடன் : முக்காலமுணர்ந்த முனிவரையும் ஏமாற்றிக் கற்புக்கரசியையும் ஏமாற்றிக் காமவெறியைத் தணித்துக்கொண்ட தேவேந்திரன்.

## 16. பிடாரியெனப்படும் குந்தம்

உழுதுவரும் பலகோடி வினைகள் போக்கும்

உத்தமியாள் முகநோக்கும் பிடாரி தானும்

எழுதுதற்காம் கோல்முனையில் நாவில் வஞ்சம்

ஏற்றுபவர்க் கிடையூறு பலவுங் காட்டிப்

பொழுதுபடும் போதுமவர் திருந்தா ராயின்

பூதமென உறக்கத்தே புடைக்குங் குந்தம்

பழுதுபடா நடுவரிடம் யோக தண்டாய்ப்

பால்சுரக்கு மடிக்காம்பாய் இனிய தாமே!

'ஒரஞ்சொன்னவன் வேலங்குடியில் உறங்கப் போனால் விழிக்க மாட்டான்' என்னும் பழமொழி உண்டு. எளியார்க்கு அநீதி இழைக்கும்போது மட்டும் குந்தம் சோதனைகள் காட்டும். மீறுபவனைக் கனவில் புகுந்து புடைத்தல் முதலிய தண்டங்கள் விதிக்கும். நீதிமான்களுக்கு எளிமைப்பட்டு நிற்கும். முனிவர்கள் எளிதில் கையாளும்படியமைந்த யோகதண்டம் போல குந்தம் திகழும். கம்பன் நரசிங்கத்தை 'அமுது பல்கும் எயிற்றுவன் பகுவாயுள்' என்று கூறியது போல் 'முத்தலை வேல்முனை மடிக்காம்பு' எனப்பட்டது. 'ஒழுங்கிலாத பிறர் புகாவாறு காக்கும் மாளிகைக்கட்டணம் எனப்படுவது சூலமாம்'.

## 17. அணங்குகட் கணக்கு

மஞ்சளொடு குங்குமம்வெற் றிலையும் பாக்கும்

மலர்த்தொகுதி கனிபால்தேன் சாந்தும் தெங்கும்

கஞ்சமலர் முகத்தினர்தாம் ஏந்திச் சூழக்

கனல்மகுடப் பாளைமதுக் குடங்கள் தாங்கித்

தஞ்சமென அருள்பண்ணை நாச்சியார் போல்

தனைமறந்த நடைநல்லார் பவனி கண்டோம்

அஞ்சலெனுங் கையுடையாய் அணங்கு கட்கோர்

அணங்காகும் பெரியவளாம் அம்மா! போற்றி!

அணங்குகட்கணங்கு : மதுக்குடமேந்தி வருங்கால் ஒவ்வொரு பெண்ணும் அருளேறி அசைந்து வருங்கனல் கொழுந்தாய் அன்னையின் கூறுகளில் ஒரு கூறாயமைந்து காட்சியளிக்கும் தெய்வ உருவாகத் திகழ்தல் கண்கூடு.

பாளைமதுக்குடம் :- வெற்றிலையும் முல்லைமாலையும் கொடியாகச் சூழக் குடத்தில் சுழன்று சுழன்று களிகொள்ளும் பாளை. கள்ளுண்டலால் ஏற்படும் அளவிறந்த மகிழ்ச்சியே களிப்பாகும். மதுவில் திளைத்த பாளையாதலின் களியேந்து பாளை கனல் மகுடக் கொழுந்தே போல் காட்சி தரல் கண் கூடு. கஞ்சமலர் - தாமரைப்பூ

அக்கினியையே மகுடமாகக் கொண்டது போல் மதுக்குடம் தாங்கிவரும் மயில் நடைப்பெண்டிர்.

## 18. பதிஞானத் திரிசூடர்

தண்பொய்கைப் பொன்மனையென் றுலகம் போற்றும்
 தாமரையில் வெண்பிறை நல்நீலப் பூக்கள்
சண்பகமொட் டணிமுல்லைக் குமுதம் சார்ந்தால்
 சற்றேநின் முகமொக்கும்; சாம வேதப்
பண்பினுயர் தமிழ்ப்பாடல் நறுநெய் யுண்டே
 பதிஞானத் திரிசூடராய் ஆடும் பாவாய்!
விண்பரிதி மதிமீன்பூக் கண்ணி யாக
 விளங்கிடவே முடியணிந்த விறலித் தாயே!

'பொன்மனை' எனப்படுவது தாமரைமலராம். தாமரைமலர் தாயின் முகமாகும். பிறை அம்முகத்தில் நெற்றியாகும். கண்கள் நீலப்பூக்களாம். நாசி சண்பகமொட்டு; முறுவல்பற்கள் முல்லையரும்புகளாம். வாயிதழ் குமுதமாம்; விறலி - தமிழ்நாட்டின் வணங்கத்தக்க பெண் தெய்வங்களாய்ப் பாடியாடல்புரியும் கற்பரசிகள். 'பாரதியும் நாரணியும் பார்மகளும் தும்புருவும் நாரதரும் வந்து நயம் கேட்கப்' - பாடும் கலைச்செல்வியரே விறலியர்.

தாமரைப் பூவிலேயே பிறையும் குவளைமலர்களும் சண்பகமொட்டும் முல்லை அரும்புகளும் செவ்வல்லிப் பூவும் பொருத்தமாகத் திகழ்ந்து ஒரு சேரக் காணப்பெற்றால் பெரியநாயகியின் திருமுகமண்டலத்தை ஒருவாறு ஒக்கும் என்றபடி.

## 19. திருவடிச் சிலம்பு

பவபந்தம் கருமவினை ஏக்கம் துக்கம்
 பாழ்நரகம், எமதண்டம், அச்சம், நோய்கள்
அவபந்தத் தடைஏவல் அனைத்தும் போக்கி
 அபயவர தங்காட்டும் அம்ப ணத்தி!
தவசிந்தைப் பெருமுனிவர் தமக்கும் எட்டாத்
 தழல்வான முடிபுனைந்த தாயே வென்றி
நவபந்த வீரர்பொற் சிலம்பில் தோன்ற
 நடந்தருளும திருவடிக்கே நாங்கள் அம்மா

பவபந்தம் - பிறவித்தளை, ஏக்கம் - எதிர்பார்த்துக் கிடைக்கப்பெறாமை ; துக்கம் - இருந்தது கெட்டுப்போதல் ; அவபந்தத்தடை - கீழான குறுக்கீடுகள் ; ஏவல் - மந்திர சக்தியால் கேடுவிளைவிக்கத் தூண்டுதல், அம்பணம் - ஒருவகையாழ். யாழை ஏந்தியவள் அம்பணத்தி . மரக்காலுமாம்.

நவவீரர் - வீரவாகு, வீரகேசரி, வீரமயேந்திரன், வீமயேசுரன், வீரபுரந்தரன், வீராந்தகன், வீரராக்கதன், வீரமார்த்தாண்டன், வீர தீரன், நாங்கள் - நவவீர்களோ உன் சிலம்பில் தோன்றினார்கள். உன் அடியார்களாகிய நாங்களோ மிக மிக உரிமை பூண்டவராய் உன் திருவடிகளில் தோன்றியவராவோம் என்னும் எக்களிப்பில் பிறந்தசொல் 'நாங்கள்' என்பதாம்,

## 20. என்றும் படியளப்பாள்

ஏழாகும் சுரவரிசை மணங்கள் ஓசை
இனியசுவை ஊர்வரிசை நிரம்பி இம்மை
வாழ்வாகும் பேறுபதி னாறும் காட்டும்
வனப்புடைய மதுக்குடங்கள் வடிவங் கொண்டாய்
யாழாகிப் பண்ணாகிப் பெண்ணென் றாகி
இருநாழி நெல்லளந்த படிநீ யுள்ளாய்
ஆழாழி இருள்மாயம் அனைத்தும் போக்கும்
அணிகொண்ட ஒளிமுத்தென் றாவா யம்மா!

| | | |
|---|---|---|
| ஏழ்சுரங்கள் | : | குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம். |
| ஏழ்மணங்கள் | : | மௌவல், முல்லை, கடம்பு, வஞ்சி, நெய்தல், மகிழ், புன்னை மலர்கள். |
| ஏழ்ஓசைகள் | : | வண்டு, கிளி, குதிரை, யானை, தவளை, பசு, ஆடு - ஓசைகள். |
| ஏழ்சுவைகள் | : | பால், தேன், மது, நெய், ஏலம், கதலிப்பழம், மாதுளம்பழம். |
| ஏழூர்வரிசைகள் | : | பள்ளத்தூர், கொத்தரி, மணச்சை, வேலங்குடி, வடகுடி, கண்டனூர், கோட்டையூர். |

ஒளிமுத்து-மகாமாயையின் சுத்தாத்துவிதக்கதிர் (காரிருளினுள் காரிருள் செறிந்திருந்தது அப்பொழுது நிராகார மகாகாளி நிராகார மகாகாலனில் இரண்டற்ற நிலையிலிருந்தாள் என்பர்)

## 21. சித்தி தரும் குங்குமம்

தத்தமக்காம் அறிவுநிலைத் தகுதிக் கேற்பத்
தரையிறங்கி அருள்புரியும் பெரிய தாயே!
எத்திவரும் தீங்குகளும் மனிதக் காழ்ப்பும்
இடையின்றித் தொடர்நோயும் குறையும் போக்கிச்
சத்தியமே வழவான நீற ளித்தே
சார்ந்திட்ட பன்னலங்கள் சரிந்தி டாமல்
சித்திதருங் குங்குமமு மிட்டுக் காக்கும்
சீர்பெரிய நாயகிசே வடிகள் போற்றி!

தன்மக்களை அவர்தம் குற்றங்குறைகளோடு மனமார ஏற்று மகிழும் தாய்மைப் பண்புமிக்குடையாள் என்னுங்குறிப்பால் பெரியதாயே எனப்பெற்றாள்.

காழ்ப்பு - அழுக்காறு, வஞ்சம் தீர்த்தல் முதலியன, தரை இறங்கி அருள்புரிதல் - தேவர்கள் பூமியின் பாவகர்மங்கள் பற்றிக்கொள்ளுமோ எனப் பயந்து தம் கால்நிலத்திற்படியாமல் வந்து போவர். ஆனால் நம்பெரிய நாயகியோ தன் மக்களுக்காக மாசுபடிந்த நிலத்தில் இன்பமாகக் காலூன்றி அருள்புரியும் வாத்சல்யம் மிக்கவளாவள். குறை-தெய்வக்குறை.

## 22. கொண்டாடும் தங்கை

உண்டாமிவ் வுலகுயிர்கள் பணைத்துப் பின்னர்
'உருமாறும் செயலுறுமே அழிவ தில்லை
எண்டோளி உயிர்க்குயிரா யிருந்து காத்தே
இயக்குபவள் நீயாவாய் இருக்கென் றோதும்

பண்டாய மறைதேட முன்ந டந்து
பாசுரச்செந் தமிழ்கேட்கும் பதுமக் கண்ணன்
கொண்டாடுந் தங்கைநீ தமிழர் போற்றும்
கொற்றவையே குறைவில்லா நிறைவே போற்றி

உண்டாலம்ம இவ்வுலகம்' - என்பது தமிழர் கோட்பாடு.

வைணவச்சான்றோர் ஆழ்வார்கள் பாசுரங்களை இசைத்தபடி முன்னர் போக திருமாலே அப்பாசுரங்களைக் கேட்டபடி, தொடர்ந்து போவார் என்றும், வேதமோ அத்திருமால் திருவடி நிலையைத் தேடியபடி தொடர்ந்து போகும் என்றும் பெருமாளின் தமிழ்ப்பற்றை அறிஞர் அகங்குளிரப் பாராட்டுவர். திருவரங்கத்தில் ஆதிசேடனே மணவாள மாமுனியாக அவதரித்து நம் மாழ்வார்ப் பாடலின் உரைகளை உரைக்க அரங்கன் படுத்தபடி கேட்டும் ஆனந்தித்தான் என்றும் நடந்தபடியைக் கூறுவர் சான்றோர். அத்தகையவனுடைய தங்கை பெரியநாயகியாம்.

## 23. பாவனையில் சமைந்த உரு

வானமுதற் பூதங்கள் ஐந்தி னுள்ளே
வளரொலிமெய் தொடுமுணர்வு வடிவு நீர்மை
மானமணம் ஐந்தொன்றாய் வடித்துக் கூட்டி
மகிழ்ச்சிமிகு பாவனையில் உருச்ச மைத்தே
ஞானியர்தம் தியானத்தில் கண்டு போற்றி
'நற்றேவி அம்பிகை, யென்றழைக்கத் தோன்றி
ஆனவெளி அண்டங்க ளடுக்கிக் காட்டி
அணுத்துகளென் றவைமாற்றி அமைப்பா யம்மா!'

இப்பாடலில் பஞ்சபூதவாதிகளின் மதம் சாக்தத்தில் ஒடுங்கி விரியுமாறு குறிப்பித்தபடியாம்.

வள்ளுவர் மானிடப் பெண்ணை ஐம்புலன்களின் தொகுதியாகச் சிற்றின்ப நோக்கில் காட்டினார். ஞானிகளோ அம்பிகையைப் பஞ்சபூதங்களின் தன் மாத்திரைகளிலிருந்து வடித்துத் தொகுத்துப் பேரின்ப நோக்கில் 'அம்பிகை' என்று உருவகித்துக் காட்டினார்கள் என்னுங்குறிப்பிற்று. பஞ்சதன்மாத்திரைகளின் புடம் போட்டெடுத்த யோக வடிவே அம்பிகையாகிய பெரியம்மா.

## 24. பிரணவப் பொந்து

பொன்னொளிர்செம் முயலாகிக் கலித்துத் துள்ளிப்
புகுமாறிங் கறியாத திகைப்புங் காட்டி,
மின்னலெனத் துடித்தோடி எட்டுத் திக்கும்
மிடைந்துநிறைந் திடுநீல வெளிபோல் காட்டிப்
பின்நடையும் முன்நடையும் பம்பரம் போல்
பீடுபெற நின்றுசுழல் திறனுங் காட்டித்
தன்னுரிய மரப்பொந்தாம் பிரண வத்துள்
தனைக்காட்டும் நாயகிதாள் தலைக்கொண் டோமே

நாயகி - இச்சொல் இங்கு அட்டமகாசித்திகளின் தலைவி என்னும் பொருளில் உள்ளது. 'புகுமாறிங்கறியாத திகைப்புங்காட்டி' என்பது அணுப்போன்றுருவெடுத்து நிற்பதாகிய 'அணிமா' வைக்குறிக்கும். 'எட்டுத்திக்கும்மிடைந்து' என்பது பேருருவங்காட்டலாகிய 'மகிமா' வைக்குறிக்கிறது. 'நிறைந்திடு' என்பது கனப்பொருள்களோடொன்றி நிற்பதாகிய 'கரிமா' வைக் குறிக்கிறது. 'கலித்துள்ளி' என்பது லேசாகி விடுவதாகிய 'லகிமா' வைக்குறிக்கிறது. 'மின்னலெனத்துடித்து' என்பது வேண்டும் வடிவைப் பெறுவதாகிய 'ப்ராப்தி' என்பதைக் குறிக்கிறது. 'நீலவெளிபோல் காட்டி' என்பது எங்கும் நிறைந்து நிற்பதாகிய 'பிராகாமியம்' என்பதைக் குறிக்கிறது. 'பம்பரம் போல்' என்பது அனைத்தையும் ஆளவல்ல சித்தாகிய 'ஈசத்துவம்' எபன்பதைக் குறிக்கிறது. தன் உரியபொந்து என்ற தொடரால் 'வசித்துவம்' என்பதைக் குறித்து எண் சித்திகளையும் கூறியவாறாம். தாள் + தலை = தாடலை - என்னும் தத்துவ விளக்கமாம்.

## 25. தேரேற்றப் பவனி

இற்றைநாள் விழாஎடுப்போர்க் கினிய முன்னோர்
இகலவிக்குங் கணைமறவர் வணிகர் போற்றும்
கொற்றவையாள் அறங்காக்கும் அம்ப லத்தார்
குலதெய்வ மெனக்கொண்டு கோயில் கண்டே
நற்றமிழர் கடப்பாட்டை நாட்டும் பாலை
நாட்டாராய் அணிவகுத்திவ் வுலகோர் போற்ற
வெற்றிதரும் தேரேற்றப் பவனி கண்டார்
வீடெல்லாம் பதினாறின் விளக்கம் அம்மா!

இகலவிக்குங்கணை :- வல்லம்பர் விடும் அம்பு வருணாத்திரம் போன்று பகைமை நெருப்பை அவித்தழிப்பதாம். தத்துவக் கண்ணோட்டத்தின்படி வல்லம்ப தத்துவத்தை விளக்க முண்டகோபநிடதம் வழிகாட்டுகிறது. அஃதாவது 'தியானிப்பவன் ஆன்மா அம்பு ; பரமாத்மா குறி ; பரமாத்மாவில் தன் ஆன்மா முற்றிலும் இரண்டற்று இணைதல் குறியும் அம்பும் ஒருநேரில் அமையச் செய்து அம்பு குறியில் மறைந்து போதலாம்' என்றுரைக்கின்றது. ஆரம்பித்த வரலாறு தத்துவவடிவில் நிலைகொள்ளும்போதுதான் அழியாத பெருமைக்குரிய புகழாகிறது.

கடப்பாடு - உலகநடையறிந்து நலம்புரியும் ஒப்புரவாகும்.

## 26. நாட்டார் சபதம்

பெறும்பேறு பதினாறும் இறைவி உன்பால்
பேச்சின்றிப் படைத்திடுவோம், அபயந் தந்தால்
எறும்பேறிக் கடிக்கவிடோம் எங்கள் அம்மா
ஏரடிக்கும் சிறுகோலால் உன்பேர் சொல்லி
வெறுங்கோடு போட்டாலும் தாண்ட மாட்டோம்
விதிக்கோடாய், இமயமிசை விளங்குங் கோடாய்
அறங்கோடா நெஞ்சத்தில் அழுந்துங் கோடாய்
அருள்கோடா யடிபோற்றி அமைவோம் வாழி!

பதினாறுபேறுகள்; புகழ், கல்வி, வலிமை, வெற்றி, நன்மக்கள், பொன், நெல், நல்விதி, நுகர்ச்சி, அறிவு, அழகு, பெருமை, இளமை, துணிவு, நோயின்மை, வாழ்நாள்.

கோடு- பெரிய நாயகியின் பெயரைச் சொல்லி குறுக்கே ஒரு கோடு போட்டால் போதும். அதனை யாரும் மீறமாட்டார்கள். விதியானது ஒருகோடு போட்டது போல. அதன் உயர்வு வானளாவிய இமயத்தின் சிகரம் போன்று மேம்பட்டது. தருமத்துக்கு முதலிடம் தந்து அத்தருமமானது தவறாதமைத்த மனத்தின்கண் தெய்வசாட்சியாக அழுத்தமாயமைந்த சின்மயமாகிய கோடு.

அருள் கோடாய் - கருணைபுரிவதில் கோட்டமற்ற தாயே நீ கருணையூற்றாவாய் என்றபடி.

## 27. இணைந்த வாழ்வு

நாற்புறத்தும் கார்மேகம் நன்செய் ஊற்று
நளினமலர்க் கண்மாய்கள் அடர்ந்த தோப்புப்
பாற்பசுக்கள் எருமையிடை யிடையே நாரை,
பைம்புதரில் முயல்உடும் பு பறவாப் புட்கள்

நோற்பவர்க ளிடும்பொங்கல் வழிபாட் டோசை
நோக்கினிய ரிடுங்குலவை, குயில்கள் குக்கூ
ஏற்புடைய விருந்தோம்பல் செவ்வாய் வெள்ளி
எழிற்பெரிய நாயகிபால் இணைந்த வாழ்வே!

ஊற்று - தோண்டுமிடமெல்லாம் நீரூற்றுக்கள் குபுகுபு வென்று கொட்டும். பாற்பசுக்கள் - முரட்டுக்காளையரும் பெரியநாயகியின் பெயர் சொல்லி நெருங்கினால் நலம் புரியும் பாற்பசுக்கள் போல் இனியராவர். அறுவடைக்குப் பின் அரிதாளையுண்டு அசைபோடும் எருமை அருச்சகரையும், நாரைகள் அவர்பூசனையை நோக்கி மெய் மறந்தபடி சூழும் உபாசகரையும் குறிக்கும். முயல் - மகிழ்ந்து துள்ளும் இன்ப உணர்வின் சின்னம். உடும்பு - பற்றியன நெகிழவிடா வைராக்கிய சித்தம் ; பறவாப் புட்கள் கௌதாரி முதலிய மந்திர தந்திர கணிதம் சோதிடம் வல்லாரைக் குறிக்கும். வழிபாடு - வாரவழிபாடும் நித்திய நைமித்தியப் பூசனைகளும்.

## 28. தாய் நோக்கு

ஓவியங்கள் உயிர்பெறும்உன் நோக்கைப் பெற்றால்;
உலர்புல்லும் வச்சிரத்தின் படையாய் ஓங்கும்.
நாவியங்கு சொல்லெல்லாம் உன்முற் றத்தே
நல்லபடி நடப்பதற்கு விரிச்சி யாகும்.
ஈவென்று வலியானை விரட்டி யோட்டும்
இணையில்லா அபிடேகப் பால்கு டித்தே!
தாவென்னும் கையேந்தி வள்ளல் ஆவன்
தருவாகிப் பட்டமரம் தழைக்கும் அம்மா!

'எழுதிய சித்திரங்களும், காய்ந்த தருப்பைப்புல்லும், பொருள் புரியாதபடி பேசும் மழலைச்சொற்களும், அருவெறுப்புத்தரும் ஈக்களும், 'தா' என்று கையேந்திப் பிடுங்கித்தின்னும் ஆண்டிகளும் நேர் எதிர்த்தட்டில் அமைந்து உயர்வூட்டும் சிறப்புப் பொருள்களாகும் நம் பெரியநாயகியின் சந்நிதியின் முன்னர்' என்னும் குறிப்பிற்று.

பட்டமரம் - வாழ்ந்து கெட்டவர் தருவாகித்தழைக்கும் - மீண்டும் வாழ்வு பெற்று மிக்க உபகாரிகளாகத்திகழ்வர்.

விரிச்சி : அசரீரி வாக்கு;

## 29. திலகங்கள்

பரிதிகதிர் முடிசுமக்கும் கரும்பின் ஈட்டம்
பாளைமதுக் குடம்சுமக்கும் பெண்டிர்க் கொப்போ
திரிகொளுத்தித் தொழுகின்ற மாவி ளக்கில்
தீராத வினையுண்டோ அமுதம் ஒப்போ
பெரியவளே! அண்டபகிரண்டம் உன்றன்
பிறைநுதலிற் சிறுதிலகம் ; நீயோ தொண்டக்
குரியவரின் புருவநடுத் திலகம் ஆகி
ஒளிர்கின்றாய்! உன்பெருமைக் கொப்புண் டாமோ

அந்தி ஒளியில் ஒவ்வொரு மதுக்குடமும் பிரகாசிப்பது சூரியன் ஒளிர்வது போலாம். அந்த மதுக்குடத்தைச் சுமந்து செல்லும் ஒவ்வொரு பெண்ணும் கரும்பு போன்றவளாவள். கரும்பு சூரியனைச் சுமப்பது போல் ஒவ்வொரு பெண்ணும் மதுக்குடத்தைத்தலையில் சுமக்கிறாள். பெரியநாயகி உலாவரும் தேரின் பின் இக்காட்சி இன்பம் நல்கும். திலகம் - அண்டபகிரண்டம் பெரியநாயகியின் நெற்றித்திலகமாக அடங்குகிறது. ஆனால் பெரியநாயகியோ சக்தி உபாஸகர் புருவ நடுவிற் குங்குமத் திலகமாக அமைந்து அருள்கிறாள்.

## 30 நற்றாய்

வசியமொடு மோகனஉச் சாட னங்கள்
 வன்மைமிகு தம்பனம்பே தனங்கள் கண்முன்
ஒசிவின்றி வரச்செயும் ஆகருட ணத்தோ
 டுறுபகைவித் வேடணம்மா ரணங்கள் எட்டும்
இசிவுடைநோய் அரசியலில் தனியார் வாழ்வில்
 இணைக்கின்ற தன்னலப்பேய் இரிய ஓட்டி
நசிவுபெறச் செய்குந்தப் படைகொள் நற்றாய்
 நல்லறங்கள் வளர்க்குந்தாய் நமதின் வாழ்வே

வசியம் - மூலிகைகளும் கருக்களும் சேர்ந்தமைத்தமையினால் வசமாக்கல்; உச்சாடனம் - தேவதைகளைப்பகைவர் மீது ஏவுதல் ; தம்பனம் - இருந்த நிலையிலேயே இருத்திப்பெயராதபடி செய்தல் ; பேதனம் - நட்பைப் பிரித்தல். ஆகருடம் (ஆகருஷணம்) தான் நினைத்தது முன்வரச்செய்தல் : வித்வேஷணம் - பகைகொள்ளச்செய்தல் ; மாரணம் - மரணமுண்டாக்கல் - இவையெல்லாம் அரசியலுக்கு அமைந்த வலிப்பு நோய்கள் போல் அமைந்து உலகினரை வருத்திய வண்ணம் உள்ளன. தனியார் பேராசையின் விளைவுகளாகவும் உள்ளன.

இரிய - கெட்டோட ; ஒசிவு இன்றி - முனைமுறியாமல்.

## 31. சரணம் அம்மா!

மத்தளம்சல் லிகைஉடுக்கைப் படகம் பம்பை
 மாமுழவம் தவில்முழக்கம் புளகித் தேற
எத்திசையுங் களியேற எண்ணில் தீபம்
 ஏந்தியஓங் காரமென இலங்கி ஏறப்
பத்தொடும்எண் கணத்தர்முப் பத்து மூவர்
 பரிமள நற்றூபமெனப் படர்ந்தே யேற
சக்திமய மென்றிருகைச் சிரசில் ஏற
 சாட்டாங்க மாய்ப்பணிந்தோம் சரணம் அம்மா

பதினெண்கணக்கர் முப்பத்து முக்கோடிதேவரும் நறுமணப்புகையாகிய தூப வடிவமாக வந்து பெரியநாயகியைச் சூழ்ந்து அசைந்தாடி ஆனந்தமுற்றுத் தரிசிப்பதாக ஐதிகம். தவில் துரிதகாலத்தில் முழங்கும் முழக்கும் மணியோசையும் கற்பூரார்த்தியும் சக்தி உபாசகர் உளத்துணர்வு வெள்ள அலைகளும் மெய்சிலிப்புமாகிய தெய்வக்காட்சிச் சூழ்நிலையானது, அங்கு வந்து வழிபாடு செய்தவர்கட்குப் பேரின்ப தரிசனமாகக்காட்டும். அம்மா! – என்ற இச்சொல் உன்உரிமைச் சுற்றமாகிய எங்களைக் கைவிடாதே கொள்க – எனும் மந்திரமாகும்.

## 32 தவ நெருப்பு

விண்முழுதும் திருமுடியாய் ஒளிரக் கொண்டே
 வேதவொலி யடங்கியதிற் கரைய வைத்தாய்
மண்முழுதும் புனலூறிச் சூழ வைத்தாய்
 மனத்தவமே நெருப்பாக மகிழ்ந்தா யம்மா

கண்ணகியை மகளாக்கி நீதி காக்கும்
கடும்புயலாய் அங்கங்கே காட்சி தந்தாய்
எண்ணமெனும் தேனீக்கள் மொய்க்கும் பூவாய்
இணையடிகள் தலைக்கொண்டோம் எங்கள் தாயே

சப்தங்கள் பிரணவத்திலடங்கும், பிரணவமோ வேதத்தின் முளை, வேதமோ ஆகாசத்தில் கரைந்துள்ளது.

நீதி கற்பு, அறம் முதலிய காக்கும் திறனுடையார் புரியும் புரட்சிகளிலெல்லாம் பங்குபற்றிய உணர்ச்சிப்புயல் வடிவம் அம்மைவடிவமே. தேனூட்டும் பாவனையில் தேனீக்களைத் தன் மேற்படியவைத்துத் தன்னடியார் அறியாமலேயே அவர்கள் பாதங்களில் மகரந்தப் பொடிகளாகிய படைப்பாற்றலை ஒட்டும்படி செய்து மேலும் மேலும் மலர்களில் படிவித்து உலகம் வாழக் காய் கனிகளைப் பரப்பியருள்வாள் – என்றபடி.

## 33. கற்பூரத் தீபப் பூ

அண்டவெளித் தகழியிலே ஆடல் காட்டும்
ஆனிப்பொன் னலரிப்பூ அன்போ டேந்தும்
பெண்டிர்கைக் கார்த்திகைப்பூப் பிறக்கும் பூவாம்
பிறைமாடச் சண்பகப்பூ, எட்டுத் திக்கும்
தண்டனிட மதுக்குடமாம் தவிசில் ஏறித்
தனைக்காட்டும் பாளையெனத் தாங்கு மன்பு
கொண்டருளுங் கற்பூரத் தீபப் பூவாம்
குலவிளக்கின் அடிப்பூவைக் கும்பிட் டோமே.

அண்டமே அகல்விளக்காக ஆவரணக் கடலே நெய்யாக ஊழித்தீயே சுடராக அமைந்த அமைப்பில் அந்தச்சுடரைப் பொன்னலரிப்பூவாக உருவகித்து பெரியநாயகியின் திருமேனி வடிவமாகக் காட்டியபடியாம். மாடத்தேற்றிய விளக்குக்கு உவமையாகப் பெண்கள் கையால் ஏற்றிவைத்த தீபமாகிய சண்பகப்பூ எனப்பட்டது. எண்ணிலா அரும்புகளாகிய அண்டங்களின் தொகுதியின் திருஉருவே பெரியநாயகியாவாள் என உணர்ந்த உணர்வின் படிவமே பாளை. மகாசக்தி மைந்தர்களாகிய நாம் வணங்கும் வணக்கத்தில் பிரபஞ்ச முழுமைக்குமான வாழ்வு பொதிந்துள்ளது.

## 34. பூக்குவியல்

ஒப்பரிய தாயே உன் தீப நோக்கால்
ஓடிவிடும் தீவினைகள் நலங்கள் சூழும்
தப்புடைய மகிடன்றன் வெட்டுப் பட்ட
தலையோ உன்வாள்வீச்சின் தகுதி பாடும்
கொப்புளித்த புயக்குருதி அலரிப் பூவாய்க்
குவிந்தநிலை உன்சூலக் குணங்கள் பாடும்
எப்படியும் நீயேதான் சரணம் அம்மா!
எழிலார்ந்த மாகாளி எங்கள் தாயே!

இப்பாடல் வயல் நாச்சியம்மனைத் தொழுது கொண்டிருக்கும் போதே வேறோரிடத்தில் நிதரிசனமாகக் கண்டது நினைவுக்கு வந்ததும் பாடியது ; அஃதாவது ; பள்ளத்தூர் பெரியார் சு. பெரி. இராமசாமி அம்பலம் M.A. அவர்கள் தம் குலதெய்வமாகிய மாகாளியம்மைக்குக் கற்பூரங்காட்டிக் கொண்டிருக்கும் நிலையில் அருளாவேசத்துக்காளாகித் தாய் முகத்தைத் தன் முகத்தில் காட்டியருளினார்கள். அப்போது தீபநோக்கு என்னும் தொடர் உதயமாயிற்று. அத்தொடர் இப்பாடலாக வயல் நாச்சியம்மன் திருமுன் தொடர்ந்தது. வாழ்க! வயல்நாச்சியம்மை அடியார்கள். வண்ணம் ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் ஸ்ரீமதே நாராயணாய நம.

## 35. நளினபதம்

கொற்றவையே நடுநிலையர் குலக்கொ முந்தே
கொடியோர்க்குக் கொடியவளே நல்லோர் வாழ்வுக்
குற்றவளே திரிசூலம் சுழன்ற போதில்
உடன்சுழன்ற அண்டங்கள் ஓய்ந்த துண்டோ
பெற்றவளே ஐந்தொழிலும் உவந்து செய்யும்
பெரியவளே! உன்பெருமை பேசப் போமோ
நற்றவங்கொள் சிவனார்க்குச் சக்தி யூட்டும்
நளினபதம் தலைக்கொண்டோம் நலம்கொண் டோமே!

நடுநிலையர் - ஐந்திணைப் பகதியில் நடுவு நிலைத்திணையாகிய பாலைநிலத்துக்குரிமை பூண்டு வாழ்ந்த, விடலை, காளை, மீளி, மறவர் எனப்படுவாரோடொப்ப உயர்ந்தோராகிய சேர்வை, நாட்டார், அம்பலம், வல்லம்பர் ஆகியோரைக் குறிக்கும் பொதுச்சொல் நடுநிலையர் என்பதாம். இவரே நாட்டார் என நீதி வழங்கும் நடுநிலையராயினர். இப்பாடலில் சாக்தம் எனப்படும் சக்தித்துவம் ஒக்கமுற்றுள்ளது. ஐந்தொழில் ; படைத்தல், காத்தல், அழித்தல், அருளல், மறைத்தல் ஆகியன.

## 36. உணர்த்தும் தாய்

ஒக்கமுறும் சொல்மகிமை உணர்த்தும் தாயே!
ஓங்கலிடை விளக்காக்கி அணையா தென்றும்
ஆக்கநிலை ஏற்படநீ அருளல் வேண்டும்
அஃதுடனே நடைபெறவும் வேண்டு மம்மா!
தேக்கியபே ரின்பத்தின் துளிக ளாகித்
தித்திக்கும் ஐந்திணையும் புலன்கள் ஐந்தில்
ஊக்குவதும் உன்அருளின் பாடல் அம்மா!
உத்தமியே! உலகனைத்தும் ஈன்ற தாயே!

ஓங்கல் - மலை ;

சக்திமைந்தர்களாகிய நாம் 'வாழ்க்கை வாழ்வதற்கே' - என்னும் தொடரைப் பண்பாட்டின் தொடராகவும் பகவதியின் திருவருட்பிரசாத மாகவுங்கொண்டு வள்ளுவர் நெறியில் அறம், பொருள், இன்பம் ஆகியவற்றை ஏற்றுக்கொண்டவராவோம்.

உத்தமி ; உணவனைத்தும் சுவையால் மேலோங்கச் செய்யும் உப்பே போல் - தன் வடிவத்தைத் காட்டாமல் அனைத்திலும் அருள் வடிவமாகக் கரைத்துச் சுவையூட்டுபவள் என்னும் பொருளில் உத்தமி எனப் பெற்றாள் நம் பெரியநாயகி.

## 37. குங்குமக் காப்பு

கலந்தவளே! பூதங்கள் ஐந்துள் ஐந்தாய்க்
கனிந்தவளே தத்துவநற் காட்சி நல்கி
வலந்திகழும் திரிசூலம், நேமி, சங்கம்,
வாள், குந்தம், தாமரையுங் கிளியும் கொண்டாய்
குலைந்தவரைத் திருத்துவைமெய் குலையா ஞானக்
குணத்தவரின் குடியிருப்பே! அட்ட சித்திக்
கலைந்தவருன் குங்குமத்தை அணிவ தொன்றே
ஆயிரமா சித்திகட்கிங் கமைந்த காப்பே!

கலந்தவள் ; உலகில் புதிது புதிதாகப் பலப்பல வடிவங்களைப் பணைக்கவைக்கும் பஞ்சபூதங்களின் கூட்டுக்குள் கூட்டாய் ஒளிர்பவள் என்பது பொருள். கனிந்தவள் - எப்படி எப்படி உருவெடுத்தாலும் முடிவில் இனிமை பயக்கும் நலத்தினள் என்றபடி. குங்குமம் - புருவ நடுவில் சச்சிதானந்தச் சூரியோதயமாகத் தோன்றி என்றுங் கூம்பாத மனமலர்ச்சி ஆன்ம மலர்ச்சி சத்திய மலர்ச்சி சக்திமலர்ச்சி தோன்ற விளங்கும் திலகமாகும்.

## 38. இராஜஇராஜேஸ்வரி

ஐயிரண்டு கரங்களிலே ஒன்றில் பாசம்,
அடுத்தடுத்தே அங்குசமும், அலராம் அம்பும்,
பையவளைத் திடுகின்ற கரும்பு வில்லும்,
படிப்பூட்டும் சுவடி, செப மாலை, தாங்கிக்
கையிரண்டும் பெருவீணை, அபயத் தோடு,
காட்சிதரும் வரதக்கை, யிரண்டு மாக
ஐயையென அரசிகளின் அரசி யாகி
அருளாட்சி செய்துவக்கும் அம்மா போற்றி!

பெரியநாயகி தாமரைகள் பூத்த கண்மாயூடு தன் உரிமைச் சுற்றமாயமைந்த மக்கள் புடைசூழத்தண்ணிய அருட்பெருக்கில் நீந்தியபடி வந்து நாட்டார் மடத்துத்தன் பிள்ளை முற்றத்துத் திருவோலக்கங் கொள்வாள் பள்ளத்தூருக் கெழுந்தருளி. கட்டிளங்காளையர் அவ்வம்மையைத் தேரினின்றிறக்கி நாட்டாரிடைத் திருவோலக்கங் கொள்ளச் செய்து நடாத்தும் வழிபாடு கண்பெற்ற பயனாகும். ஐயை எனும் சொல் கொற்றவையாகிய பெருந் தலைவிப் பெரியம்மா என்னும் பொருட்காம்;

## 39. பசும்பொன்மேனி

புனல்நிறைந்த கண்மாயுன் அருட்கண் நோக்கைப்
பூக்களெனக் காட்டிப்பூ பாளம் பாட
அனல் வடிவச் சூரியன்-உன் அன்பில் மூழ்கி
ஆனந்த பைரவியின் ஆடல் காட்டும்
கனங்குறைந்த நீராவிக் குன்றாம் மேகம்
கடகடத்துத் திரிசூல மின்னல் காட்ட
மனங்கனிந்த தாயே உன் பசும்பொன் மேனி
மார்பளவும் பயிர்சூழ்ந்த வயல்காட் டும்மே!

பூபாளம் பாடல் - உதயமாகும் சூரியனை முன்னிட்டுக்கொண்டு பெரியநாயகியின் சைதன்யம் படிந்த பொருள்களை எழுப்புவதாகப் பாவனை செய்து பாடும் பண் அமைந்த பாடலாகும், கனங்குறைந்த நீராவிமலையே மேகமாகக் காட்சியளிக்கிறது. வினையகன்ற உயிர்களே விண்பரவுமியல்புடையன என்னுங் குறிப்பாகும். வயலே திருமேனியாகக் கொண்டவள் என்பதுணர்த்த மேனி வயல் காட்டும் என்றிணைத் துரைத்தல் பொருந்துவதாகும்.

## 40. செந்தமிழர்ப் பாளை

சந்தனமும் அகிற்பெருக்கும் ஆனைக் கோடும்
சார்ந்தகொடி மிளகும்தேன் அடையு மாக
உந்திவரும் அருவியென மதுக்கு டங்கள்
உச்சியிற்கொண் டருள் முகங்கள் தகத கக்க
அந்தரியுன் அருளேறிப் பாலர் பெண்டிர்
ஆடவர்கள் ஆர்ப்பரித்து வருதல் கண்டோம்
செந்தமிழர்ப் பாளையிலே சேவை காட்டும்
சீரார்ந்த கொற்றியுனைச் சேவித் தோமே!

சாமியாடிகள் தொடர்ந்துவர ஒவ்வொரு ஊராரும் மதுக்குடங்களேந்தி, வர வர அருள் ஏறி உணர்ச்சிமிக்க நடையுடன் ஒன்றி ஒருமுகப்பட்ட மனத்தினராய் வயல் நாச்சியம்மைக்கோயிலை வலம்வரும்போதுகாணும் காட்சியை அருவியின் செயலோடு ஒப்பிட்டுரைத்தபடியாம். சநதனம் பெண்டிராகவும், அகிற்பெருக்கு ஆசையாகவும், யானைக் கோடு இளைஞராகவும் மிளகுக்கொடி சிறுமியராகவும் தேனடை குழந்தைகளாகவும் கொள்க! பாளை - நிறைந்து பரந்த உள் ஆற்றல் முனைந்து வெளிப்பட்டு முகங்காட்டி நிற்றலை உணர்த்தும் பாவனையின் வடிவமே பாளை.

## 41. பதினாறின் பொலிவுடையாள்

மிகுமுணர்வில் அன்புருவைச் சிவமாக் காட்டும்
மேலவளை அருள்நிழலாம் இருள்போர்த் துள்ளே
தகதகவென் றொளிர்கின்ற தணல்கொ முந்தைத்
தகுதிநிறை சொற்றொடரில் தன்னைக் காட்டும்
பகவதியைப் பதினாறாப் பொலியுந் தாயைப்
பதின்கரங்க ளுடையபரா பரையை ஞான
முகமுடைய சத்தியமா முளரிப் பூவை
முடிவற்ற முதற்பொருளை யுளங்கொள் வோமே!

உணர்வு என்பது மேலும் மேலும் பொங்கி வழிந்தபடியுள்ள செயற் பண்பாகும். அவ்வுணர்வின் சக்தி வெளிப்பாடே சிவம் ஆதலின் 'அன்பேசிவம்' என்பர் ஆன்றோர். பெரியநாயகியாகிய பாளையினுள் அடங்கிய ஒரு கதிரின் தோற்றமே சிவம் எனலாம்.

பதினாறு வகையான உபசரணைகட்கும் உரியவளாகத்திகழும் பொலிவுடைய சோடகி என்றபடி, சூரியனின் வெப்பக்கதிர்கள் அருள் நிழல் போர்த்த தணலாதலின் தாவரங்கள் பசுமை இலைகளும் பன்னிறமலர்களும் காய்கனிகளுமாகப் பயன் அளிக்கின்றன. இதுபோன்ற கருணைக்கனல் வீசும் இயல்பின் பெருக்கமே பராசக்தி.

## 42. ஐம்பூதப் பயன்

சத்தியினை நிலைமைகளாக் காட்டு தற்குச்
சந்தனப்பூச் சிடுகின்றோம்; மலர்க ளிட்டே
சுத்தவெளி அவளென்று துதிக்கின் றோமால்;
சூழ்தூப தீபத்தால் காற்றும் தீயும்
உத்தமியாள் வடிவென்றே உணர்த்து கின்றோம்
ஊற்றமுத உருவென்றே தீர்த்தங் கொண்டோம்
பக்தியோடு திருப்பாதம் தலையிற் கொண்ட
பாவனையில் ஐம்பூதப் பயன்பெற் றோமே!

நம்முடைய பூசனை முறைகள் அறியாதாருக்கு ஏதோ சில்லறைச் சடங்குகள் என்று படலாம். ஆனால் நாமோ நம்மனத்தில் பிரபஞ்சத்தை அடக்கிச் சொல்லும் சொற்களையும் கொண்டவர்களாவோம். ஒரு மலையிருந்த இடத்தினின்றும் அதனைப் பெயர்த்து வைத்துவிட்டாலும்விடலாம். நம் சடங்குகளின் அமைப்பைப் பெயர்த்து வைத்தல் இயலாததொன்றாகும். ஒவ்வொரு செயலினும் தத்துவக்கோட்டைகளின் திட்பநுட்பங்களைக் காணலாம். மூடநம்பிக்கைகள் புகுதலும் உண்டு. காலப்போக்கில் அவை தத்துவ வடிவங்களில் ஒன்றிப்போவதும் இயற்கையே. மனங்கொண்டது மாளிகை.

## 45. மெய்நாடிப் பூத்த பூ

அடங்காது மேன்மேலும் புடைத்து விம்மும்
அண்டங்கள் பலகோடி அடக்கும் பூவாய்
இடங்கால எல்லையெலாங் கடந்த மாய
இருட்சேற்றில் எழுந்ததுபோல் காட்டி என்றும்

புடம்போட்ட யோகத்தில் புருவ நாப்பண்
பொய்யறியா மெய்நாடிப் பூத்த பூவாய்
நடங்காட்டிச் சிரிக்கும்பூ உருகிப் பாடும்
நன்னெஞ்சில் மணக்கும்பூ நம்மம் மாவே!

அண்டங்கள் எவ்வளவுதான் விரிந்தாலும் பூத்த அண்டங்களனைத்தையும், தான் சிறுபூவாகத் திகழ்ந்து தன்னில் அடக்கிக்கொள்வாள். தன் தமையன் உலகனைத்தும்; உண்டும் ஓராலிலையில் உறங்கும் அகடிதகடனா சாமர்த்தியம் போலே. யோகியரின் புருவத்தின் நடுப்பகுதியாகிய ஆத்மபீடத்தில் அடங்கியுள்ள மெய்ம்மை நாடியாகிய கழிமுனைநாடியில் பூத்த பூவாக நம் பெரியநாயகியைப் பாவனை செய்து சொன்ன சொல்லே 'பூ' என்பதாம்.

சிவன் அடக்கமின்றிக் காலையுயர்த்தி வென்றது போல் தோற்றான். சக்தியாகியதான் காலையுயர்த்தாமல் அடக்கத்தோடு நடந்து தோல்விபோல் காட்டி வென்றதும் நாணக்கொடியுயர்ந்ததும் காட்டும் சிரிப்பு.

## 44. பண்புகளின் கதிர் வீச்சு

முழுமதியின் குளுகுளுப்புப் பளிங்கின் தூய்மை
முல்லைப்பூக் கற்புமணம் மூன்றுங் கூடி
எழுநதியின் பெருக்காகி ஆர்ப்ப ரித்தே
எண்டிசையும் பரவுதல்போல் தாய்மு கத்தில்
செழுமையுடன் கதிர்வீசும் சிறப்புக் கண்டார்
சிந்தனையில் பராசக்தி சேர்க்கைக் கண்டார்
பழுதுபடும் செயல்நீங்கிப் பண்பால் ஓங்கிப்
பசும்பொன்னின் மலராகிப் பயன்பெற் றாரே!

குளிர்ச்சிக்குப் பேர்போனது சந்திரன் ; பரிசுத்தத்துக்குப் பேர்போனது பளிங்கு; சிறந்த மணத்துக்குப் பேர்போனது முல்லைப்பூ ; முல்லைப் பூவை பெண் உலகத்தின் கற்பு மணத்துக்கு எடுத்துக்காட்டாய்ச் சங்கப் புலவர் கூறுவர். இம் மூன்றின் பண்புகளும் ஒன்று கூடிய பெருக்கமே சப்த நதிகளின் பெருக்கே போல் பெரியநாயகியின் திருமுகத்துப் புன்முறுவலாகக் கதிர் வீசி வாழ்வு ஒளியைப் பரப்பும் என்றபடி, இப்படிப்பட்ட பாவனையோடு தாயைத் தரிசிக்கத் தரிசிக்கக் கல்லும் மலராகி அம்மலரும் பொன் மலராகி மணக்கும் என்றபடி.

## 45. நிலைத்த காப்பு

உருப்பெற்ற பொன்முயலாய் நடம்பு ரிந்தே
உணர்வூட்டி வல்லம்பர் தொடர ஓடிக்
கருப்பொருளாம் பாலைமரப் பொந்தில் புக்கே
கலைப்பொருளாய்த் திருமேனி காட்டித் தந்தே
விருப்புற்று முத்தலைவேல் பிடாரி காண
விளக்கமுற முகங்காட்டி வழிபா டேற்று
நெருப்புற்ற பஞ்சாக வினையெ ரிக்கும்
நிர்மலைபொன் னடிக்கமலம் நிலைத்த காப்பே!

உரு-அழகு, நிறம், அச்சம் ஊட்டல் எனப் பொருள்படும்.

விளக்கமுற முகங்காட்டி-பிடாரி எந்தத் திசையில் தன்னைப் பிரிந்த ஏக்கத்தோடு இருக்கிறது என்பதனைக் காட்ட பெரியநாயகி திரும்பியபடி இருந்தாளென்பதும், தன்முன் பிடாரி அமைக்கப்பெற்றதும் பிடாரியின் முன் அமர்ந்து இப்பொழுதுள்ள மரபுப்படி அமர்ந்திருந்தனள் என்பதும் வரலாறாகும்.

நிலைத்த காப்பு-இப்பாடலைக் காப்புக் கட்டும் போதெல்லாம் நினைவிற்கொண்டு வாய்மணக்கப் பாடுதல் ஏற்ற மரபாகும்.

## 46. கிழங்கும் பூவும்

மாறுபடு பொருளூடு மாறா ஒன்றாய்
மகிழ்வோடு வருத்தங்க ளிடையில் நிற்பாய்
வேறுபடு பொருட்பெருக்கின் இடைக லந்தே
விதித்தவிதி தான்ஒன்றே யாகி நிற்பாய்
சேறுபடு கிழங்குபல வடிவ முற்றும்
சீர்மிக்க கமலப்பூ வரிசை யாகி
வீறுபடப் பகற்பொழுதில் திகழு மாப்போல்
விளக்கமுறச் செய்தெம்மை யாள்வா யம்மா!

மாறுபாடு என்பது நஞ்சும் அமுதும் போலே. வேறுபாடு என்பது உளுந்தும் பயறும்போலே. பகற்பொழுதில்கூட தாமரைக்கிழங்கானது நீர்நிலையடியில் இருள்மண்டிய பகுதியில் இருளோடு இருளாய்க்கிடக்கும் என்னுங் குறிப்பு தமோகுணங்களின் செறிவால் திணிந்த மனம் வினைகளின் குப்பியாக அழுந்திக் கிடக்கும் நிலையைக் குறிப்பதாகும்.

ஆணவமலத்தை அழிக்காதபடி வைத்த நிலையிலேயே தன் அருட்பரப்பில் ஆன்மாக்களை ஏற்றிவைத்து மலர்ச்சிபெறவைப்பாள் என்பது 'கமலப்பூ வரிசை' - எனும் தொடரின் குறிப்பாம். இடைநிலை - அழித்தற்கும் படைப்புக்கும் நடுவே உள்ள திதி எனும் காத்தல்நிலை.

## 47. முதலுங்கருவுமானாள்

தூயதனிப் பேரறிவோ இடம்கா லத்தைத்
தொட்டபினர் முதற்பொருளென் றுள்முன் நிற்கும்
தாயெனநீ மரமுதலா உயிர்ப ரப்பித்
தக்கதமிழ்க் கருப்பொருளென் றழைக்க வைத்தாய்
வேயிசைக்கும் அண்ணனுக்கு முல்லை தந்தாய்
வேலெடுத்த மகனுக்கோ குறிஞ்சி என்றாய்
ஆயநில மிரண்டின்வெங் கொடுமை மாற்ற
அன்னைநீ பாலைமரத் தடிசேர்ந் தாயே!

பழந்தமிழ்க்குடிமக்களாகிய நாம் பண்டையோர் கொண்டமுறைப்படி சிந்தித் துணரக்கடமைப்பட்டுள்ளோம். நம்மொழியிலக்கண முனிவர்கள் பொருளை - முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் எனப்பகுப்பர்.
முதற்பொருள்- நிலமும் பொழுதுமாகும்.
கருப்பொருள் - தெய்வம், மக்கள், பறவை, விலங்கு, ஊர், நீர், பூ, மரம், உணவு, பறை, யாழ், பண், தொழில் - எனப்பகுக்கப்படும்.
இவையனைத்தின் இயக்கசக்தியே கொற்றவை எனப்பட்டு மையங்கொண்ட பகுதிதான் பாலை எனப்பட்டது. இவ்வழியினரே பாலைநாட்டார் ஆவர். வாழ்க பாலைத் தெய்வம்.

## 48. பதம் பார்க்கும் சூலம்

சொன்னாலே வாய்மணக்கும் 'அம்மா' வென்று
சுரந்திடுமே கால்நடைகள் பாலா றோடும்
பொன்னார்ந்த திருமேனி கண்ட கண்கள்
புனலார்ந்த மலர்சூழும் வண்டின் கூட்டம்

முன்னாகப் பின்னாக வந்து போகும்

முறைகேட்டைப் பதம்பார்க்கும் சூலங் கொண்டாய்

மன்னாதி மன்னர்தம் மகுடங் காக்கும்

மாமைந்தர் நாட்டாராய் மகிழ்ந்தா யம்மா!

பெற்ற தாயை அடிப்பவன்கூட, கைசலித்தால் 'அம்மா' என்று கூறி நோவிலிருந்து விடுதலை பெறமுயல்வான். இப்படிப்பட்ட தயாள தத்துவப்பெருக்கமைந்த தனிச்செல்லே 'அம்மா' என்றழைத்தபடி அமைந்த சொல். இந்த 'அம்மா' இயல்பு விரிவடைந்து பெரியம்மாவாகி வேலங்குடியில் கோயில் கொண்டருளியமை நாட்டார் தவப்பயனாகும். பார்த்தகண் பார்த்துப்பார்த்துப் பூத்துப் போகும்படியான சௌந்தர்ய லாவண்யத்துடன் திகழ்பவள் - மனம் வண்டுகளாகப் படிந்து நீங்காதபடி ரீங்காரமிட்டபடியிருக்கும் என்றபடி.

## 49. மகிழ் கன்னி

தானேதான் ஆனவளே தாயே அன்பில்

தங்குபொருள் பலகாட்டித் தாங்கும் சக்தி

வானார்ந்த வெளிமுற்றும் ததும்பிப் பொங்கி

வையத்தார் கண்காணும் வடிவில் வந்தாய்!

தேனார்ந்த ஒலிவெள்ளந் திரண்டெ முந்தே

தித்திக்கும் திருநாமம் நின்பேர் அம்மா!

மானூர்ந்து மகிழ்கன்னி! மறவர் வாழ்வே!

மலரடிகள் தலைக்கொண்டு மாண்புற் றோமே!

மானிடர் ஊனக்கண்கள் காணக்கூடிய சக்தி எவ்வளவோ அவ்வளவுக்குத் தன் ஒளிமேனியைச் சுருக்கிக் கொண்டு பாலை மரத்தடியில் காட்சியளித்தவள் பெரியநாயகி. ஒலிப்பெருக்கின் கருத்து வடிவமாயமைந்த மொழிகளனைத்துள்ளும் ஒப்பற்ற ஒலியமுதத் திரட்சி யாயமைந்த சொல்லே அம்மா என்றமைந்த ஏழ்புவனப் பொதுச் சொல் ஆகும்.

மான் : கொற்றவையின் வாகனமாகும். மானுக்குப் புல்வாய் என்னும் பெயருமுண்டு. கொற்றவையைப் புல்வாய் அம்மை என்று வழங்குவதும் உண்டு. வீரவழிபாட்டுக்குரியவள்.

## 50. நெஞ்சே போற்றி!

தனித்தனியே வணங்கியவர் தங்கள் இல்லம்

தங்குதவப் பயனாகு மகளென் றெண்ணிப்

பனித்துளியும் முத்துமெனக் கண்ணீர் சொட்டப்

பாலைநிலத் துரிப்பொருளாம் பிரிவுக் கேங்கி

இனித்திணையும் ஏகாதிங் கிருக்க வென்றே

இசைத்திடவே உலாப்போந்து மீள்வா யம்மா

நினைத்ததனை நினைத்தபடி நிறைவு செய்யும்

நித்தியமெய்த் தாய்போற்றும் நெஞ்சே போற்றி!

வாழ்க்கை இனிக்கவேண்டுமென்றே சேர்ந்தவர்கள் பிரிவதுபோல் காட்டிப் பின் சேர்ந்து மகிழ்ச்சிக்கடலில் திளைக்கிறார்கள். இப்படி மகிழ்ச்சிதரும் பிரிவைப் போல் சிறந்த மங்கலக்குங்கும உணர்ச்சி

வேறில்லையெனக் கண்ட தமிழர் பாலைத்திணைபற்றிறய பாடல்களையே பெருவாரியாக வழங்கினர். பெரிய நாயகியைப் பிரிய மனமில்லாதவராய் புக்ககத்துக்கனுப்பிவைக்கும் பிறந்தகத்தார்போல் மிகமிகச் செவ்விய மனநிலையைக் கண்டு வணங்கியோரெல்லாம் கொண்டு காட்சிதருதல் கண்கூடு. இப்படியாக நம்தாயை ஐம்பொன்வடிவில் வடித்துத்தந்த கலைஞர்க்கும் வணங்கத்தந்த வாழ்வினர்க்கும் அவள் இன்னருள் வழிந்தோடியபடி இருத்தல் வாய்மொழியாம்.

ஓம் சக்தி ஓம்சக்தி ஓம்

## 51. பாரோர் வாழ்க!

நாடெங்கும் நல்லாட்சி நடைபெற் றோங்க!
நதிகண்மாய் நிறைந்தெங்கும் விளைவு காண்க
வீடெங்கும் நெய்மணக்கப் பொங்க லிட்டே
விருந்தோம்பி அறம்வளர்க்க! விஞ்ஞா னத்தின்
ஈடில்லாத் துணைகொண்டே தொழில்பெ ருக்கி
ஏற்றுமதிப் பண்டங்கள் குவிக்க! இந்தப்
பாடெல்லாம் பராசக்தி அருட்பா டென்றே
பதம்போற்றிப் பணிகின்றோம் பாரோர் வாழ்க!

உலகில் நடந்த, நடைபெறுகிற, இனி நடைபெறப்போகிற அனைத்துவகைப் புரட்சிகட்கெல்லாம் கொற்றவையாகிய மாகாளிப் பெரியம்மாவின் கடைக்கண் நோக்கையே முதற்காரணமாகக் காட்டுவது நமது மரபு. இம்மரபைப் பாரதியார் -

'மாகாளி பராசக்தி உருசிய நாட்டினிற் கடைக்கண் வைத்தாளங்கே -
ஆகா வென்றெழுந்தது பார் யுகப்புரட்சி' என்று மாண்புறக் காட்டியுள்ளார்.



# பாவையர் மங்கலப் பாடல்

**சுவாமி சரவணபவானந்தர்**

**1. திருப்பள்ளி எழுச்சி** **பூபாளம்-ஏகம்**

**தொடர்நிலை**

ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை
அன்புடன் ஈன்றவளே! - தாயே!
பைந்தமிழ் மாலை யணிந்தவளே! திருப்
பள்ளி எழுந்தருள் வாய்!
சூரியன் தோன்றினன் சுடரொளி பரவின
துன்பந் தவிர்ந்திடவே - இந்தப்
பாரினில் அனைவரும் வாழ்ந்திடவே திருப்
பள்ளி எழுந்தருள் வாய்!
கோடானு கோடி மகான்களின் உள்ளத்தில்
குடிகொண் டிருப்பவளே! - இசை
பாடாது பாடிப் பரவுகின்றோம் திருப்
பள்ளி எழுந்தருள் வாய்!
பிரமன் முதலான தேவரும் வணங்கிடும்
பெரிய நாயகி அம்மையே - இன்று
பரம சிலாக்கியத் திருவருளுடன் திருப்
பள்ளி எழுந்தருள் வாயே!

**2. திருவலங்காரம்** **சிந்துபைரவி - ஆதி**

**தொடர்நிலை**

மஞ்சள் நீராட்டி மையிட்டு பொட்டிட்டு
மரகத உடை உடுத்தி - சகியே!
கொஞ்சும் சதங்கைகள் குலுங்க நம் நாயகியைக்
குணமுடன் அலங்கரிப் போம்.
நெற்றியில் கட்டிகட்டி நிறையணி பணிகளால்
நேர்த்தியாய்க் கொலு வமைப்போம் - சகியே!
சுற்றிவந் தவள்பதம் துணையென நிதம் நிதம்
தோத்தரித் தருள் பெறுவோம்.
தெய்வ மணங்கமழும் வாசனைத் திரவியங்கள்
தேடிப் படைத்திடுவோம் - சகியே!
உய்வதற் கொருவழி இதுவல்லால் வேறில்லை
உண்மை உணர்ந் திடுவீர்!
ஆச்சி வயல்நாச்சி என்றெல்லாம் அழைத்திடும்
அம்பிகை இவளல்லவோ! - சகியே!
பேச்சினிற் சிறந்தவள் பெரியவள் திருவருள்
பெருகிடத் தவங்கிடப் போம்.

**3. நலங்கு** **பைரவி-ஏகம்**

**தொடர்நிலை**

கம கம வெனவே தமிழ்மணம் கமழ்ந்திட
கனமிகும் நாச்சிக்கு நலங்கிடுவோம்! - மிக
விமரிசை யுடன்திரு வேலங் குடியில் புகழ்
விளங்கிடும் நாயகிக்கு நலங்கிடுவோம்!
சந்தனம் குங்குமம் சாந்து சவ் வாதுடன்
தனிமணம் குலுங்கிட நலங்கிடுவோம்! - தினம்
வந்தனை செய்பவர் சிந்தனை தனில் முன்
வாசனை வீசிட நலங்கிடுவோம்!
பொன்னும் மணியும் புனைந்தருள் ஒளிதரும்
புவனேஸ் வரிக்கு நாம் நலங்கிடுவோம்! - பாரில்
நன்னீர் எனச்சொலும் பன்னீர் தெளித்துமே
நம் பெரிய நாயகிக்கு நலங்கிடுவோம்!
வேலங் குடிவளர் மெய்யான தெய்வத்தை
வேண்டி நாம் நல்ல நலங்கிடுவோம்! - மென்
மேலும் உலகமெலாம் திருவருள் விளங்கிட
வித்தகி மலர்பாதத்தில் நலங்கிடுவோம்!

**4. திருவிளக்கேற்றல்** **மோகனம் - ஆதி**

**தொடர்நிலை**

செல்வம் கொழிக்கும் திருமகளே!
திருவிளக் கேற்றி வணங்கிடுவோம்!
கல்விக் கடலில் மூழ்கிடவே
கருணை புரிவாய் இளையவளே!
உலகம் செழித்திட வேண்டுமம்மா!
ஒளிவிளக் கேற்றி வைத்திடுவோம்!
இலகும் புகழால் சிறந்திடவே
இலக்குமி தேவி தயைபுரிவாய்!
தீப ஒளியின் தரிசனமே
தெளிந்தோம் மனமும் இதுதினமே
தாபம் அறவே துணைபுரிவாய்!
தாயே! பெரிய நாயகியே!
ஏற்றிய விளக்கால் இனிவிளக்கம்
எங்கள் உளத்தே தனிவிளக்கம்
போற்றிடும் திருவருள் புகழ்விளக்கம்
பொன்னும் பொருளும் மிகவிளக்கம்

**5. கும்மி** **உசேனி - ஆதி**

**தொடர்நிலை**

கும்மியடி! பெண்கள் கும்மியடி! - ஒன்று
கூடிக் கும்மி யடியுங்கடி!
செம்மனச் செல்வியை வேலங்குடி வாழும்
தேவியைப் பாடி யடியுங்கடி!
மத்தியில் மாவிளக் கேற்றிவைத்தே - அவள்
மகிமையைச் சொல்லி யடியுங்கடி!
தித்திக்கும் தேனென எத்திக்கம் போற்றிட
செந்தமிழ்ப் பாடி யடியுங்கடி!
கன்னியர் உள்ளம் களித்திடவே - நல்ல
கல்யாணி பாடி யடியுங்கடி!
அன்னிய மானவள் அல்லையடி - அவன்
ஆற்றலைப் போற்றி யடியுங்கடி!
மாதம் மும்மாரி பொழிந்திடவே - எங்கும்
மங்கலந் தங்கி விளங்கிடவே
ஏதும் குறைவிலை என்றே திருவருள்
ஏற்றத்தைப் பாடி யடியுங்கடி!

**6 கும்மி** **ஆனந்த பைரவி - ஆதி**

**தொடர்நிலை**

கும்மியடி பெண்கள் கும்மியடி கராங்
கோர்த்துக் கும்மி யடியுங்கடி!
செமமையாய் அம்மையின் சீர்பதம் பாடித்
தேடிக் கும்மி யடியுங்கடி!
வேலங் குடிவளர் வித்தகியைத் தினம்
வேண்டி கும்மி யடியுங்கடி!
சால நலந்தரும் பெரிய நாயகி
தன்புகழ் பாடி யடியுங்கடி!
ஆச்சி யெனும் வயல் நாச்சியின் வாசலில்
ஆனந்தக் கும்மி யடியுங்கடி!
பேச்சுக் கினியவள் காட்சிக் கெளியவள்
பெருமையைச் சொல்லி யடியுங்கடி!
கன்னியர் உள்ளம் களிப்புறவே செய்யும்
கண் மணியானவள் பெண்மணியாள்
அன்ன வயல் சூழும் பாண்டி நன் னாட்டினில்
ஆட்சி புரிபவள் அம்பிகையாள்!
வெள்ளி செவ்வாயினில் அள்ளி வழங்கிட
வீற்றிருக் கின்றனள் வாருங்கடி!
தெள்ளிய செந்தமிழ்ப் பாட்டினைக் கேட்டிடத்
தேட்ட முடையவள் பாருங்கடி!
சத்தி பக்தர் எனச் சாற்றும் நல்லோர்களின்
தனிப்புகழ் பாடி யடியுங்கடி!
சித்தி யெலாம்தரும் ஜென்மம் ஈடேறிடும்
திருவருள் தேடி யடியுங்கடி!

## 7. கோலாட்டம்

கானடா - ஆதி

### தொடர்நிலை

கோலடிப்போமே! அருட் கோலடிப்போமே! வேலங்
குடியமர்ந்தவள் புகழைப்பாடி கோலடிப்போமே!
காலடியில் வீழ்ந்தவர்கள் காலனைவெல்வார்! - தாயின்
கருணையினை உணர்ந்தவர்கள் கதைபல சொல்வார்!
புவனேஸ்வரி இவளேயென கோலடிப்போமே!
பொன்றாதுளம் நின்றாள் என கோலடிப்போமே!
தவஞானம் தருவாள் என கோலடிப்போமே! - பரா
சக்தியிடம் பக்தியுடன் கோலடிப்போமே!
நல்லவர்கள் வாழ்கவென கோலடிப்போமே! - பாண்டி
நாட்டில் நலம் சூழ்கவென கோலடிப்போமே!
தொல்லையெலாம் நீங்க வென கோலடிப்போமே! - தேவி
துணைபுரிய வேண்டுமென கோலடிப்போமே!
மறக்குலத்தார் சிறக்கவென கோலடிப்போமே! - வீரர்
வல்லம்பர் வாழ்கவென கோலடிப்போமே!
அறக்கருணை ஓங்கவென கோலடிப்போமே! - திரு
அருளென்றும் நிலைக்கவென கோடிப்போமே!

## 8. ஆடவாரீர்

பிகாக் - ஆதி

### தொடர்நிலை

ஆடவாரீர் பெண்டீர் ஆடவாரீர்! - திரு
அம்பிகையின் புகழ்பாடி ஆடவாரீர்!
தேடற்கரிய தெய்வம் சக்தியென்பார்! - அந்த
தேவியின் சந்நிதியில் ஆடவாரீர்!
கேட்ட தெல்லாம் கிடைக்கும் ஆடவாரீர்! - உலகில்
கேடிலா வாழ்வளிக்கும் ஆடவாரீர்!
நாட்டம் ஒருநிலையில் நின்றிடவே! - பெரிய
நாயகி பதம்பாடி ஆடவாரீர்!
பரிசாகப் பெற்றதெண்ணி ஆடவாரீர்! - ஊர்கள்
பதினாறும் பேறெனவே ஆடவாரீர்!
வரிசைப் பெரிதெனவே ஆடவாரீர்! - நமது
வல்லம்பர் அனைவருமே ஆடவாரீர்!
தனிப்பாலை தருவைஎண்ணி ஆடவாரீர்! - கிடைத்த
தங்கச் சிலையை நாடி ஆடவாரீர்
இனிப்பான வாழ்வு தரும் ஈஸ்வரியினை - நினைத்தே
இருளகற்றும் திருவருளால் ஆடவாரீர்.

**9 ஊஞ்சல்** **அடாணா-அதி**

### தொடர்நிலை

அஞ்சாத நெஞ்சத்துடன் ஆடேடி ஊஞ்சல்!
அருளம்மை பெருமையெண்ணி ஆடேடி ஊஞ்சல்!
சஞ்சலங்கள் தீர்ந்ததென ஆடேடி ஊஞ்சல்!
தாயவளின் சேயெனவே ஆடேடி ஊஞ்சல்!
புன்முறுவல் பூத்தவண்ணம் ஆடேடி ஊஞ்சல்!
புவனேஸ்வரி துணையெனவே ஆடேடி ஊஞ்சல்!
நன்மைபல உண்டெனவே ஆடேடி ஊஞ்சல்!
நம்பிக்கையைக் கைவிடாமல்ஆடேடி ஊஞ்சல்!
உடலின் உள்ளே உயிர்போலும் ஆடேடி ஊஞ்சல்!
உயிரூட்டம் பெருகவென ஆடேடி ஊஞ்சல்!
கடலீந்த அமுதெனவே ஆடேடி ஊஞ்சல்!
கருணையினை மறவாமல் ஆடேடி ஊஞ்சல்!
வித்தகியின் பேர்சொல்லி ஆடேடி ஊஞ்சல்!
வேலன்குடி மேலன்பாய் ஆடேடி ஊஞ்சல்!
சித்தியெலாம் கிடைத்ததென ஆடேடி ஊஞ்சல்!
திருவருளை எண்ணி தினம் ஆடேடி ஊஞ்சல்!

**10 மதுக்குடம்** **சங்கராபரணம் - ஆதி**

### தொடர்நிலை

மதுக்குடம் எடுத்துவரும் மாண்பினைப்பாரீர்! - எங்கும்
மங்கலமாய் அமிர்தரசம் பொங்குதல் காணீர்!
துதித்தவர்க் கருள்புரிவாய் பெரியநாயகி - அந்த
துடியிடையாள் வேலங் குடியமர்ந் தவளே!
வலம்வந்த நெற்போட்டை முளைநெல்இட்டு - நீர்
வார்த்ததனில் சுவையான பாலும் சொரிந்தே
நிலையான மூலிகையும் வேர்களும் சேர்ந்தே - நல்ல
நினைவோடு அரிசிக்கள்ளாய் ஆக்கி அமைத்தார்
பச்சைப்பசேல் எனும் தென்னை பாளைச்செருகி - சத்தி
பக்தர் மனம் உருகிவரும் பாங்கினைப் பாரீர்!
நிச்சயமாய் நேர்ந்துகொள்ளும் நேர்த்தியினைக் காணீர் - மரு
நீங்கவென ஒருவரமும் கேட்டிடுவோம் வாரீர்!
பரவசத்தில் ஜீவன்முக்தர் பருகும் மதுஇதுவே - பெரும்
பாணாற்றுப் படைசொல்லும் மதுவும் இதுவே!
தரமுடனே எல்லோர்க்கும் தருவர் வாங்கி உண்பீர்! - சுத்த
தத்துவமாம் திருவருளை நித்தம் எண்ணி மகிழ்வீர்!

**11. திருத்தாலாட்டு** **நீலாம்பரி - ஆதி**

## தொடர்நிலை

கண்ணே! நவமணியே! கற்பகமே! அற்புதமே!
பெண்ணே! நனிபெரிய நாயகியே கண்வளராய்!
தங்கத்தால் தொட்டில்கட்டி தமிழிசையில் பாடுகின்றோம்
எங்கள் குலக்கொழுந்தே இன்னமுதே கண்வளராய்!
வீரர் மறவரிடை வேலங் குடிவளரும்
பேரழகி அம்மேநீ! பெருமையுடன் கண்வளராய்!
தூங்காமல் தூங்கிடுவாய்! சுகம்பலவும் தந்திடுவாய்!
ஆங்காலம் இதுவெனவே ஆறிந்தவளே கண்வளராய்!
தேடிவரும் மதுக்குடத்தின் தேனருந்தி ஆனந்த
நீடியவாழ் வெங்களுக்கு நிலைத்திடநீ கண்வளராய்!
சித்திரையில் செவ்வாயில் தேரூர்ந்து வருமெங்கள்
நித்திலமே! தத்துவமே! நின்மலமே! கண்வளராய்!
ஒய்யார மாய் ஆடும் ஊஞ்சலிலே நீ அமர்ந்து
பொய்யாத வாழ்வளிக்கும் பூரணியே! கண்வளராய்!
சொற்கேட்டான் பக்கத்தில் சுகமுடனே வீற்றிருக்கும்
பொற்கோட்டை அம்பிகையே! புண்ணியமே கண்வளராய்!
சித்தரெலாம் வாசம்செயும் சிதம்பரப் பொய்கையினில்
நித்தநித்தம் பார்ப்பவளே! நீகொஞ்சம் கண்வளராய்!
வாடிக்கை அல்லையம்மா! வண்ணமிகும் நின்தூக்கம்
வேடிக்கை என்றுணர்வோம் விண்ணரசி! கண்வளராய்!
அனுக்கலெலாம் தீர்ந்தவுடன் ஆச்சி! உன் திருவருள்தான்
வனுக்க வென எழுந்துநீ வந்தருள் புரிந்திடுவாய்!



பாலையூர் விநாயக கடாட்ச வித்வான்,

திரு. சி. இராமசுவாமி ஐயங்கார் அவர்கள்

இயற்றிய

## வேலங்குடி

# பெரியநாயகி அம்மன் பதிகம்

### விநாயகர்

### கலித்துறை

தென்பாலை நாட்டர சாகியும் வேலையில் தேங்கித் தெய்வ
மின்னாள் பெரியவள்தம் பதிகம் சொல மேதினியார்
தன்பதம் போற்றிடச் சொற்கேட்ட நாயகன் தாளிணையை
அன்பாய்ப் பணிந்து புகல்வேன் கவிக்கனு கூலமென்றே!

1. திருவளரும் வடிவுடைய வரதநா யகி!உனது
சேவடி வணங்கு வோர்க்கு,
செல்வமிக வேயருள்! பராசக்தி! கௌமாரி!
சிங்காரி! நாராய ணி!
தருவளரும் அம்பிகை! மனோன்மணி! முக்கண்ணி!
சாம்பவி! பஞ்சாட்ச ரி !
சாலோக சாமீப சாரூப சாயுட்ச
தற்பதம் அளிக்கும்வா மி!
கருணைபுரி சிவகாமி! அடியார்க ளுக்குதவு
கங்காளி! என்மீதி லே!
காலன்அணு காமலே நீலி! எனை ஆளுவாய்!
காளி! அஷ்டாக ஷாத்தி!
பெருமையுடன் ஏழூரு காத்தவளே ; யான்உலகு
பிறவா திருக்க அருள்செய்!
பிரபலமை தாய்வேல நகர்தனி லேமேவு
பெரியநா யகி! அம்மையே!

2. அந்தரி! புரந்தரி! நிரந்தரி! துரந்தரி!
ஆனந்த மானகௌ ரி!
அபிராமி! திரிசூலி! மகமாயி! சகதேவி!
அதிரூப மானவடி வே!
உந்தனைப் பணிபவர்கள் சிந்தையில் இருந்திடும்
ஓங்காரி! ஹரிங்காரி யே!
ஒப்பில்லா தவளே! நின் அடிமையைக் காத்திடும்
உத்தமி! கருணாக ரி!
மந்திர சடாட்சரி! திகம்பரி! பரம்பரி!
வாலை! கோ மள! கல்யா ணி!

மாநிலம் மதிக்கவே என்றனுக் (கு) இருநிதியும்
மகிழ்வாக ஈந்தருளி யும்
பிந்திநின் பாதமது தந்துயான் உலகினில்
பிறவா திருக்க அருள்செய்!
பிரபலம தாய்வேல நகர்தனி லேமேவு
பெரியநா யகி! அம்மையே!

3. ஆரணங்கே! என்னை ஆட்கொண்ட நாயகி
அமரர்பணி கின்றபொரு ளே!
ஐங்கரன் கந்தனையும் ஈன்றிடும் தாயாகி
அலகையின் கொடிபடைத் தாய்!
நாரணன் சோதரி! செய்யாள்தன் மைத்துனி!
நானிலம் புகழ்பெற் றிடும்!
நான்முகன் ஐங்கணையோன் மாமி அரனுக்குரிய
நாரணி! கமலவல் லி!
காரணி! எந்தன்மேல் கிருபைகூர்ந் தேகடைக்
கண்ணினால் பார்த்துரட் சி!
கருணா கடாட்சியே! ஈரேழு லோகமும்
காத்திடும் சகரட்ச கி!
பேரின்ப வீடெனக் கருளியான் உலகினில்
பிறவா திருக்க அருள்செய்!
பிரபலம தாய்வேல நகரதனி லேமேவு
பெரியநா யகி! அம்மையே!

4. ஆதியில் சத்திநின் பாதமதில் மலர்கள்கொண்(டு)
அர்ச்சிப்ப தெக்கால மோ?
அன்புடன் அடியவர்கள் ஒடுகூடி வலம்வந்துன்
அடிபணிவ தெக்கால மோ?
பாதிமதி அணிகின்ற சிரசையும் கண்டுயான்
பணிசெய்வ தெக்கால மோ?
பண்புடன் மனமகிழ்ந் துனது தொண் டூழியம்
பண்ணுவதும் எக்கால மோ?
மாது! மந்தாகினி! மலர்ப்பதம் தனிநிதம்
வணங்குவதும் எக்கால மோ?
மங்களம தாகவே உனதுபணி விடைசெய்யும்
வரம்அருள்வ தெக்கால மோ?
பேதையைக் காத்துரட் சித்துயான் உலகினில்
பிறவாதிருக்க அருள் செய்!
பிரபலம தாய்வேல நகரதனி லேமேவு
பெரியநா யகி!அம்மை யே!

5. சீர்கொண்ட பைரவி! திருவளர் நின்அழகைத்
தெரிந்தளவில் யான்சொல்லு வேன்!

செல்வி!ஏ மூர்க்கரக மதுவந்து சூழ்ந்திடத்
தேர்ஏறி வரும்அழகு டன்!

பார்புகழ் பள்ளத்தூர் தனில்மேவி பத்துநாள்
பரிவுடன் கொலுவிருந் தும்,

பண்புடன் மங்கையர்கள் மாவிளக் கருகினில்
பாங்குடன் வைக்கமிக வும்,

மேருவை நிகர்ஒத்த தேர்ஏறி யேபவனி
வீதியை வலம்சுற்றி யும்,

வெகுவாய்க் கடாப்பலி நடத்தியே காணிக்கை
விரசுடன் வரமகிழ்ந் து,

பேர்கொண் (டு) இருப்பிடம் சேர்ந்தவளே! யான்உலகு
பிறவா திருக்க அருள்செய்!

பிரபலம தாய்வேல நகரதனி லேமேவு
பெரியநாய கிஅம்மை யே!

6. வாரங்கள் தோறும்நின் மண்டபப் படியிலும்
வையாசி வசந்தன்ற னில்

மகிழ்ந் (து) இரதம் ஏறியும் சாமரைகள் வீசவும்
வாத்தியம் முழுங்கிவர வும்,

கோருவைத் தீவட்டி மத்தாப்பு வாணமும்
குடையுடன் விருதுசூ ழ,

கும்புகும் பாடியர் பின்வர ரம்பையர்கள்
கூடிநட மாடி வரவும்,

வீரியே நீ ! பவனி ஊர்வலம் வந்திட
மிகவும்ஆ லாத்திஏந் த.

வெற்றியுட னேகொலு விற்புகுந்தே ஊஞ்சல்
மீதேறி ஆடி அடியார்

பேர்பெற விபூதியருள் கின்றவளே! யான்உலகு
பிறவா திருக்க அருள்செய்!

பிரபலம தாய்வேல நகரதனி லேமேவு
பெரியநா யகி அம்மையே!

7. தெருவீதி அழகுமிகு செந்நெல்விளை நிலமும்நல்
தீர்த்தமும் நதியின்அழ கும்,

திருமதி சூழ்ந்திடும் கோபுரத் தழகும், மேல்
சிகரமும் ஸ்தூபி அழகும்.

கருணைபுரி யுங்கருப் பண்ணர்இரு புயமதில்
காவலும் சோலைதனி லே,

கனபட்சி கூடியே மொழிபேச விண்ணோர்கள்
கண்டு பூரித்த அழகும்,
அருமையுடன் நின்தீர்த்தம் ஆடுவோர் பழவினை
அகற்றிவரம் அருளும் அழகும்,
அகிலாண்ட கோடி பிரம்மாண்டகி! உன்றன்
அடியவர்கள் பணியும் அழகும்,
பெருமையை என்னதான் சொல்லுவேன்! யான் உலகு
பிறவா திருக்க அருள்செய்!
பிரபலம தாய்வேல நகரதனி லேமேவு
பெரியநா யகி அம்மையே!

8. சிரசில்நவ ரத்தினக் கிரீடமும் கூந்தல்
சிறந்திடும் நாகபட மும்,
சேர்ந்தகுப் பியும்மயிர் குச்சிமயிர் மாட்டியும்
சிந்துரத் திலக அழகும்,
இருவிழிப் பார்வையும் புருவத்தின் நேர்த்தியும்
இருகாதில் மகரக் குழையும்,
இவ்வுலகு மதியாத வயிரவை டூரியம்
இலங்குமேல் முருகின் ஒளியும்,
கரமதில் கடகமும் கங்கணம் காப்புடன்
கனமான கொலுசும் ஒளிசேர்
கணையாழி மோதிரமும், உனதுதிரு முகமதில்
கனிவாயின் அமிர்த மொழியின்
பெருமையும் மிகச் சொல்லுவேன் யானும்உலகினில்
பிறவா திருக்க அருள்செய்!
பிரபலம தாய்வேல நகரதனி லேமேவு
பெரியநா யகி அம்மையே!

9. மேதினியை ஆள்கின்ற லோகநாயகி! உனது
மெய்தனில் நிலை அங்கியும்.
மிகவாலை மார்பினில் தும்பிப் பதக்கமும்,
வெண்முத்து மாலை யுடனே,
கோதும்பை மணிகாசு மாலைஆ பரணமும்
கோர்வைமிகு மகர கண்டி,
கொத்துச் சரப்பணி சிவந்திப்பூ மாலையும்,
கொடிமல்லி முல்லைப் பிச்சி,
மாதுக் கிசைந்த மந்தாரைச் செண்பகம் அலரி
மருமலரும் இருவாட் சியும்,
மரகதப் பாதசரம் வெண்டயம் கிண்கிணி
மகிழ் தண்டையும் சிலம்பும்,
பீதாம் பரத்(து) உடை அணிந்தவளே! யான்உலகு
பிறவா திருக்க அரு;செய்!
பரபலம தாய்வேல நகரதனி லேமேவு
பெரியநா யகி அம்மையே!

10. சுத்தபரி புரணி! நித்தியகல் யாணி!நின்
துணையடி வணங்கு வோர்க்குத்
துன்பவினை வல்விஷம் வஞ்சனைகள் பேய்பில்லி
சூனியம் பாண்டு ரூபம்
மற்றுமுள வைப்புக் கடைப்பு மாறாட்டம்
வயிற்றுவலி கண்ட மாலை
மார்பாணி அரிபிளவை எரிபிளவை துடைவாழை
வலுவான ராச பிளவை,
குத்துவலி கன்மவினை அரையாப்புடன் சுரம்
கொடிதான பிரம்ம ஹத்தி,
குன்மம் சிலந்திமுதல் அண்டாமல் ஓட்டி என்
குறைதீர்த்து வரமருள் நீ!
பெற்றிட்ட பிள்ளைநான் ஆகையால் யான்உலகு
பிறவா திருக்க அருள் செய்!
பிரபலம தாய்வேல நகரதனி லேமேவு
பெரியநா யகி அம்மையே!

11. கொலைகளவு பித்தம் பைத்தியம் சூலை, செங்
குட்டம் கருங் குட்டமும்,
குத்திருமல் காசநோய் விரைவாயு மூலம் வெண்
குட்டம் கருங் கிரந்தி,
தலைநோவு நீரிழிவு நீர்க்கோர்வை நெஞ்சுவலி
க்ஷயரோகம் அண்ட வாயு
சாமத் துரோகிகள் செய்கின்ற பாதகம்
சனிதோஷம் மேக நீரும்,
கலகமிடு சில்விஷம் படுவன் பவுத்திரம்
காமாலை வெட்டை முதலாய்க்
கண்ணேறு நாவேறு அணுகாமல் என்றனைக்
காத்து ரட்சித் தருளியே,
புலவர்மிகும் பாலையூர் ராமசா மிபுகல்
பிரபந்தத் திற்கு அருள்செய்!
பிரபலம தாய்வேல நகரதனி லேமேவு
பெரியநா யகி அம்மையே!



# ஆதி முதலே! அருளமுதே!!

பாலகவி நெல்லை பிரமநாயகம் பிள்ளை

1. மயிலே மடப்பிடியே மான்பிணையே தெய்வக்
குயிலே பசுங்கிளியே கோங்கார் - இயற்றட
அன்னப் பெடையே அறிவொளியே ஆருயிரே
மன்னுவயல் நாச்சியம் மா.

2. அம்மா வெனக்கன் றழைக்குங் குரல்கேட்டு
விம்முமுலை பால்சுரக்க வேகமாய் - இம்மாவென்
றோடிவருங் காராப்போல் உற்றவயல் நாச்சியம்மே
தேடுமெனக் காமருள்செய் தேர்ந்து.

3. தேர்ந்துயர்ந்த சென்னெறியில் செல்லும் பெரியோரை
சார்ந்தவரின் மாணடியைத் தஞ்சமென - வீழ்ந்தறியேன்
ஏற்றுக்கோ நான்பிறந்தேன் எம்பெரிய நாயகியே
சற்றதைத் தேர்ந்தருளிச் சாற்று.

4. வேண்டுதல் கேட்டருளும் வேலங்குடித் தாயே
யாண்டுமென் நெஞ்சிலி ருப்பவளே - தாண்டரிய
பாசக் கடல்தாண்டி பற்றற்று வாழ்ந்திடவே
நேசக் கடைக்கணருள் நீ.

5. நீயெனக்குத் தாயன்றோ நேசமுடன் வேண்டதெலாம்
சேயெனக்கு யாருதவி செய்வார்கள்! - தூயகலை
ஞான வடிவே நளினவயல் நாச்சியம்மா
ஈனப் பிறப்பறுப்பா யிங்கு.

6. உள்ள முருகியுணர் விழப்ப
ஒழியாக் கண்ணீர் ஊற்றெடுத்த
வெள்ளம் பெருகி நாக்குழற
விம்மி யழுது மெய்சிலுக்க
தெள்ளு தமிழங் கவிமாலை
செய்துன் பாத மலர்க்கணிந்து
கொள்ளை இன்பப் பரவசத்தால்
குதித்தேன் பெரிய நாயகியே!

7. உன்னு நினைவிற் செயல்மொழியில்
உணர்வற் றுறங்கும் போதினிலும்
கன்னற் பாகிற் செந்தேனின்
கனிகள் கலந்த சுவைபோல

மன்னு மினிய செந்தமிழால்
மகிழ்ச்சி பொங்கக் கவிமாலை
அன்னை பெரிய நாயகியே
அடியேன் சூட்டி மகிழ்வேனே!

8. வேண்டப் படுத லளிக்கின்ற
வேலங் குடிவாழ் கற்பகமே
யாண்டு முனது திருவடியை
எளியே னிதயா சனத்திருத்தி
தாண்டற் கரிய பவக்கடலைத்
தாண்டிப் பரமா னந்தமுடன்
தூண்டா விளக்கா யெரிந் தொளிரும்
துணையே அருள்செய் நாயகியே!

9. வேத முடிவால் விரிகலையால்
மெய்யன் புடையார் பேரறிவால்
சோதி வடிவாய் உயிர்க்குயிராய்
துலங்கித் தோன்றா துனதுருவை
யாது மறியாக் கடைச்சிறி யேன்
எவ்வா றெடுத்திங் கியம்பிடுவேன்
ஆதி முதலே அருளமுதே
அடியே னுந்த னடைக்கலமே!

10. அன்பாய் அறிவா யாருயிராய்
அருளா னந்தச் சுகக்கடலாய்
இன்பா ரிசையாய் யெழிலுருவாய்
இனிதாய் சுகிர்த யின்காற்றாய்
மின்போ லோளிரும் முழுமதி யாய்
விளங்கும் வேலங் குடிவளரும்
பொன்போ லிலகும் அரதனமே
புனிதப் பெரிய நாயகியே!

# வாழ்த்து தாயே !

சண்முகக் கவிமணி சோலை. இராமச்சந்திரன், பள்ளத்தூர்

## விநாயகர் துதி

சொல் கேட்ட பிள்ளையிவன் சுயகவிக்கு
சொல் கேட்டு; பெரியவளைப் பாடுதற்குச்
சொல் கேட்டே வேண்டுகிறேன்; பிரியமுடன்
சொல் கேட்ட விநாயகனே துணை.

## எடுப்பு

பாலூட்டும் தாயினும் பரிவான தெய்வமே
பார்போற்றும் சக்தி உமையே
பாலகன் உன்மீது பாசத்தால் பாடவே
பரிந்துநீ வாழ்த்து தாயே
தாலாட்டுப் போலவே தந்திடும் கவியினைத்
தாயேநீ ஏற்க வேண்டும்
தப்பிதம் வாராது தடையேதும் நேராது
தாயேநீ காக்க வேண்டும்
வாலாய மாயிங்கு வல்லம்பர் வாழ்ந்திட
வகைசெய்க அன்னை உமையே
வாழ்வாங்கு வாழ்ந்திட வையகம் போற்றிட
வரம்தந்து வாழ்த்து தாயே
வேலாட மயிலாட வேலவன் குடி கொண்ட
வேலங்குடி ஊரில் வாழும்
வல்லம்பர் குலங்காக்கும் வண்பெரிய நாயகி
வயல்நாச்சி அன்னை உமையே

## பதிகம்

1. அன்றலர்ந்த மலர்மாலை அலங்கரிக்க
அடிமுதலாய் முடிவரையில் ஒளிசி றக்க
நன்றொளிரும் நன்மஞ்சள் முகம்வி ளங்க
நன்முத்துப் புன்னகையின் ஒளிது லங்க
என்றென்றும் உன்னருளே எமையும் காக்க
இருபொழுதும் கைதொழுதேன் அம்மா தாயே
வன்முறைகள் வாதுகளை ஒழித்துக் கட்டும்
வளரொளியே பெரியவளே அம்மா தாயே

2. ஒண்சிலம்பு ஓசைபெறும் உனது காலில்
ஒட்டியாணம் ஒளிகூடும் உனதி டையில்
கண்பறிக்கும் கனகமணிக் கங்க ணங்கள்
கைகளிலே ஒளிபெற்றுப் பளபளக்கும்
தண்மதியும் உன்முகத்து ஒளியைப் பெற்று
தாரணியில் உயிரினத்தை வாழ வைக்கும்
மண்ணாளும் மாசக்தி அம்மா தாயே
மனம்பெரிய நாயகியே வாழ்த்து மம்மா

3. அரும்புகின்ற குறுநகையை முகத்தில் கண்டேன்
அழகெழிலாய் மலர்மாலை கழுத்தில் கண்டேன்
இருபிறையின் இடையினிலே திலகம் கண்டேன்
எழிலான முகஒளியில் நிலவைக் கண்டேன்
திருசூலம் கிளிகொஞ்சும் சீலம் கண்டேன்
தேவரெல்லாம் உனைவணங்கும் கோலம் கண்டேன்
கரும்புயரக் கைக்கொண்ட காட்சி கண்டேன்
கவிராஜ ராஜேஸ்வரிக் கோலம் கண்டேன்.

4. பாலையநா டென்றபெயர் பெற்ற தாலே
பசியவளம் இல்லாது வாட லுற்றோம்
சோலைவள நாடெனவே வாழ்வ தற்கு
சோடையில்லா நீர்வளமும் நிலவ ளங்கள்
வாளையினம் வளையவரும் நீர்நி றைந்த
வாவிகளும் வற்றாது வளம்சு ரக்க
பாலையிலே கொலுவிருந்து பவனி வந்து
பார்பெரிய நாயகியே வாழ்த்து மம்மா.

5. வில்லம்பு கைக்கொண்டு வெற்றி யோடு
வாகைபல கண்டவர்கள் அந்நாள் தன்னில்
வல்லம்பர் ஆனார்கள் இந்நாள் இங்கு
வழுவாது வாடாது வாழ்வ தற்கு
சொல்லம்பு பூரிக்கும் தூய கல்வி
திருமகளும் மலைமகளும் சேர்ந்து வாழ
நல்லம்பு விழியாளே வாழ்த்து நீயும்
நற்பெரிய நாயகியே அம்மா தாயே.

6. வில்லம்பின் மேலான வேகம் கொண்ட
வீரத்தை வித்தாக்கிப் பயனும் கண்ட
வல்லம்பர் என்போர்கள் காலத் தாலே
வில்லம்பை விட்டுவிட்ட வேகத் தாலே
சொல்லம்பின் சுவைகண்டு சோர்வ கற்றி
சோடையில்லா இனமாக உயர்வ தற்கு
சொல்கேட்ட நாயகனும் வேல னோடும்
சுந்தரமே பெரியவளே வாழ்த்து நீயும்.

7. கூர்கெட்ட மதியாளர் சிலரின் போக்கால்
கூண்டேறி கச்சேரி நின்ற போதும்
நேர்நின்று நீதிபதி முன்னால் தோன்றி
நியாயத்தை நிலைநாட்டக் காட்சி தந்து
சார்புடைய எங்களையும் காத்து நின்றாய்
சதிகாரர் வீழ்ந்திடவே பார்த்து நின்றாய்
பார்போற்றும் சத்தியமே பெரிய தாயே
பள்ளத்தூர் உள்ளமெலலாம் அமைந்த தாயே.

8. உள்ளத்தே உன்நினைவு உந்த லாலே
உருகிநின்று உனைப் போற்றி உவகை கொண்டோம்
பள்ளத்தூர் தனைநாடிப் பத்து நாட்கள்
பவனிவரும் நாயகியே பெரிய தாயே
வல்லம்பர் வழிவழியாய் வாகை சூட
வளரொளியே பெரியவளே வாழ்த்துக் கூறி
எள்ளளவும் இடரின்றி எங்கும் காப்பாய்
எழில்பெரிய நாயகியே அம்மா தாயே.

9. ஊர்வாழத் தான்தேயும் தன்மை யாகி
உழைக்கின்ற கூட்டத்து வல்லம் பர்கள்
ஏர்வாழ இன்பங்கள் எல்லாம் வாழும்
எத்தொழிலும் எத்துறையும் ஏற்ற மாகிப்
பார்வாழப் பலன்காணும் இவரு ழைப்பால்
பசிமட்டும் வாழாதே பறந்து போகும்
கார்போலக் காப்பாற்று இவரும் வாழ
கண்கண்ட நாயகியே அம்மா தாயே

10. உமையவளே உன்கருணை உலகைக் காக்க
ஊர்தோறும் உன்காட்சி ஆட்சி செய்க
சுமையாக மாறிவரும் உலக வாழ்க்கை
சுயமாக இயங்காத முறையில் சேர்க்கை
அமைந்திங்கு அல்லலுறும் மக்க ளுக்கு
ஆறுதலாய் நீயிருந்து வழியும் காட்டி
இமைபோலக் காப்பாத்து எழிலுங் கூட்டி
ஏகாந்த நாயகியே எந்தன் தாயே.

## முடிப்பு

கோமள வல்லியே கோதையர் தலைவியே
குணவதி பெரிய நாயகி

குன்றாத வளமொடு குன்றென உயர்ந்திட
குவலயம் வாழ வாழ்த்து

வாமனன் தங்கையே வனிதையர் தலைவியே
வந்தனை செய்கு வோமே

வாழ்வாங்கு வாழ்ந்திட வல்லம்பர் உயர்ந்திட
வாயார வாழ்த்து தாயே

தாமரைச் செல்வியும் தண்டமிழ்ச் செல்வியும்
சேர்ந்தெமை ஆள வாழ்த்து

தினமுனைப் போற்றிடும் நாட்டார்கள் நல்லோர்கள்
சிறந்திட நீயும் வாழ்த்து

தாமதம் இன்றியே சகலரும் வாழ்ந்திட
தாயேநீ வாழ்த்த வேண்டும்

தருமங்கள் உயர்ந்திட சார்மழை பொழிந்திட
சங்கரி வாழ்த்த வேண்டும்.

## வேலங்குடி ஸ்ரீ பெரியநாயகி அம்மன் துதி

(பொற்கிழிக்கவிஞர் காசிஸ்ரீ கயிலைமணி **அரு. சோமசுந்தரன்**)

பெருவேலங் குடியினிலே பெரியநா
யகி அம்மன் பிணிகள் நீக்கித்
திருவுடனே கலையாவும் தமிழ்மணக்கத்
தினந்தோறும் தந்த தேவி
கருவான முதலேநம் கற்பனைக்கும்
எட்டாமல் காத்து வந்து
தருமங்கள் செய்திடநம் தலைமுறைகள்
காக்கின்ற தாயே வாவா

பாலைய நாட் டன்பரெலாம் பணிந்துருகி
வணங்கிடவே பாது காத்துச்
சோலையென நாடெல்லாம் தோன்றிடவே
வளம்தந்து தொழிலும் தந்து
வேலைக்கும் மாலைக்கும் மயங்காமல்
அனைவர்க்கும் வெற்றி தந்து
மூலைமுடுக் கத்தனையும் முறுவலுடன்
காக்கின்ற தாயே வாவா

## மூத்தவளே பல்லாண்டு

காப்பியக்கவிஞர் **நா. மீனவன்**

சீர்பெரிய நாயகியே செல்வமலி கொற்றவையே
கார்குழலில் மலர்சூடிக் காட்சிதர வருபவளே
ஊர்கூடி உன்கோவில் உருத்திகழப் பொலிவேற்றிப்
பார்போற்றத் திருக்குடநீர் பரிந்தாட்டும் வேளையிலே

உன்னழகை யான்போற்றி ஒருகோடி மலர்தூவி
மன்னவரும் அடியவரும் மனகிழ்ந்து வணங்குகிறார்
பொன்னடிகள் மறவாமல் போற்றுமிவர் நலம்பேணும்
அன்னையே உன்னடிக்கிங் காயிரமாம் பல்லாண்டு

நல்லவராம் பாலையநல் நாட்டார்கள் நயந்துபணி
செல்வியே நற்பதியர் நீர்வேலங் குடியிருக்கும்
வல்லவளே உன்னடியை வணங்கினால் வாழவைக்கும்
முல்லையே பல்லாண்டு மூத்தவளே பல்லாண்டு

மாலுக்கு இளையவளே மாண்பினால் மூத்தவளே
ஆலைப்போல் நிழல்கொடுக்கும் அம்பிகையே குளத்துவளர்
சேலைப்போல் விழியுடைய சித்திரமே வல்லவராம்
பாலையநல் நாட்டாரைப் பார்த்தருள்வாய் பல்லாண்டு

எல்லாமும் நீயாக இருப்பதெலாம் உனதாக
நல்லபடி எமக்கருளும் நாயகியே திருமுறையின்
சொல்லுக்குள் உயிரான சுந்தரியே எத்திசையும்
வெல்லவந்த பைரவியே வித்தகியே பல்லாண்டு

மோனத்துப் பைங்கிளியே மூப்படையாக் கன்னிகையே
கானத்து மலர்சூடும் கண்ணுதலுக்கு உகந்தவளே
வானத்தார் அமரர்களும் வந்துபணி மாதங்கி
தேனப்பும் மலருடைய தேவியே பல்லாண்டு.

# உறுதிமொழி

கவிஞர். வழக்கறிஞர் **எஸ். இராமசாமி**

*இருப்பாய் மனிதா! நெருப்பாய்*

*எடுப்பாய் உறுதி முடிப்பாய்...*

பலவீனமாய் இருப்பவன்தான் - என்றும்
பலாத்காரத்தைப் பற்றிச் சிந்திக்கின்றான்!
சோம்பலாய் இருப்பவன்தான் - அற்ப
சுகத்தை விரும்பி அலைகின்றான்!
வீண்வம்பாய்ப் பேசுபவன்தான் - ஊருக்குள்
விவகாரத்தை விஷவித்தாக வளர்க்கின்றான்.

காலம் பொன் போன்றது.
உருக்கிப் பார்க்காதே
உழைத்துப் பார்
உலகம் உன் கையில்.

கடமை கண் போன்றது.
கண்ணீருடன் பார்க்காதே
நம்பிக்கையூட்டிப் பார்
நாளை நம் வசப்படும்.

ஏறத்தாழ ஒரு லட்சம் மக்களைக் கொண்ட
ஒரு சமுதாயம்தான் நகரத்தார்.
கல்வி, பொருளாதாரம்
கடல் கடந்த வாணிபம்
அளப்பறிய ஆன்மீகத் திருப்பணிஅறம்
ஐஸ்வர்யம் பொங்கும் வாழ்க்கைத்தரம்
அரசியலில் கொண்டுள்ள ஆதிக்க நிலைமை
அனைத்துத் துறைகளிலும் சாதிக்கும் திறமை
தலைமுறை தலைமுறையாக
சாதனை படைக்கின்றார்கள்!
வாழையடி வாழையாகப் பெரும்பாலானோர்
வாழ்வாங்கு வாழ்கின்றார்கள்!

பல நூறாண்டுகளாய்
பாரம்பரியத்தைப் பறைசாற்றும்
அரண்மனை வீடுகளெல்லாம் - இன்றும்
அருங்காட்சியகங்களாக
இருபத்தி ஒராவது நூற்றாண்டிலும்
எழுச்சி கொண்டு நிற்கிறதே - எப்படி?

திரைப்படத் துறையினரெல்லாம்
செட்டிநாட்டைத் தேடிப்படமெடுக்க
திரண்டு வருகின்றார்களே - ஏன்?
ஆசிய நாடுகளில் இல்லாத
அற்புதக் கட்டிடக் கலையின் கவர்ச்சி!
அறிவியல் ஆராய்ச்சிக்கும் எட்டாது
காலத்தை வென்றுநிற்கும் யுகமலர்ச்சி!

ஆக்ஸ்போர்டு யுனிவர்சிட்டிக்கு இணையாக
அண்ணாமலை, அழகப்பா பல்கலைக்கழகங்கள்
இந்தியாவில் இன்றளவும் பேசப்படுகின்றன!
இது....
பொறாமையின் வெளிப்பாடல்ல...
போற்றிப் புகழ வேண்டிய சரித்திர சாதனை!
சாதிப்பதற்கு ஜனத்தொகை முக்கியமில்லை -
சாதகமான சூழ்நிலையைத் தனதாக்கிக்கொள்வது!
ஒரே சிந்தனை, ஒற்றுமை, உழைப்பு, உயர்வு
ஒத்துப் போகும் தன்மை
விட்டுச் கொடுக்கும் விவேகம்!

ஆறுநாடுகளைச் சேர்ந்த - சுமார்
அறுபதாயிரம் பேர் நாமிருக்கிறோம்
அதே...
செட்டிநாட்டைச் சேர்ந்த
நாட்டார்கள்தானே நாம்?
அந்த வட்டாரப் பழக்கத்திற்குள் வாழ்கின்ற
வல்லம்பர்கள்தானே நாம்?
விரல் விட்டு எண்ணும் அளவுதான்
வெளியுலகுக்கு தெரிய வருகின்றோம்.
ஜாதிக்காகப் பிறந்தவர்களில்லை - நாம்
சாதிக்கப் பிறந்தவர்கள்!
இனியாவது சபதம் எடுத்துச் கொள்வோம் -
எவருக்கும் சளைத்தவர்களில்லை நாம்!

'வீரம் இல்லாத விவேகம் கோழைத்தனம்
விவேகம் இல்லாத வீரம் முரட்டுத்தனம்'
- என்றார் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர்.
வீரம் இருக்குமளவுக்கு - நம்மிடம்
விவேகம் இருந்ததில்லை!
உழைப்பு இருக்குமளவுக்கு - நம்மிடம்
உயர்வு இருந்ததில்லை!
உணர்வு இருக்குமளவுக்கு - நம்மிடம்
ஒற்றுமை இருந்ததில்லை!

குடிக்கு ஒரு கொள்கை!
தடுக்கி விழுந்தால் சண்டை!
தடியெடுத்தவனெல்லாம் தண்டல்காரன்!
பங்காளிகள் பத்துப் பேர் இருந்தாலும்
பரஸ்பரம் தீராத பகைமை!
உறவினர்கள் ஒரே கிராமத்தில் இருந்தாலும்
ஊருக்குள் கட்சிகட்டும் மடமை!
ஊர்கூடித் தேர் இழுப்பதைவிட்டு
நேர்மாறாக நீதிமன்றங்களைத் தேடும் நிலைமை!

முடங்கிப்போய் மூலையில் கிடந்தாலும் எவருக்கும்
அடங்கிப்போய் வேலைவெட்டி செய்வதில்லையென்ற
வீராப்பில் வாழ்பவர்கள் எத்தனைபேர்?
வறுமைக் கோட்டை மட்டும் என்றுமே
வய்லன்ஸ் செய்வதில்லை என்ற
வைராக்கியத்தில் வாழ்பவர்கள் எத்தனைபேர்?
இவையெல்லாம் நமக்கு...
சாபக்கேடோ, பாவமூட்டையோ அல்ல-
மாறுகின்ற உலகத்திற்கு ஏற்ப நம்மை
மாற்றிக்கொள்ள முழுமையாக முயல்வதில்லை!
குறுகிய வட்டத்துக்குள் கோடுபோட்டுக் கொண்டு
ஆடு புலி ஆட்டம் ஆடுவதில்லை வாழ்க்கை!
முயற்சி, கூடிப்பொழியும் மேகத்தைப் போன்றது!

'நூறு இளைஞர்களைக் கொடுங்கள் - நம்
நாட்டின் தலைவிதியையே மாற்றிக்காட்டுகிறேன்'
- என்றார் சுவாமி விவேகானந்தர்.
ஆயிரக்கணக்கான நம் சமுதாய
இளைஞர்களெல்லாம்
ஆர்ப்பரித்து எழுந்தோமேயானால்...
ஆக்கபூர்வமாக நம்மை வழிநடத்த
அய்க்கண் போன்ற ஆற்றல்மிக்க அடலேறுகள்
அனேகம் பேர் நம்மில் உண்டு!
வெற்றியின் திறவுகோல் முயற்சி!
முன்னேற்றம் ஒன்றே நம் சமுதாய எழுச்சி!

பார்த்திப ஆண்டு வைகாசித் திங்கள்
இருபத்தி ஏழாம் தேதி நடைபெறும்
பேரன்னை பெரியநாயகி அம்மன்
திருக்கோவில் திருக்குட நீராட்டுவிழாவின்
வரலாற்று நிகழ்வுகளை எல்லாம்
வரிசைப்படுத்தி எதிர்காலத்திற்கான
ஆவணமாகப் பதிவுசெய்து பாதுகாக்க
அந்தவிழாவின் சிறப்பு மலரை வெளியிடும்
அரிய முயற்சியில் இறங்கியுள்ள
பாலைய நாட்டாரின் பழம்பெருமையைப்
பாராட்டி வாழ்த்துகின்ற இந்தத்தருணத்தில்
வேலங்குடி அம்மன் இனி நமக்கு நல்ல
காலம்கொடு என வேண்டி...
ஒரு உறுதிமொழி எடுத்துக்கொள்வோம்!

வாருங்கள் இளைஞர்களே!
வாழ்ந்து காட்டுவோம்
வறுமை இல்லாச் சமுதாய
வாழ்த்துப் பாடுவோம்!

தன்னைத்தானே செதுக்கிக்கொள்ளும்
சமுதாயச் சிற்பிகளாக நாம் மாறவேண்டும்!
உன்னை நீயே உரசிப்பார்க்கும்
உரைகல்லாக நீ ஆகவேண்டும்!
நமக்கு நாமே உதவும் சமுதாய மாற்றத்தை
நாம் இனிமேலாவது தேடவேண்டும்!
மாற்றங்கள் காலத்தின் போதனை! - தன்னை
மாற்றிக்கொள்வதே மனிதனின் சாதனை!



# அகிலமெலாம் போற்றுகின்ற அன்னை நாயகி

டாக்டர் கவிஞர் **இரவிபாரதி** எம்.ஏ. பி.எச்.டி

தொன்றுதொட்டு மக்களுக்குத் தோன்றாத் துணையாய்
துயருற்ற மக்கள்தமை அணைத்துக் காத்து
நன்றுசெய் நாயகியாய் விளங்கி எங்கள்
நாட்டினிலே விளக்கேற்றும் பெரிய நாயகி...

பயிரெல்லாம் நன்றாகத் தழைக்க வேண்டும்...
பாடுபட்டு மக்களினம் உழைக்க வேண்டும்...
உயிரெல்லாம் ஓங்கிநின்று செழிக்க வேண்டும்...
ஊரெல்லாம் நல்மழை பொழிய வேண்டும்...

என்றவொரு தத்துவத்தின் அடிப்படை யிலே
எழிலோடு மதுக்குடம் தூக்கி வந்து
அம்மனது திருவடியில் சேர்க்கும் மாட்சி...
அகிலமே வியக்கின்ற அரிய காட்சி...

ஏழூருச் செவ்வாயின் அழகை எல்லாம்
எடுத்துரைக்க என்கவிக்கு வலிமை இல்லை
மேலூராய் ஏழூரை விளங்க வைத்து
மேன்மைசெயும் சக்திக்கு நிகரே இல்லை..

மணமுடித்துச் செல்லுகின்ற மங்கை நல்லாள்
மறக்காமல் பிறந்த மண் நினைவு கூர்ந்து
மனம்மகிழ தாய்வீடு வருதல் போல
மடைதிறந்த மகிழ்ச்சியினைப் பெறுதல் போல

உள்ளத்தில் என்றைக்கும் நிலைத்து நின்று
உதிரத்தில் கலந்துவிட்ட சொந்த மண்ணாம்
பள்ளத்தூர் வந்திறங்கிப் பத்து நாட்கள்
பாங்குடனே வீற்றிருத்தல் பெருமை அன்றோ?...

வடம்பிடித்து தேரிழுத்து நடந்து முடியும்
வழக்கமான திருவிழாவை விஞ்சும் வகையில்
குடமுழுக்கு நடக்கிறது.. அதிலே நனைந்து
குளித்தெழுந்து புத்துணர்வு பெறுவோம் வாரீர்!

வேலங்குடி வீற்றிருக்கும் பெரிய நாயகி
வேண்டுவோர்க்கு வேண்டுகின்ற வரத்தை நல்கி
காலமெலாம் காத்துநின்று அருள் பொழியட்டும்
கவலையெலாம் போக்கி நற் பொருள் வழங்கட்டும்!

# வினை தீர்க்கும் பெரியநாயகி

கவிஞர். பெ. இராமன், அம்பத்தூர்.

*வேலங்குடி தன்னில் வீற்றிருக்கும் அம்மா நீ*
*காலத்தை வென்ற கதியுடையாய் – சீலமிகு*
*பாலைய நாட்டில் பரிவட்டம் சூட்டியே*
*பாரிபுகழ வாழ்த்திடுவோம் யாம்.*

மாறுபட்ட பெயர்களிலே மகுட மேற்று
வேறுபட்ட அவதாரங்கள் பல எடுத்து
பேறுபெற்ற தலங்களுக்கு பெருமை சேர்த்து
ஊருராய் ஆட்சி செய்யும் உமையாம்பிகையே!
அனைத்தின் அடக்கமே வினைதீர்க்கும் பெரியநாயகி

அகிலமெலாம் பரந்து நிற்கும் அன்னை நீ
ஆதியந்தம் அத்தனைக்கும் மூலகாரணி
ஆதி பராசக்தி உமை அன்னபூரணி
அடியார்க்கு அருள் வழங்கும் அன்னலட்சுமி
அனைத்தின் அடக்கமே வியனுலகோச்சும் பெரியநாயகி

பல பெயரில் பவனி வரும் பரமேஸ்வரி
பாலைய நாட்டில் அவள் பெரியநாயகி
உலகெல்லாம் ஓங்கவைக்கும் உண்ணாமுலை
ஊரெல்லாம் ஒளிரச்செய்யும் உலகநாயகி
அனைத்தின் அடக்கமே வெற்றித்திருமகள் பெரியநாயகி

மதுரையிலே மீனாட்சி மயிலையிலே கற்காம்பாள்
மாங்காட்டில் மகிமை சேர் மாரியாத்தாள்
காஞ்சியிலே காமாட்சி காசியிலே விசாலாட்சி
கல்கத்தாவில் களம் கொண்ட காளியம்மா
அனைத்தின் அடக்கமே வீணர்களை வீழ்த்தும் பெரியநாயகி

திருவேற்காட்டிலே கருமாரி தில்லையிலே சிவகாமி
திருவொற்றியூர் தன்னில் வடிவுடையம்மாள்
திருமுல்லை வாயிலில் அவள் கொடியிடை நாயகி
திக்கெட்டும் ஒளிவீசும் திருக்கடையூர் அபிராமி
அனைத்தின் அம்சமே வேலனின் அன்னை பெரியநாயகி

மைசூரில் சாமுண்டீஸ்வரி மற்றும் மூகாம்பிகை
மகிமை மிகு பாடியில் படை வீட்டம்மன்
வளமான வாழ்வளிக்கும் இராஜ ராஜஸ்வரி
அனைத்தின் அம்சமே வேதனை களைந்திடும் பெரியநாயகி

அண்டமெல்லாம் காக்கும் அகிலாண்டேஸ்வரி
அடுத்தவர் குறை தீர்க்கும் அஷ்டலட்சுமி
அலைமகள் திருமகள் அறிவுக் கலைமகளாய்
அற்புதங்கள் ஆற்றிவரும் அங்கயற் கண்ணி
அனைத்தின் அம்சமே விரும்பியதை அளிக்கும் பெரியநாயகி

# பெரியநாயகி அம்மன் பாமாலை

சோ. சண்முகவள்ளி, பலவான்குடி

இடி மழையின், இலை நீர்த்துளி போலே, இதயத்தின் இனிய நினைவு போலே,
இளம் பெரிய நாயகிளாள், இசை யருள வந்தாளே!

பனி பெய்யும் பருவம் போலே, பச்சை நெல்லின் பதியம் போலே,
பராசக்தி, பெரிய நாயகி, பாராள வந்தாளே!

முயலாடும், முல்லை வனம் போலே! முன் பனி யுடுத்தி உறங்கும் முழு மதி போலே,
மூத்தவள் பெரிய நாயகியாள் முகம் மலர வந்தாளே!

சேலாடும் செங்குளம் போலே, செந்தாமரை சிந்தும் தேன் போலே,
தேவி, பெரிய நாயகியாள், திருவருள் புரிய வந்தாளே!

கரும்பிலாடும், கரு வண்டு போலே, கவி பேசும் கனிக் காற்று போலே,
கன்னி, பெரிய நாயகியாள், கருணை யருள வந்தாளே!

கனியில், கள் அருந்தும், கரு வண்டுகள் அழகு;
அது போல், காமாட்சி, பெரிய நாயகியின், கண்கள், அழகு
தெள்ளத் தெளிந்த நீர் நிலையில், சேல் தேடும், சிறு நாரைகள், அழகு
செந்தாமரையைத் தேடி வரும் தென்றல், அழகு;
அது போல், தேவி, பெரிய நாயகியாள், திருவருள் அழகு

தெய்வக் கோயில் தீபம் நீ; தேனாற்றின் சேல் நீ
விழித்து நோக்கும் விண்மீன் நீ; விடியலில் தேயும் வெண்ணிலா, நீ;
வீர பெரிய நாயகியே வீணையின் வேதம் நீ; காலை நேரக் காற்றும், நீ;
கருங் குயிலில் கவிதை நீ; சிப்பி முத்தின் சிதறல் நீ;
சேல்கள் ஆடும் திருக்குளம் நீ; தேவி பெரிய நாயகியே

சேல் கொண்ட, சிறு கண் ஆட, தேன் மேகலை அசைய, சிற்றிடை, ஆட,
தேவி பெரிய நாயகியாள் சிவந்த மேனி, ஆட - அதில் செந்தமிழ், கூட
தேன் மொட்டுச் செவ்விதழ் ஆட - அதில் சிரிப்பெனும், சிறு முத்து, சிதறி ஆட,
தேவி பெரிய நாயகியாள் திருக் கால்கள் ஆட - அதில், செந் நாப் புலவரின், சிந்துகள் கூட
மஞ்சள் மேனி, மலராட, மலையின் மணி தீபமென,
மங்கை, மகிழ்ந்தாட, மாது பெரிய நாயகி ஆட - அதில், மக்களின், மனங்களும், ஆட
மது விழியில் மானாட, மலர் நடையில் மயிலாட
மதி முகப் பெரிய நாயகியாள் மகிழ்ந்து மகிழ்ந்து ஆட - அதில் மண்ணகமே, ஆட

ஆடி வரும் அழகே ; பாடி வரும் எழிலே;
பருவம் கொண்ட, பச்சைக் கிளியே - எங்கள்
பாவை, பெரிய நாயகியே!

இலையே; இலையின் மலரே; இசையே; இசையின் இன்பமே; நீ,
பகலே; பகலின் ஒளியே; நீ, பார் யாவும் ஆளும், பாவை பெரிய நாயகியே!
மலரே; மலரின் மணமே; மலையே; மலையின் புனலே நீ,
நதியே; நதியின் நாரையே; நாணலே; நாணலின் நடனமே;
கலையே; கலையின் கருவே கடலே; கடலின் கயலே நீ,
கருத்தினில், கலந்தாடும் கன்னி, பெரிய நாயகியே!

# பெண்ணின் பெருமை

சண்முகக் கவிமணி தமிழரசிபாலன்

*பெண்ணினத்தைப் போற்றிடுவோம் போற்றிடுவோமே – அவள்*
*பெருமைகளைப் பாடிடுவோம் பாடிடுவோமே*

அன்பு கொள்வதில் பெண் அன்னையாவாள்
அக்கறையாய்ச் செயல் புரியும் தந்தையாவாள்
ஆலோசனை சொல்கின்ற மந்திரியாவாள்
வம்ச வாரிசை உருவாக்குகின்ற பிரம்மனுமாவாள் (பெண்....)

தாய்மை என்ற பண்பினாலே தெய்வம் ஆனவள்
தரணி போற்றும் தலைவர்களைப் பெற்றுத் தந்தவள்
பெற்ற பிள்ளைக்காக வாழ்வைத்தியாகம் செய்பவள்
மகவைப் பேணி வளர்த்து உயர்த்துவதில் மிகவும் வல்லவள் (பெண்...)

காரியங்கள் ஆற்றுவதில் நுணுக்கம் கொண்டவள்
காவியங்கள் போல் மனதில் இடம் பிடிப்பவள்
ஆணைவிடத் தாழ்வு என்று பழிக்கப்பட்டவள் இன்று
ஆணினத்தின் பார்வையிலே உயர்ந்து நிற்பவள் (பெண்...)

ஆணைப்போலப் பணிகளுக்கும் சென்று வருபவள்
ஆர்வமுடன் இல்லறத்தைப் பேணி வருபவள்
ஓய்விலாது உழைப்பதிலே ஆர்வம் கொண்டவள் - பெண்
ஓடி ஓடி உதவுவதால் நதிகள் ஆனவள் (பெண்...)

குடும்ப மரத்தைத் தாங்கிடும் ஆணிவேராவாள்
குலவிளக்கை வழங்கிடும் மருமகளாவாள்
ஆண் இனத்தின் வெற்றிக்கு அடிப்படையாவாள் - இன்று
ஆண் இனமே வியந்து நிற்கும் படிப்பினையாவாள் (பெண்...)

தாய்நாடு, தாய்மொழி என்று பெண்மைக்கே புகழ்
மாதா, பிதா குரு என்பதில் பெண்மையே முதல்.
கலைமகளும், திருமகளும், பூமியும் பெண்ணே!
கங்கா, யமுனா, காவிரி என நதிகளும் பெண்ணே! (பெண்...)

சேவை செய்து புகழ் பெற்ற பெண் அன்னை தெரஸா,
சிறந்த பெண் பிரதமர் அன்னை இந்திரா,
வீரத்தினை விளக்கும் மங்கை ஜான்சிராணி
அண்ணல் காந்தி வெற்றிக்கு ஒரு கஸ்தூரிபாய் (பெண்...)

பெண்ணாய்ப் பிறந்ததற்குக் பெருமை கொள்வோம்!
மண்ணாய் இருந்திடாமல் மகிமை கொள்வோம்
நம்மால் ஆகாதது எதுவுமில்லை என்று
நாடுயர வீடுயரப் பாடுபடுவோம் (பெண்...)

# பேரழகுப் பெரிய நாயகி

**வெ. நாகவள்ளி**, சென்னை

1. சித்திரை மாதக் கடைசியிலே
   தேவிக்குக் காப்பு கட்டி
   தி ருவிழாவும் கூட்டி
   தினமும் வந்து கொலுவிருப்பாள் தேவி பெரிய நாயகி (தன்னாதி....)

2. பிறந்த இடம் போறே னென்று
   பெருமாள் இடம் சொல்லி
   அப்படி பெருமையாகச் சிரித்து
   புதுக் கேடகத்தில் வருவாளாம் பொன் பெரிய நாயகி (தன்னாதி...)

3. தாய் வீடு போறேனென்று
   சாமி இடம் சொல்லி
   அப்படி சந்தோஷமாய்ச் சிரித்து
   புதுச் சகடையிலே வருவாளாம் சாமி பெரிய நாயகி (தன்னாதி....)

4. நாலு முகப் பாதையிலே
   குட்டியுமே வெட்டி, குலவைச்சத்தம் போட்டு
   தேங்காயுமே உடைத்து, தீபாராதனை பார்த்து
   தினமும் வந்து கொலுவிருப்பாள் தேவி பெரிய நாயகி (தன்னாதி...)

5. யானை வாரதைப் பாருங்களே!
   யானை அசைந்து வாரதைப் பாருங்களே
   யானைத்தடம் போல மேலே பெரியவ
   அட்டிகை மின்னலைப் பாருங்களே. (தன்னாதி...)

6. குதிரை வாரதைப் பாருங்களே!
   குதிரை குதிச்சு வாரதைப் பாருங்களே
   குதிரைத்தடம் போல மேலே பெரியவ
   கொலுசு மின்னலைப் பாருங்களே (தன்னாதி...)

7. ஊரார் வாரதைப் பாருங்களே!
   ஊரார் ஒயிலும் வாரதைப் பாருங்களே
   நாட்டார் வாரதைப் பாருங்களே
   நாட்டார் நடந்து வாரதைப் பாருங்களே (தன்னாதி...)

சொன்னவரம் தந்திடுவாள் — வயல் நாச்சி
வடக்கு முகம் இருப்பவளே — வயல் நாச்சி
மங்கையர்க்கு வாழ்வு தருவாள் — வயல் நாச்சி
மாலைவ்ரம் கேட்டவர்க்கு — வயல் நாச்சி
மணம்புரிய அருள்கொடுப்பாள் — வயல் நாச்சி
வருஷமொரு நாளிலே — வயல் நாச்சி
உனக்கு மதுக்குடங்கள் கோடிவரும் — வயல் நாச்சி
மங்கள வாரத்திலே — வயல் நாச்சி
உனக்கு மாதர்கள் கோடி வரும் — வயல் நாச்சி

உ

# நவகிரக நாயகியே உன் சேவைக்கே நான்

**முத்துமாரி பெருமாள், பாலையூர்**

திங்களும் கதிருமாகி திசையெங்கும் ஒளியுமாகி
மங்கள குங்குமத்தில் மகிழ்ந்திடும் எந்தன் தாயே
பொங்கிடும் கடலுமாகி புவிளங்கும் மழையுமாகி
பூவிழி கருணையாலே புவனத்தை ஆள்பவளே.

அணுவுக்குள் அணுவுமாகி ஆதார நாதமாகி
அண்டத்தை அசையச் செய்து ஆளுகின்ற நாயகியே
நினைவுக்குள் நினைவுமாகி நெஞ்சுக்குள் ஒட்டமாகி
நினைவுக்கும் எட்டாமல் நித்தியமாய் இருப்பவளே

கறைகண்டன் தேவியாகி மறையோதும் முதலுமாகி
பிறைநுதல் சடையனுடல் அரைபாகம் நின்றவளே
நிறைவான வாழ்வளித்து நெறிமுறை தவறாவண்ணம்
குறைபோக்கும் குணத்தின் குன்றே கோமளவல்லிநீயே.

மலர்கின்ற விழியில் அன்பு பொழிகின்ற அருள் அமுதே
மதித்தவர் மனக்கோயில் ஒளிர்கின்ற சுடர் விளக்கே
புலர்கின்ற பொழுதும் நீயே பூந்தளிர் இதழும் நீயே
பூவுலகெங்கும் நின்று பூத்திட்ட செம்மலரே.

நலமிகுந்த நல்வாழ்வு எனை நாடவும்
நயவஞ்சகர் உறவென்னை நாடாமலும்
குலம் விளங்கும் செல்வங்கள் செழித்தோங்கவும்
குளிர்முகத்து பனிப் பார்வை தினம் எனை காக்கட்டும்

நன்றாயினும் தீதாயினும் நானறிவது ஒன்றுமில்லை - இந்
நானிலத்தில் இன்றே உன்மகனாய் எனையேற்று
நன்றாய் செயல்படும் நலிவுறா நல்லெண்ணம்
நவகிரக நாயகி உன் சேவைக்காக அருள்செய்வாயே.

# மனம் போல் வாழ்வு

**P. சுப்பையா அம்பலம்** M.A., B.L, Ex. M.P
முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர்

மனம் என்ன நினைக்கிறதோ அது போல்தான் வாழ்க்கையும் அமையும். 'மனம் போல் மாங்கல்யம்,' 'மனம் உண்டானால் இடம் உண்டு' என்று செல்லும் வாக்குகள் எல்லாம் நாம் அறிந்த பழமொழிகள்தான். ஏழை கோடீஸ்வரன் ஆகிறான். அரசனாக இருந்த புத்தர் சாமியாராக மாறினார். அது மனதின் கட்டளை. மனதை இயக்கும் சக்தி எங்கிருந்து வருகிறது? அது ஆண்டவன் செயல். இறைவனால் படைக்கப்பெற்ற எல்லா ஜீவராசிகளிலும் ஆண்டவன் இருக்கிறான். இறைவன் இல்லாத இடமே இல்லை. நம் மனதில் தோன்றும் எண்ணங்கள் எல்லாம் இறைவன் செயல்தான். அவனின்றி அணுவும் அசைவதில்லை.

ஆண்டவனால் படைக்கப்பெற்ற எல்லா ஜீவராசிகளையும் நேசிக்க வேண்டும். அன்பு செலுத்தவேண்டும். மக்களுக்குச் செய்யும் சேவையே மகேசனுக்குச் செய்யும் சேவை. இறைவன் நாமத்தை 'ஓம் நமச்சிவாய' 'ஓம் நமோ நாராயணா' என்று மந்திரத்தை ஐபம் செய்ய வேண்டும். மன அமைதியும் சுகமும் கிடைக்கும்.

*தனக்கு உவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்*
*மனக்கவலை மாற்றல் அரிது*

என்ற திருவள்ளுவர் வாக்கை மறவாமல் நினைவில் வைத்திருக்கவேண்டும். 'வாழ்க வளமுடன்' எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறு ஒன்றும் அறியேன். அன்பர் பணிசெய்ய ஆளாக்கிவிட்டுவிட்டால் இன்பநிலை தானே வந்து எய்தும் பராபரமே!

# பாலைய நாட்டில் அருள் பாலிக்கும் பராசக்தி பெரியநாயகி!

ராஜயோகி சித. சுவாமிநாதம்

'அம்பாசாம்பவி சந்திரமௌளி, உமா பார்வதி காளி ஹைமவதி சங்கரி திரிநயனி காத்யாயணி பைரவி சாவித்ரி நௌயௌள சுபகரி சாம்ராஜ்ய் லெட்சுமி பிரதா சித்நிபிபரதேவதா பகவதி ஸ்ரீ ராஜராஜேஸ்வரி!!

அர்த்த புவனேஸ்வரியாக காட்சி தருகிறாள் சித்தர்களால் பூஜிக்கப்பட்ட பாலாம்பிகை : உள்ளன்போடு நினைப்பவர்களுக்கு கனவிலும் நனவிலும் காட்சி தந்து நினைத்ததை விரும்பியதை முடிக்கும் சக்தி.

'மந்திரகுருவே யோக தந்திரகுருவே மூலன் மரபில் வரும் மௌன குருவே! சரணம் சரணம்.'

சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்குமுன் சின்மயானந்த சித்து மனித உடல் எடுத்து மக்களை உய்விக்க சபரிமலையில் ஐயப்பனாகவும்; கொத்தரி குரும்ப வனத்தில் சோலை ஆண்டவ தபோ நிதியாக திருவருள் தருகிறார்கள்.

நாம் பழனி ஆண்டவரை நோக்கி நகரத்தார் போல் பாத நடைக் காவடிகள் எடுக்க ஆரம்பித்ததால் பெரிய மாற்றம் வந்துள்ளது. மகளிர் பக்தி கல்வி பொருள் செல்வம் சந்ததி விருத்தி முதலியன வந்து கொண்டிருக்கிறது.

நகரத்தார் போல அவசியம், அடக்கம், பொறுமை, அன்பு, தொண்டு, தானம் செய்ய முன் வாருங்கள். எல்லோரிடமும் சாதி, மதம், இனம் பாராட்டாமல் ... பகவத்கீதை, திருமந்திரம், திருவாய் மொழியில் சிந்தனை செய்யுங்கள். நீங்கள் நினைத்தபடி காரியங்கள் முடியும். முதலில் நம்பிக்கை, விடாமுயற்சி.

நமது இனத்தினர்களுக்கு முன்காலத்தில் சுயம் 4 க்ஷேத்திரம். கல்லாங்குடியில் குருபீடம் இருந்தது தற்சமயம் பாதரக்குடியில் உள்ள ரவீந்திரசுவாமிகள் M.A. (திருச்சி சுவாமிகள் சீடர்) நேரில் வந்து ஆரம்ப தீட்சை தர ஏற்பாடு உள்ளது. 1984ல் குன்றக்குடி வடக்குகிரிவிதியில் பாலைய நாட்டார் சமுதாய கூடம் அமைந்து நன்கு நடைபெறுகிறது. கலியில் குன்றக்குடி சண்முகநாதர் சன்னதியில் சதுர்வித புகுஷார்த்தமும் தருகிறார். பங்குனி உத்திரவிழா தைபூச விழாவில் பழனிபோல் நாட்டார் அறக்கட்டளை எல்லோருக்கும் அன்னதானம் செய்கிறது. காலை 6 மணிக்கு பருப்பு பொங்கல் நிவேதனம் ஆகி பக்தர்களுக்கு வழங்கப்படுகிறது. விரைவில் சகல வசதியுடன் புதிய கட்டிடம் அமையும்.

முற்பிறப்பில் செய்த பாபங்கள் கரையுமிடம் காசி இராமேஸ்வரம். அம்பாள் திருவருளால் இராமேஸ்வரம் செயல்பட கிடைத்துள்ளது. ஆடி அமாவாசையில் சென்று பிதுர்களுக்கு தர்ப்பணம் செய்யுங்கள் அன்னதானம் செய்யுங்கள். தேரில் அம்பாளை சேவியுங்கள். நலம்பெறுவீர்கள், வீட்டில் விளக்கு ஏற்றி காலை, மாலை, இரவு சுமார் 10 நிமிடம் மனதை ஒருமுகப்படுத்தி கணபதி, முருகன், அம்பாள், சதாசிவம், சூரியன்) ஏதாவது ஒரு உருவில் தியானம் செய்யுங்கள். கலியில் விஞ்ஞான உலகில் இறைவன் திருவருள் எளிதில் வருகிறது இராம கிருஷ்ண மடம், பராசக்தி பீடம் யோகி சின்மயானந்தா, லலிதா சமாஜம், யோகி மகேஷ் ஆழ்ந்த தியானம் கிருஷ்ண பிரேமை பீடம், அரவிந்தர் வழி நன்கு தெரிந்து சாதனை செய்ய வேண்டுகிறேன். குருதீட்சை அவசியம் இந்துக்களுக்கு கோவில் என்பது சிதம்பரம் நடராஜர் ஸ்ரீரங்கம் ரெங்கநாத பெருமாள் பிரசித்தம் சிதம்பரத்தை கைலாசம் என்றும் ஸ்ரீரெங்கத்தை வைகுண்டம் என்றும் நாயன்மார்கள் ஆழ்வார்கள் அநுபவம் அடைந்து போற்றுகிறார்கள். நாமும் அவ்வழி செல்ல வழிகாட்டிகள் ஆதிசங்கரர் இராமானுஜர், தாயுமானவர், இராமகிருஷ்ண பரமஹம்சர், இராமலிங்கர் வள்ளலார் அரவிந்தா முதலியோர்களை திருவருள் தந்துள்ளது. சாதனை செய்யவும் விடாமுயற்சியும் வேண்டும். அதில் விரைவில் குரு அருளால் அமைதி ஆனந்தம் உள்ளத்தில் கிடைக்கும். உண்மை, உண்மை .

பழனி மலையில் பழனி ஆண்டவருக்கு இராக்கால கட்டளை புஷ்பம், பால் அபிஷேகம் நடைபெறுகிறது. திருவாவினன்குடியிலும் அதுபோல் நடைபெறுகிறது. போகர் சீடர்களுடன் பழனி ஆண்டவர் சிலை நவ பாசானத்தில் செய்த இடம் நமது சண்முக சேவா சங்கம்!

# வல்லம்பர் சமுதாயம்



**பாவலர் மணி ஆ. பழநி**

பாலைய நாடு பதினாறு சிற்றூர்களைக் கொண்டது என்ற வழக்கு நெடுங்காலமாகவே வழங்கி வருகின்றது. இப் பதினாறு ஊர்களிலும் பூர்வகுடிகளாகவும், பொறுப்பு வாய்ந்த குடிகளாகவும் இருந்தவர்கள், இருப்பவர்கள் வல்லம்பர்கள்தாம். இவர்களைப் பூர்வகுடிகள் என்று கருதக் காரணம் என்ன என்று சிலர் கேட்கக்கூடும். இவ்வூர்களில் எல்லாம் நிலஉடைமையாளர்கள் இவ் வல்லம்பர்கள்தாம் : காடழித்து நாடாக்கியதும், சமுதாயத்தின் அடிப்படைத் தொழிலான வேளாண்மையை மேற்கொண்டிருந்ததும், நிலங்களைப் பிறருக்கு விற்கின்ற உரிமையைப் பெற்றிருந்ததும் இவர்கள்தாம் என்றால் இவர்கள்தாமே மண்ணின் மைந்தர்கள்? நிலத்தை விலைகொடுத்துப் பெறாமல் எந்தக் குழு பயன்படுத்தத் தொடங்கியதோ அக்குழுதான் அம்மண்ணுக்கு மூத்த குடி என்பது வரலாறு.

இன்று நிலத்தின் உரிமை பல்வேறு பிரிவினரிடம் இருக்கலாம். அந்நிலத்தை அப்பிரிவினர்க்கு விற்றவர்கள் யார் என்று தேடத் தொடங்கினால் அத்தேடல் என்னும் கயிற்றின் இறுதி முனையில் வல்லம்பர்கள்தாம் நிற்பர். இதற்கு நீண்ட பெரிய ஆராய்ச்சி தேவை இல்லை. கடந்த 50 ஆண்டுகளுக்குள் கோட்டையூர், காரைக்குடிப் பகுதியில் பெருமளவு வீடுகட்டும் மனைகள் போடப்பட்டு அவற்றைப் பல்வேறு பிரிவினர் வாங்கியுள்ளனர். அப்பிரிவினர்க்கு அந்நிலங்களை விற்றவர்கள் யார் என்று வினா எழுப்பினால் வல்லம்பர்கள் என்ற பதில்தான் கிடைக்கும். உடைமையாளர்கள்தானே விற்க முடியும்?

வல்லம்பர்களுக்கு நாட்டார் என்ற பெயரும் உண்டு. நாட்டிற்குரிய மூத்தகுடி என்பதனால் தான் இப்பெயர் வந்தது. வல்லம்பர் என்பது தொழிலால் (சிறப்பான) பெற்ற பெயர்: நாட்டார் என்பது உரிமையாற் பெற்ற பெயர். நாடு என்பது பரந்த பொருளில் கையாளப்படுகின்ற ஒரு சொல்தான். எனினும் இங்கே அது பாலைய நாட்டைக் குறிக்கின்றது. நாட்டார் என்ற இவ்வுரிமைப் பெயர்தான் வல்லம்பர்களை இந்நாட்டின் மூத்தகுடி என்று அடையாளம் காட்டுகின்றது.

வல்லம்பர்களுக்கு அம்பலகாரர்(ன்) என்ற பெயரும் உண்டு. அம்பலம் என்றால் ஊர்ப்பொது அவை என்று பொருள்படும். அந்த அவைக்குத் தலைமை ஏற்று நடத்தியதனால் பெற்ற பெயர் இது. ஞா. தேவநேயப்பாவாணரின் சொற்பிறப்பியல் அகரமுதலியில், அம்பலகாரன் என்ற சொல்லுக்கு ஊரவைத் தலைவர் (Chairman of a Village Assembly) என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஆக இப்பாலைய நாட்டுக்கு உரிமையும் முதன்மையும் உடைய குடிமக்கள் வல்லம்பர்களே என்பது தெளிவாகின்றது.

வல்லம்பர் என்றால் வலிய அம்புகளைச் செலுத்தும் வில்வீரர் என்பது பொருள். பாண்டிய நாட்டுக்கும் சோழநாட்டுக்கும் இடைப்பட்டதாகிய இப்பகுதியைக் காக்கும் உரிமைபூண்டு அன்றையப் பெருவேந்தர்க்கு விற்படைத்துணை நின்றமையால் ஏற்பட்டது இப்பெயர்.

நற்றிணை 198-ஆம் பாடலில் (கயமனார் பாடியது)

"மையணல் எருத்தின் முன்பின் தடக்கை
வல்வில் அம்பின்" என்ற தொடர் காணப்படுகிறது.

வல்வில் அம்பர் என்ற தொடர்தான் காலப் போக்கில் வல்லம்பர் என்று மருவி இருக்கவேண்டும்.

புகழுக்குரிய வில்தொழிலால் பெற்ற காரணப்பெயர் காலப்போக்கில் தன் காரணத்தை இழக்கவேண்டிய கட்டாயம் நேரிட்டுவிட்டது. அரசர்களின் ஆட்சி இருந்தவரை விற்படைக்கு வீரர்கள் தேவைப்பட்டனர். போரின் முடிவில் விற்படை வீரர்கள் சிறப்பிக்கப்பட்டனர். கானாடு காத்தான் (கான் நாட்டைக்காத்தவன்) முள்ளாங்காடு (முள்ளன் காடு-பகைவரை முள்போல் வருத்துபவன்) என்ற ஊர்ப்பெயர்கள் இதனை இன்றும் எடுத்துக்காட்டிக் கொண்டிருக் கின்றன. இதனால் புகழும் சமூக மதிப்பும் ஏற்பட்டன. ஆகவே தாம் குலத்தொழிலாகக் கொண்டிருந்த வில்தொழில் திறமையை அவர்கள் பேணிக் காத்தனர். மன்னர்கள் ஆட்சி மறைந்து

ஆங்கிலேயர் ஆட்சி வந்ததும் வில்லின் இடத்தைத் துப்பாக்கி பிடித்துக் கொண்டுவிட்டது. வில்லுக்கு வேலையில்லை என்ற நிலை வரவே தம் படைத் தொழிலை இழந்து பெயரளவில் வல்லம்பராகி விட்டனர். இதுதான் வரலாறு.

சிலர் வேறு வகையால் இதனைக் கூறுகின்றனர். சோழ நாட்டில் உள்ள வல்லத்தில் இருந்து இங்கே வந்து குடியேறியமையால் வல்லம்பர் ஆயினர் என்பது இவர்கள் கூற்று. அது முற்றிலும் தவறானது; மொழியியலுக்கும் முரணானது; இடப்பெயர்ச்சிக் கோட்பாட்டிற்கும் ஒத்து வராதது. முதலில் இடப்பெயர்ச்சிக்கான காரணங்களைப் பார்போம்.

ஒரு குழுவினர் / சமுதாயத்தினர் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு இடம்பெயர வேண்டுமானால் அதற்குக் கீழ்க்கண்டவாறு காரணங்கள் இருக்கவேண்டும்.

1. பிழைப்பிற்கு வழியில்லாமையால் இடம் பெயர்தல்.
2. ஒரு குழுவின் மீது ஏற்பட்ட அரச பகையின் காரணமாக இடம் பெயர்தல்.
3. தம் குழுவினரோடு ஏற்பட்ட கருத்து வேறுபாடு காரணமாக இவர்களோடு இனிமேல் கூடிவாழ முடியாது என்ற நிலையில், பாதிக்கப்பட்ட சிறுகுழுவினர் இடம் பெயர்தல்.
4. புதிய இடங்களைத் தேடிப்போக வேண்டும் என்ற விருப்பம் காரணமாக இடம் பெயர்தல்.

முதற்காரணம் இதற்கு முற்றிலும் பொருந்தாது. ஏனெனில் வளம் மிகுந்த காவிரிபாயும் சோழ நாட்டில் பிழைக்க வழியில்லாமல் வளமற்ற இந்தப் பாலை நிலப்பகுதிக்குக் குடிபெயர்ந்தனர் என்பது ஏற்றுக்கொள்ளக் கூடியது அன்று.

இரண்டாவது காரணமும் ஏற்றுக் கொள்ளக் கூடியதாக இல்லை. அரசரோடு பகை என்றால் ஒரு குழுவினர் முழுமையாகத்தான் வெளியேறுவர். சிலர் அங்கும் பலர் இங்குமாக இடம் பெயர்ந்திருக்க முடியாது. ஒப்பு நோக்கிற்காக ஒன்று சொல்லலாம். நாட்டுக் கோட்டை நகரத்தார் சோழ நாட்டிலிருந்து அரசபகை காரணமாக வெளியேறியதாக அவர்கள் வரலாறு தெரிவிக் கின்றது. அவர்கள் சோழநாட்டை விட்டு முழுமையாகத்தான் வெளியேறி உள்ளனர். அவர்களுக்குச் சோழ நாட்டோடு எந்த ஒட்டும், எந்த உறவும் இல்லை என்பதை இங்கே எண்ணிப் பார்க்க வேண்டும். எண்ணிப் பார்த்தால் இரண்டாவது காரணமும் பொருத்தமானது இல்லை என்பது புலப்படும்.

இனி மூன்றாவது காரணமும் பொருத்தமாக இல்லை. உட்பகை காரணமாக (தம் குழுவிற்குள்) இடம் பெயர்ந்திருந்தால் உறவு முழுமையாக அற்றுப் போயிருக்கும். உறவு அற்றுப் போகாமை மட்டுமன்று; இன்றும் தொடர்ந்து இருப்பதால் உட்பகையால் இடம் பெயர்தல் என்ற காரணமும் பொருந்தவில்லை.

இனிப் புதிய இடங்களை நாடிச் செல்லல் என்ற நான்காவது காரணமும் பொருத்தமாக இல்லை. எப்பொழுதுமே புதிய இடத்தை நாடிப் போகின்றவர் தொகை சிறியதாகவும் இடப் பெயர்ச்சியை விரும்பாதவர்கள் தொகை மிகுதியாகவும்தான், இருக்கும். இது தான் இயல்பு. ஆனால் நிலைமை எப்படி உள்ளது? சோழநாட்டில் உள்ள வல்லம்பர்களின் தொகை குறைவாக இருக்கின்றது. பாலைய நாட்டில் உள்ள வல்லம்பர்களின் தொகை மிகுதியாக இருக்கின்றது. இந்த எண்ணிக்கை வித்தியாசம்தான் சோழ நாட்டிலிருந்து வந்து குடியேறியவர்கள் என்ற கொள்கையை முறியடித்து விடுகின்றது.

இதனை ஒரு எடுத்துக்காட்டின் வாயிலாகவும் உறுதிசெய்து கொள்ளலாம். பாலைய நாட்டிலிருந்து வல்லம்பர்கள், பார்த்திபனூர், சமுத்திராப்பட்டி, உலுப்பகுடி போன்ற ஊர்களில் குடியேறி உள்ளனர் என்பதை நாம் அறிவோம். இங்கேயெல்லாம் குடியேறியோர், பாலைய நாட்டோடு ஒப்பிடுகையில் மிகச்சிறிய தொகை யினராகத்தான் உள்ளனர். ஏன்? எப்பொழுதுமே புதிய இடம் நாடிக் குடியேறுவோர் தொகை குறைவாகத்தான் இருக்கும் என்பதுதான். ஆக இந்த அடிப்படையிலும்கூட பாலைய நாடுதான் வல்லம்பர்களின் பூர்விக தாயகம் என்பது தெளிவாகிறது.

ஆகவே மேலே காட்டிய நான்கு காரணங் களும் இவர்கள் வாழ்க்கையோடு பொருந்தா மையால் இவர்கள் சோழ நாட்டிலிருந்து இங்கு வந்து குடியேறியோர் அல்லர் என்பதும், இங்கேயே கல்தோன்றி மண்தோன்றாக் காலத்திலிருந்தே மண்ணின் மைந்தர்களாய் - மூத்த குடிமக்களாய் வாழ்ந்து வருகின்றவர் என்று கூறுவதும்தான் உண்மை என்பதை நிலைப்படுத்தி விடுகின்றன.

அப்படி என்றால் வல்லத்தில் இவர்கட்குக் கோயில் இருப்பதும், வல்லத்தில் இருந்து வந்தமையால்தான் வல்லம்பர் என்ற பெயர் வந்தது என்பதும் பொய்யா என்றொரு வினா எழுப்பப்படலாம். வல்லத்தில் ஒரு கோயில் (பள்ளத்தி ஐயனார் கோயில்) இருப்பதனாலேயே இவர்கள் வல்லத்திலிருந்து வந்தவர்கள் என்று கூறிவிடமுடியாது. உண்மையில் இவர்கள் வல்லத்திலிருந்து வந்திருந்தால் பள்ளத்தூரிலோ, வேலங்குடியிலோ அல்லது பிற ஊர்களிலோ வல்லத்து ஐயனார் கோயிலை அல்லவா அமைத்திருக்க வேண்டும்? அவ்வாறு இல்லையே? முதலில் வழிபட்ட இறைவனைச் செல்லுமிடங்களிலும் பிரதிட்டை செய்வதுதான் மனித இயல்பு. பள்ளத்தூரிலிருந்து வல்லம் சென்ற ஒரு குழுவினர்தாம் பள்ளத்தி ஐயனாரைப் பிரதிட்டை செய்தனர் என்று திருவாளர் அய்க்கண் அவர்கள் கூறுவதுதான் சரியானது. இங்கே வல்லத்து ஐயனார் இல்லாமையும் வல்லத்தில் பள்ளத்தி ஐயனார் இருப்பதும், பாலைய நாட்டிலிருந்துதான் சோழ நாட்டிற்குக் குடியேற்றம் நடந்ததே தவிரச் சோழநாட்டிலிருந்து பாலைய நாட்டிற்குக் குடியேற்றம் நடைபெறவில்லை என்பதைத் தெளிவாக்கி விடுகின்றது.

வல்லத்தில் இருந்து வந்ததனால்தான் வல்லம்பர் என்ற பெயர் வந்தது என்பதற்கு மொழியியல் இலக்கண அமைப்பு பெருந் தடையாக இருக்கின்றது. மொழியின் அமைப்பை மீறி, ஒரு சொல் தோன்றுவது என்பது இயலாது.

வல்லம் என்ற சொல்லின் இறுதியில் உள்ள எழுத்து 'ம்' என்பது. இதனை மகர ஈற்றுச் சொல் என்று இலக்கணத்தில் குறிப்பிடுவோம். இவ்வீற்றினை உடைய பெயர்ச் சொற்கள் வேற்றுமை உருபை ஏற்றால் இடையில் அத்து என்னும் சாரியை தோன்ற வேண்டும் என்பது விதி. இலக்கணம் படித்தவர்கள் மட்டுமில்லை. படிக்காத பாமரர்களும்கூட இவ்விதியைப் பற்றி நின்றுதான் பேசுகிறார்கள்.

மரம் என்ற சொல் ஒரு மகர ஈற்றுச்சொல். இது வேற்றுமை உருபை ஏற்றால் (மரம் + ஐ + வெட்டினான்) அத்து என்னும் சாரியை பெற்று மரத்தை வெட்டினான் என்றுதான் யாரும் பேசுவார்கள். மரமை வெட்டினான் என்று யாரும் கூறுவதில்லை. இதுபோலவே குடம், பாலம் என்னும்பெயர்ச் சொற்களும் வேற்றுமை உருபை ஏற்கும் போது குடத்தை உடைத்தாள், பாலத்தைக் கட்டினான் என்றுதான் யாரும் கூறுகின்றனர். இதில் படித்தவர், படிக்காதவர் என்ற வேறுபாடுகள் எல்லாம் கிடையாது.

வல்லம் என்பது மகர ஈற்றுச்சொல். வல்லம்பர் வல்லத்திலிருந்து வந்தவர் என்றால் ஐந்தாம் வேற்றுமை உருபாகிய இல் என்பதை ஏற்கும்போது வல்லத்திலிருந்து வந்தவர் என்றுதான் சொல்ல வேண்டும். அவ்வாறாயின் வல்லத்திலிருந்து வந்தவர் வல்லத்தார் என்றுதான் அழைக்கப்பட்டிருக்க வேண்டும்: வல்லம்பர் என்று அழைக்கப்பட முடியாது.

அவ்வாறில்லை, வல்லம்பர் என்பதில் வல்லம் என்பது இடத்தின் பெயர். **பர்** என்பது (வல்லம் பர்) அவர்களைக் குறிக்கும் விகுதி என்று யாரேனும் கூறுவார்களேயானால் சேலம் என்ற ஊரிலிருந்து வந்தவர்களைச் சேலம்பர் என்றும், கும்பகோணம் என்ற ஊரில் இருந்து வந்தவர்களைக் கும்பகோணம்பர் என்றும் அழைக்க வேண்டியதாகிவிடும். இவ்வாறு அழைத்தால் இதைவிடப் பெரிய நகைச்சுவை வேறு இருக்க முடியாது. மேலும் அது மொழிக் கொலையாகவும், இலக்கணக் கொலையாகவும் தான் முடியும். மொழியியல் அமைப்புக்கு மாறாக வல்லத்திலிருந்து வந்ததனால்தான் வல்லம்பர் என்ற பெயர் வந்தது என்ற கூறுவது முற்றிலும் பொருத்தமற்றது என்பதை அறியவேண்டுகின்றேன்.

இனி வல்லம்பர் என்ற சொல்லிற்குச் சென்னை பல்கலைக்கழக அகரமுதலி இவ்வாறு பொருள் எழுதுகின்றது. 'வல்லம்பர்-தஞ்சாவூர் திருச்சிராப்பள்ளி இராமநாதபுர ஜில்லாக்களில் உள்ள விவசாயம் செய்து சீவிக்கும் ஒரு சாதி.'

கிழக்கே ஏத்த நாட்டு வல்லம்பர்களையும், மேற்கில் ஏழூர்ப்பத்து நாட்டு வல்லம்பர்களையும் பாலைய நாட்டு வல்லம்பர்களையும், வடக்கில் பத்தூர் நாட்டுவல்லம்பர்களையும் தெற்கில் அமராவதி நாட்டு வல்லம்பர்களையும், ஒருங் கிணைத்து மேற்சொன்னவாறு சென்னை பல்கலைக்கழக அகரமுதலி தெரிவிக்கின்றது. இந்நான்கு நாடுகளும் பழைய தஞ்சை, திருச்சி, இராமநாதபுரம் மாவட்டங்களில் பரவிக் கிடப்பதை நாம் அறிவோம். நாம் அண்மைக் காலத்தில் செய்து கொண்ட ஐந்து நாட்டு இணைப்பை சென்னைப் பல்கலைக்கழக அகர முதலி எண்பது ஆண்டு களுக்கு முன்பே உருவாக்கி விட்டது.

வல்லம்பர்கள் பழங்காலத்தில் விற்படை வீரர்களாக இருந்து பிறகு அத்தொழிலின் சிறப்புக் குன்றவே அவர்கள் விவசாயத்தை மேற் கொண்டனர் என்றொரு கருத்தும் பேசப்படுகிறது. இதுவும் அவ்வளவு பொருத்தமானது அன்று.

விற்படை வீரர்களாக இருந்த காலத்திலும் அவர்கள் தொழில் வேளாண்மைதான். பண்டைக் கால அரசர்கள் தலைநகரங்களில் மட்டும்தான் நிரந்தரமான படை அமைப்பை வைத்திருந் தார்கள். போர் ஏதேனும் தொடங்கிவிட்டால் போர்க்கலை பயின்ற வீரர்களை ஒருங்கிணைத்துப் போரை நடத்துவதுதான் அக்கால வழக்கம்.

பழங்காலத்தில் கல்வி என்பது பெரும்பாலும் ஓரளவு எண்ணும் எழுத்தும் கொண்டதாகவும் பெருமளவு போர்க்கலைப் பயிற்சியாகவும்தான் அமைந்திருந்தது. போர்க் கலைப் பயிற்சியின் அடிப்படைகள் குடும்ப அளவிலேயே அக்குடும்ப உறுப்பினர்களால் கற்பிக்கப்பட்டது.

பாலைய நாட்டைப் பொறுத்தவரையில் போர்க்கலைப்பயிற்சியைத் தரும் அமைப்பாகப் பழங்காலத்தில் விளங்கியவை பிள்ளையார் கூடங்கள். இன்று இவை பிள்ளையார் கூடங்கள் என்று தவறாக அழைக்கப்படுகின்றன. யானை முகமும் பானை வயிறும் கொண்ட பிள்ளையாருக்கும் இதற்கும் எந்தத் தொடர்பும் இல்லை.

பிள்ளையார் என்றால் போர்க்கலையோடு தொடர்புடைய இளைஞர்கள் என்பது பொருள். கூடம் என்பது பயிலும் இடம் என்று பொருள்படும். எண்ணும் எழுத்தும் பயிலும் இடம் பள்ளிக்கூடம் என்று அழைக்கப்பட்டாற்போலப் பிள்ளையார் (இளைஞர்) போர்க்கல்வி பயினும் இடம் பிள்ளையார் கூடம் என்று அக்காலத்தில் அழைக்கப்பட்டது. தொல்காப்பியத்துள் வரும் பிள்ளை நிலை, பிள்ளையாட்டு, பிள்ளைப்பெயர்ச்சி என்னும் புறத்துறைகளை ஒப்பிட்டு நீங்கள் இதனை அறிந்துகொள்ள முடியும்.

இன்று பிள்ளையார் கூடம் எப்படியோ உருமாறிப்போய்விட்டது. இது போர்க்கலைப் பயிற்சிக் கூடம் என்பதை இதன் பக்கத்தில் இன்றும் கிடக்கும் இளவட்டக்கல்தான் எடுத்துக்காட்டும் சான்றாக அமைந்துள்ளது. பிள்ளையார் கூடம் வைத்துப் போர்க்கலைப் பயிற்சிபெற்ற காலத்தில்தான் நாம் வல்வில் அம்பர்களாக - அல்லது வலல்லம்பர்களாக வாழ்ந்தோம். இருநூறு ஆண்டுகட்கு முன்வரை இப்பயிற்சிகளை நாம் பெற்றுவந்தோம். ஆங்கிலேயர் நம் நாட்டுக்கு வந்தபோது துப்பாக்கியின்முன் வில் வேலையற்ற தாகிவிட்டது. மேலும் ஆங்கிலேயர் வருகைக்கு முன்னர் நம் வசம் இருந்த காவல், அரசு நிர்வாகம் போன்றவையும் காலப்போக்கில் வெள்ளையர் களால் நியமனம் செய்யப் பெற்றோரிடம் சென்றுவிட்டன. இதனால் நம்முடைய போர்க் கலைப் பயிற்சிகள் நின்றுவிட்டன. பிள்ளையார் கூடங்கள் பிள்ளையார் மடங்களாக மாறி விட்டன. போர்ப்பயிற்சி அடியோடு புறந்தள்ளப்பட்டுவிட்டது.

பிள்ளையார் கூடங்கள் போர்ப்பயிற்சிக் கூடங்களாகவும் நாம் வல்வில் அம்பர்களாகவும் திகழ்ந்த காலத்திலேயே அது நமக்கு முழுநேரத் தொழில் இல்லை. ஒரு சிலருக்கு - ஆட்சி அமைப்பில் இடம் பெற்றிருந்தோர்க்கு மட்டுமே அது முழுநேரத் தொழிலாக இருந்தது. வல்லம்பர்கள் அனைவருக்குமான முழு நேரத் தொழிலாக இருந்தது வேளாண்மைதான். பகுதிநேரத் தொழில்தான் (போர்க்காலங்களில் மட்டும்) வல்வில் அம்பர் தொழில். ஆக நாம் வில்தொழிலின் சிறப்பும் தேவையும் குறைந்த தனால்தான் நாம் வேளாண்மைக்கு வந்தோம் என்பது அவ்வளவு பொருத்தமாக இல்லை. பகுதி நேரத் தொழிலைக் காலம் பறித்துக் கொண்டு விட்டது. முழுநேரத் தொழில் மட்டுமே தொடர்ந்து வந்தது என்பதுதான் உண்மை.

வில்தொழிலின் வீழ்ச்சிக்குப் பிறகுதான் நாம் வேளாண்மைக்கு வந்தோம் என்றால் நாம் நில உடைமையாளர்களாக இருந்திருக்க முடியாது. மேலும் நாம் இத்தொழிலுக்கு வருமுன்னரே வேளாண்மையில் இங்கு ஈடுபட்டிருந்தோர் யார் என்ற கேள்விக்கு விடையும் கிடைக்காது.

இன்றைய நிலை என்ன? இன்று நம்மவர்களில் பல குடும்பங்களுக்கு நிலமே இல்லை. தொழிலும் கூட வேளாண்மையாக இல்லை. நம்முடைய சமுதாயத்தின் வாழ்க்கைப் போக்கில் அடுத்த மாற்றத்திற்கான ஆயத்தங்கள் தீவிரமாக நிகழ்ந்துகொண்டிருக்கின்றன. பல்வேறு பட்ட தொழில்களில் நம்மில் பலர் இணைந்து கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். இன்னும் ஓரிரு நூறாண்டுகள் போனால் நாம் வேளாண்மையை முழுமையாகக் கைவிட்டு விட்டுத் தொழில் முனைவோர்களாக-வணிகர்களாக-பிற

துறைகளில் பணிபுரிவோராக மாறிவிடுவோம். அதற்கான இயற்கை மோதல்கள் சமுதாயத்தினுள் தீவிரமாக நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. சமுதாய வளர்ச்சியின் திரிந்தமைவுகள் (பரிணாம வளர்ச்சிகள்) எப்படிப் போகின்றன என்பதைக் கூர்ந்து பார்ப்பவர்கள் இதனைத் தெளிவாக அறிந்துகொள்ள முடியும்.

வீரமிக்க சமுதாயத்தில்-தன் விருப்பான போக்குள்ள குணாம்சங்களைக் கொண்டிருக்கின்ற ஒரு சமுதாயத்தில் நீண்ட நெடுங்காலமாக இருந்து வருகின்ற பழக்க வழக்கங்களை மீறிச் செல்கின்ற வகையில் இத்திரிந்தமைவுகள் எப்படி ஏற்பட்டன என்பது ஓர் சுவையான வரலாறு. இத்திரிந்த மைவுகள் ஏற்பட்டதற்கு இரண்டு காரணங்களை நான் சுட்டிக் காட்டமுடியும்.

1. நம் சிறப்புத் தொழிலாக இருந்த விற்றொழிலின் வீழ்ச்சியும், மன்னர்களால் நமக்கு வழங்கப்பட்டிருந்த ஆட்சி அதிகார வாய்ப்புகளின் இழப்பும், இத்திரிந்தமைவிற்கான முதற்காரண மாகும். இரண்டிற்கும் ஆங்கிலேயர் வருகையே அடிப்படையாக அமைந்துள்ளது.

2. ஓர் ஆளுமை மிக்க சமுதாயத்தின் அருகில் சற்றே மெலிவுற்ற இன்னொரு சமுதாயம் இருக்குமானால் முதற்சமுதாயத்தின் ஆளுமைக் கூறுகள் இரண்டாம் சமுதாயத்தின்மீது படிவதையோ அதன் வயமாகிப் போதலையோ யாரும் தடுக்கமுடியாது. நமக்கு அயலில் வாழ்ந்த ஆளுமை மிக்க சமுதாயம் நகரத்தார் சமுதாயம் என்பதை நான் சொல்ல வேண்டியதில்லை.

நகரத்தார்கள் நீண்ட நெடுங்காலமாக வாணிகம் புரிபவர்கள். மன்னர் பின்னோர் என்று இலக்கியங்கள் சிறப்பிக்கும் அரசனுக்கு அடுத்த நிலையினர். ஆகவே மென்மையும் ஏதுவாக நடந்து கொள்ளும் இயல்பும்-கைகலப்பில் இறங்கி விடாத தன்மையும் நீக்குப் போக்காகப் பேச, நடக்கப் பழகிவிட்ட பண்பாடும் அவர்களிடம் நிறைந் திருந்தன. இவை முழுமையாக இருந்தால்தான் வாணிகத்தில் வெற்றிபெற முடியும். ஓர் ஐம்பது ஆண்டுகட்கு முன் வரை மேற்சொன்ன நகரத்தார் பழக்கங்கள் வல்லம்பர்களிடத்தில் இருந்ததே கிடையாது. நகரத்தார்களின் எதிர்நிலைக் குணாம்சம் (நகரத்தாரின் எதிரியாக இல்லை) கொண்டவர்களாகவே வல்லம்பர்கள் விளங்கினர்.

இன்று என்ன நிலை? முழுமையாக இல்லை என்றாலும் பாதிக்கு மேல் ஏதுவாக நடந்து கொள்ளும் இயல்பை, நீக்குப் போக்காகப் பேசவும் - நடக்கும் குணத்தைப் பெற்று வணிகர்களாகத் - தொழில் முனைவோர்களாக - வணிக நிலையங் களில் விற்பனையாளர்களாக நிர்வாகிகளாக மாறியுள்ளனர். இந்த ‘இரசவாதம்’ எப்படி நிகழ்ந்தது? ஓர் ஆளுமைமிக்க சமுதாயத்தின் குணாம்சங்கள் அயலில் உள்ள சமுதாயத்தின் மீது படிந்து மாற்றத்தை விளைவிக்கும் என்ற சமுதாய வளர்ச்சி விதிதான் காரணம்.

ஒரு மனிதன் பல காரணங்களுக்காக அடுத்தவரைச் சார்ந்து வாழ்கிறான் என்றாலும் இதன் தலையாய காரணம் தன் தேவைகளை நிறைவு செய்துகொள்வதுதான். ஆங்கிலேயர் வருகையால் தன் சமூக, பொருளியல் நிலையில் இருந்து இறங்கு முகத்திற்கு ஆளான வல்லம்பர் களின் வாழ்க்கை, நகரத்தார்களைச் சாரத் தொடங்கியது. அவர்களின் உதவியாளராகப் பர்மா, மலேயா, சிங்கப்பூர், வியட்நாம் (சைகோன்) இலங்கை போன்ற நாடுகளுக்குச் செல்ல வேண்டிய கட்டாய நிலை தோன்றியது. அப்படி ஏற்பட்ட போது தங்களுடைய இயற்கைக் குணாம்சத்தை கழற்றி வைத்துவிட்டு நகரத்தார்களின் ஏதுவான குணாம்சத்தைப் பூண வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிட்டது. வாழ்க்கைத் தேவைகளும் அண்மைக்காலக் கல்வி வளர்ச்சியின் பயன்களும்தாம் நம்முடைய முரட்டுத்தனத்தைப் பெருமளவுக்கு மென்மையாக்கின. நகரத்தார் களோடு ஒட்டியும் உறவாடியும், இணைந்தும் செல்ல வைத்தன. ஒரு காலத்தில் தம் பொருட் பாதுகாப்புக் கருதியும், குடும்பப் பாதுகாப்புக் கருதியும் வல்லம்பர்களைச் சார்ந்திருந்த நகரத்தார்களை, வல்லம்பர்கள் வாழ்க்கைப் பாதுகாப்பின் பொருட்டுச் சார்ந்து வாழவேண்டியவர்களாகக் காலம் மாற்றிவிட்டது.

இக்குணாம்ச மாறுதலை எடுத்துக் காட்டின் வழியாக நாம் தெளிவுபடுத்திக் கொள்ளலாம். கரடுமுரடாகவும் கூர்மையாகவும் உள்ள ஓர் கல், ஆற்று வெள்ளத்தால் அடித்து வரப்பட்டுக் கூழாங்கல் என்ற பெயரைப் பெற்று வழுவழுப்பாகக் கிடப்பதைப் பார்த்திருப்பீர்கள். கரடுமுரடான கல் வழுவழுப்பான கல்லாக மாறியது எப்படி? ஆற்று வெள்ளம் அடித்து இழுத்துச் சென்ற போது வழியிற் கிடந்த பொருள்களின் மீது மோதிக் கூர் மழுங்கி வழுவழுப்பாகிவிட்டது.

கூர்மையான - முரட்டுத்தனமான இயல்புகொண்ட வல்லம்பர்களை நகரத்தார்களின் குணாம்ச வெள்ளந்தான் மென்மையானவர்களாக மாற்றியிருக்கிறது என்றால் 'ஓர் ஆளுமை மிக்க சமுதாயத்தின் நிழல் இன்னொரு சமுதாயத்தின் மீது படிந்து தாக்கத்தை ஏற்படுத்தித் தன்வயமாக்கிவிடும் என்ற சமுதாய மாற்றக் கோட்பாட்டு விதி எவ்வளவு வலிமையானது என்பதை நாம் இப்பொழுது தெளிவாக உணர முடிகிறது.

வல்லம்பர்களின் சமயக் கோட்பாடு மிகவும் தொன்மையானது, எளிமையானது, தத்துவச் சிக்கல்களுக்குள் அகப்பட்டுக் கொள்ளாதது, இயற்கையானதும் கூட. நடுகல் வழிபாடும் இயற்கை வழிபாடும்தாம் இவர்கள் வழிபாடு. நடுகல் வழிபாடு என்பது வீரயுகத்தின் தொன்மைப் பண்பாடு என்பதை அறிந்திருப் பீர்கள். கருப்பர் வழிபாடு நடுகல் வழிபாட்டின் தொடர்ச்சியாகவும் இருக்கலாம். அடுத்து இவர்கள் வழிபாடு, இயற்கை வழிபாடு. தம் வேளாண்மைத் தொழிலுக்கு அடிப்படையான மழையை வழிபடுவதுதான் இவர்களது இயற்கை வழிபாட்டு முறை. இது இன்று கொஞ்சம் உருவகப்படுத்தப்பட்டு மாரி, செல்லாயி என்ற வடிவத்தைப் பெற்றது. மாரி என்றால் மழைதான். செல் என்பதும் மழையைத் தான் குறிக்கும்.

காளி, கருப்பன் என்பனவும் கூட மழையின் குறியீடாகப் படைக்கப்பட்டிருக்கலாம். காளி என்றால் கரிய - நிறம் உடையவள் என்பது தான் பொருள். கருப்பன் என்றால் கரிய - நிறம் பற்றி வந்த பெயர்கள், மழைக்குக் காரணமாக இருக்கின்ற மேகத்தின் நிறம் கருப்புதான். மழையைத் தருகின்ற மேகத்தின் உருவகமாகவே காளி, கருப்பன், மாரி, செல்லாயி போன்ற தெய்வங்கள் ஆக்கப்பட்டனர் என்று சொன்னால் அது அறிவார்ந்த வாதம்தான். புராணத்திலும் மழையைத் தரும் கடவுளாக வருணன், இந்திரன் வணங்கப்படுகின்றனர். தம் தொழிலுக்கு அடிப்படையாக அமைந்த மழையையே உருவகப்படுத்திக் குறியீட்டு வகையால் வணங்கி வழிபாடு செய்தனர் என்று சொன்னால் வல்லம்பர்களை இயற்கை வழிபாட்டினர் என்பது புலப்படும்.

"கெடுப்பதூம் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை"

என்றார் வள்ளுவர். ஆக்குவதும் அழிப்பதும் மழையின் குணம் என்கின்றார் வள்ளுவர். இறைவனின் குணமும் ஆக்கல் அழித்தல் தானே? அதனால் தான் மழையை அது தரும் மேகத்தைக் காளியாக - கருப்பனாக - மாரியாக - செல்லாயியாக உருவகம் செய்து வணங்கினர். ஏனெனில் வேளாண்மை செய்வோரை ஆக்கவும் அழிக்கவும் வல்ல கடவுள் மழைதானே?

நகரத்தார்கள் இத்தகைய இயல்பிலிருந்து மாறியவர்கள். அவர்கள் சிறு தெய்வ வழிபாட்டு முறைகளில் இருந்து விடுவித்துக் கொண்டு முழுமுதற் கடவுள் என்ற தத்துவக் கோட்பாட்டை நோக்கி முன்னேறிச் சென்றவர்கள். இதனால் தான் அவர்கள் முழுமுதற் கடவுள் என்ற சமய தத்துவ ஞானத்தின்படி சிவனுக்கும் திருமாலுக்கும் ஏராளமான கோயில்களை எழுப்பிக் குட முழுக்கும் செய்தனர். ஆனாலும் பழைமையை விட முடியாமல் இன்னும்கூடச் சிறு தெய்வ வழிபாட்டிலும் ஈடுபட்டு வருகின்றனர்.

வல்லம்பர்கள் சிவன் கோயிலோ பெருமாள் கோயிலோ கட்டிக் குட முழுக்குச் செய்ததாக எனக்குத் தெரியவில்லை. ஐம்பது ஆண்டுகட்கு முன்வரை எக்கடவுட்கும் கோயிலும் கோபுரமும் எழுப்பிக் குடமுழுக்குச் செய்ததாகவும் தெரியவில்லை. நடுகற்களையும், காளி, கருப்பன், மாரி, ெல்லாயி என்ற மழையின் உருவகமாக நிறுவப்பட்ட கற்களையும்தாம் வல்லம்பர்கள் கடவுள்களாகக் கருதி வழிபட்டு வந்தனர். ஆனால் இன்றைய நிலை என்ன?

கடந்த இருபதாண்டுகளுக்கு முன் வேலங்குடியில் பெரிய நாயகி அம்மன் கோயில், கோட்டையூரில் கோட்டை நாச்சியம்மன் கோயில், பாலையூரில் முத்து மாரியம்மன் கோயில் என்று கோபுரங்கள் எழுப்பப்பட்டுக் குட முழுக்கும் செய்யப்பட்டுள்ளன. நெடுங்காலமாக வல்லம்பர் களின் வழக்கமாக இல்லாத ஒன்று இப்பொழுது எப்படி வந்தது? நகரத்தார் சமுகத்தின் பாதிப்புத்தான் இக்குடமுழுக்குகள் எல்லாம். இதன் வாயிலாகவும் நம்முடைய வல்லம்ப சமுதாயத்தின் முகத்தோற்றம் கொஞ்சம் கொஞ்சமாக நகரத்தார் சமுகத் தாக்கத்தால் மாறிக் கொண்டிருக்கிறது என்பதை நாம் அறிந்துகொள்ள முடிகின்றது.

அது சரி. இத்தகைய மாற்றங்கள் தேவையானவைதாமா? வரவேற்கத்தக்கனவா- இப்படி எல்லாம் வினா எழுப்பினால் அதற்கு நான் நேரிடையாக விடையளிக்க முடியாது. நாம்

தேவையில்லை என்று தீர்ப்பு எழுதுவதானலேயே அது திரும்பிப் போய்விடவும் மாட்டாது. வரவேற்க ஆயத்தமாக இல்லை என்பதற்காக அது வந்த வழியைப் பார்த்துக் கொண்டு போகவும் மாட்டாது. காலம் என்பது மாற்றங்களின் நாற்றங்கால். அங்கே புதிய புதிய மாறுதல்கள் முளைத்துக் கொண்டு தான் இருக்கும்.

காலமும் அதனால் ஏற்படுகின்ற நெருக்கடிகளும் நம் பிடரியைப் பிடித்துத் தள்ளுகின்றபோது நாம் ஓடாமல் நின்று விடுவோமேயானால் நாம் நின்று கொண்டே இருக்க வேண்டியதுதான். காலம் வெகு தூரம் நம்மைக் கடந்து சென்றுவிடும். இந்த இடைவெளி பெரிதானால் நாம் மேலும் பிற்படுத்தப் பட்டவர்களின் பட்டியலில்தான் இடம்பிடிக்க நேரும். ஆகவே காலத்தோடும் ஓடவும் வேண்டும்; கவனமாக ஓடவும் வேண்டும். இதுதான் இன்று வல்லம்பர்கள் மேற்கொள்ள வேண்டிய பணி.

எந்த ஒரு சமுகமும் தன்னுடைய பழைமையான பண்பாட்டு நாகரிக வடிவங்களை விட்டுவிடாது பேணிப் பாதுகாக்கும். அப்பேணல் தான் அச்சமுதாயத்தின் வரலாற்றுப் பழைமையை எடுத்துக் காட்டும். இந்த வகையில் இரண்டாயிரம் ஆண்டுக்கு முந்திய கால இலக்கியமான அகநானூற்றில் காணப்படும் ஒரு திருமண நிகழ்ச்சியை இங்கே எடுத்துக்காட்டுவேன். இத்திருமண நிகழ்ச்சிகள் இன்றும் நம் வல்லம்பர் சமுதாயத்தில் நடப்பது போலவே அமைந்திருக் கினறன. இத்திருமணக் காட்சி இதோ.

இரவு உணவு உண்ணும் ஆரவாரம் தொடர்கின்றது. கால்கள் நிறுத்திப் பந்தல் போடப்பட்டள்ளது. அமர்வதற்கு ஏற்றவகையில் மணப்பந்தலில் புதுமணல் பரப்பப்பட்டிருக்கின்றது. விளக்குகள் ஏற்றப்பட்டுள்ளன. மணவறையில் மாலைகள் தொங்கவிடப்பட்டுள்ளன. நள்ளிருள் கடந்து புலர் காலைப் பொழுது தோன்றத் தொடங்கிற்று. 'மணஞ் செய்யும் நேரம் வந்துவிட்டது' என்று மங்கல மகளிர் தலையில் சுமந்து வந்த குடத்தையும் கையில் எடுத்துவந்த தட்டையும் மணமக்களைச் சுற்றி நின்று முன்னும் பின்னுமாக முறையாகத் தர வாங்கி மணத்தை முடித்து வைத்தனர். அதன் பின்னர் பிள்ளை பெற்ற மகளிர் தண்ணீரில் இடப்பட்ட பூக்களை எடுத்து மணமக்களை தலைமீது தூவி வாழ்த்தினர். (அகநானூறு-பாடல் 86)

ஐம்பது ஆண்டுகட்கு முன்வரை நம் வீட்டுத் திருமணங்கள் இரவில்தாம் நடத்தப்பட்டன. போக்கு வரத்து வசதிப் பெருக்கமும் பொருளாதாரக் காரணிகளும் இரவுத் திருமணங்களைப் பகல் திருமணங்காளக மாற்றிவிட்டன.

குடம் தட்டு என்பன எல்லாம் மங்கலப் பொருள்கள். இவற்றைப் பெண்கள் கூடி நின்று முறையே மாற்றி மாற்றித் தருவதை நீங்கள் கண்டிருப்பீர்கள். பின்னர்த் தண்ணீரில் இடப்பட்ட பூக்களை எடுத்து மணமிடுவதையும் கண்டிருப் பீர்கள். அகநானூற்றில் காணப்படும் திருமணம் நம் சமுகத்தார் திருமணமே என்பதில் எந்த ஐயமும் இல்லை.

இதிலிருந்து நகரத்தார் திருமணம் கொஞ்சம் வேறுபட்டிருக்கும். மாமுது பார்ப்பான் மறை வழிகாட்டக் கண்ணகி கோவலன் திருமணம் நடந்ததாகச் சிலம்பு கூறுகின்றது. இது நகரத்தார் திருமண முறை என்பதை நீங்கள் என்று இன்றும் காணலாம்.

2000 ஆண்டுகட்கு மேலாகத் திருமணச் சடங்குகளை மண்வாசனை மாறாமல் நாம் பேணிக் காத்துள்ளோம் என்பது மட்டுமன்று. அந்நாகரிகப் பண்பாட்டுக் கூறுகளின் விளை நிலமாக இப்பாலையூர் நாடு விளங்கியுள்ளது என்பதும் தெளிவாகிவிடுகின்றபோது நாம் பெருமைப் படாமல் இருக்க முடியாது.

பழைமையான இப்பாலைய நாடும் இதன் குடிமரபும் பல வரலாற்றுச் சுவடுகளைத் தன்னுள் தாங்கி நிற்கின்றன. பழைய சுவடுகள் அழிந்து விடாமல் புதிய தடங்களைப் பதிக்க வேண்டியது இச்சமுதாய இளைஞர்களின் தலையாய கடமையாகும். காலம் சிலவற்றை உருவாக்கி நம் காலடியிலே கூடக் கொண்டுவந்து தரும். சில வேளைகளில் எட்டிச்செல்லும் வாய்ப்புகளைத் தொட்டிழுத்துக் காலத்தை உருவாக்கிக் கொள்ளவும் நேரும். எப்படியாயினும் சரி, பாலை நாட்டைப் பழம்பெரும் நாடாகவும் பண்பாடு நாகரிகங்களின் தொட்டிலாகவும் காட்டும் வரலாற்றொளியை மேலும் தூண்டித் துலக்கமுறச் செய்யவேண்டியது சமுதாய இளைஞர்களின் தலையாய கடமை என்பதை மறக்க வேண்டா.



# ஓர் இனிய விடியலின் விடியல்

பேராசிரியர் மு. வைரவன் M.A.,M.Phil.,B.T.,

ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கையிலும் ஒரு நாள் மிக முக்கியமான நாளாகக் கருதப்படும். அஃது அவனுடைய பிறந்த நாளாகவோ, அல்லது திருமண நாளாகவோ அல்லது தொழில் முறையில் ஏற்றம் பெற்ற நாளாகவோ இருக்கலாம்; அது போலவே ஒரு சமுதாயத்தைப் பொறுத்த அளவில் ஒருநாள் நினைவில் கொள்ளத்தக்க நாளாக அமைதல் உண்டு.

நமது சமுதாய வரலாற்றுப் பின்னணியை நோக்குகின்ற பொழுது, பாலைய நாட்டின் நடுவண் அமைந்து செந்நெல் கழனி சூழ் வேலங்குடி எனும் நல்லூரில் கோயில் கொண்டு பேரருள் சுரக்கும் பாலைய நாட்டாரின் முதற்பெருந்தெய்வமாம் பெரிய நாயகி அம்மனின் திருக்குட நீராட்டு விழா நிகழும் நன்னாளே, அத்தகு சிறப்புடைய பெருநாளாக அமைகிறது. அஃது எப்படி?

மூவேந்தர்களின் செங்கோன்மை சிறக்க ஏர்முனையிலும், போர் முனையிலும் கை வண் ணம் காட்டிய மூத்தகுடி வல்லம்பர் போற்றும் கொற்றவையாம் பெரியநாயகி அம்மனுக்குத் திருக்குட நீராட்டு விழா நடத்துவதற்காக. இற்றைக்குச் இருபது ஆண்டுகளுக்கு முன்பு, நல்லோரை பார்த்து ஒருநாள் நம் பெரியோர்களால் குறிக்கப் பெற்றது. அந்த நாளே நம் சமுதாயத்தின் மறுமலர்ச்சி நாளாக மலரும் என்று அந்நாளில் நாம் கணித்தோமில்லை. இஃது எப்படி?

அந்தக் காலக்கட்டத்தில் (1985) அத்தகையதோர் புனித விழா எடுப்பதற்குப் போதுமான செல்வச் செழிப்பு நம்மிடையே இல்லை என்பது கசப்பான உண்மை. எனினும் நமது சான்றோர்களின் அரிய முயற்சியினால், திருக்குட நீராட்டு விழா தொடர்பான ஆகம நியமங்களுக்கு மட்டும் செலவுத் தொகையை ஒதுக்கி, மற்ற கலை, இலக்கிய நிகழ்ச்சிகள் சிக்கனக் கத்திரிக்கோலால் குறைக்கப்பட்டன. எளிய தொண்டர், செயல் வீரர், தெய்வத்திரு S.P.R. அவர்களின் அரிய முயற்சியினால் குடமுழுக்கு விழா மலர் ஒன்று வெளியிட வேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது; அத்தகையதோர் அரிய மலரை பேரா. டாக்டர் அய்க்கண் அவர்களின் வழிகாட்டுதலின் பேரில் வெளியிடவேண்டும் என்றும் ஒப்புக்கொள்ளப்பட்டது.

நம் சமுதாயத்தில் முதன் முதலாக சமுதாய மலர் ஒன்று அரிதாக மலர இருக்கின்றது; மலருக்கென்று ஒதுக்கப்பட்ட தொகையோ மிகக் குறைவு; எஞ்சியுள்ள காலமோ அதைவிடக்குறைவு; இத்துணை தடைகளையும் தாண்டி மலர்ச் செடியைப் பதியம் போடவேண்டும். இஃது ஒரு சவால்!

மொத்த மலரையும் சில பகுதிகளாகப் பிரித்து, சிவகாசி, மதுரை, புதுக்கோட்டை என்று பல ஊர் அச்சகங்களுக்கு அனுப்பி, மூலப்படிகளை இரவு பகலாகத் திருத்தி, மணக்கும் மலராக வெளியிட முடிந்தது என்றால் அஃது அருள் உருவாய்த்திகழும் பெரியநாயகி அம்மனின் திருவருள் அன்றோ?

பனி மலர் போன்று ஈரப்பதத்துடன் உலர்ந்தும் உலராமலும் இருந்த விழா மலரை வெளியிட்டுப் பேசிய தெய்வத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள், "இஃதோர் சமுதாய மலர்" என்று பாராட்டுரைத்தது நினைத்தற்குரியது.

அம்மலரின் முகப்புத் தோற்றமும், அமைப்பு முறையும். பகுப்பு முறையும் எல்லோரையும் கவர்ந்தது மட்டுமல்லாமல் - அது போன்று வெளியிடவேண்டும் என்ற அவாவினை மற்றவர்களிடத்தே தூண்டிய மாதிரி மலராகவும் இருந்தது என்பது துணுக்குச் செய்தி.

இத்தகையதோர் எழில்மிகு விழா மலர் நம்மிடையே ஒரு மன மாற்றத்தை - உணர்வுப் பூர்வமான ஒருமைப்பாட்டை (Emotional Integration) ஏற்படுத்தியது என்றால் அது மிகையாகாது. இவ்வாறு நமது சிந்தனை மடை மாற்றத்திற்கு அடிகோலியது இந்தத் திருக்குட நீராட்டு விழாதானே?

அம்மட்டோ! இந்த விழாவின் முடிவில் சில நூறு ரூபாய்கள் கணக்கில் மிச்சமாக நின்றது. இந்தச் சில நூறு ரூபாய்கள்தான் நம் ஏழை மாணவர்களுக்குக் கல்வி நிழல் தரும் கற்பகத்

தருவாகப் பின்னாளில் மாறியது. அஃது எப்படி?

இந்தச் சிறுதொகையைக் கொண்டு நம் சமுதாய நலிந்த பிரிவினர்க்கென கல்வி அறக்கட்டளை ஒன்று அமைக்கலாம் என்று பேரா. அய்க்கண் தெரிவித்தபொழுது "உனக்கு ஒன்றும் தெரியாது; நம்மிடையே பணம் சேர்ந்தால்தான் பிரச்சனையே உருவாகும்; பலரும் பல விதமாகக் கேள்விக் கணைகள் தொடுப்பர்; இது நமக்கு ஒத்து வராத செயல்" என்று பழுத்த முன் அனுபவமும், சமுதாய அக்கறையும் கொண்ட பெரியவர்கள் அறிவுரை கூறினார்கள்; அஃது உண்மைதான்!

எனினும் தெய்வத்திரு S.P.R. அவர்களும், கல்வி வள்ளலும் முன்னாள் பாராளுமன்ற உறுப்பினருமான திரு P. சுப்பையா அம்பலம் அவர்களும் இணைந்து போராடிக் கன்னி முயற்சியாக இதனைத் தொடங்கிப் பார்க்கலாம் என்று எடுத்துக் கூறி மற்றவர்களின் ஒப்புதலைப் பெற்றுத் தந்தார்கள். அதன் பயனாக நம் சமுதாயத்தின் பல முனைகளிலிருந்தும் நமது வள்ளல் பெருமக்கள் வாரி, வாரி, வழங்கி, பாலையை நாட்டு வல்லம்பர் கல்வி அறக்கட்டளையைக் கல்வி அமுதூட்டும் அன்னையாகப் போற்றி வளர்த்துள்ளார்கள் என்றால், அத்துணை பெருமையும் பெரியநாயகி அம்மன் திருக்குட நீராட்டு விழாவின் சிறப்புத்தான் அன்றோ! இதுவும் விழா தந்த அருங்கொடை அன்றோ?

வல்லம்பர் கல்வி அறக்கட்டளை மூலம் நம்மிடையே ஓர் உணர்வுப் பூர்வமான ஒருங்கிணைப்பு ஏற்பட்டவுடன், 'இடத்தால், காலத்தால் பிரிவு பட்டுப் பல்வேறு பகுதிகளில் பிரிந்து வாழும் நம் இனத்தவர்களை எல்லாம் ஒரு குடைக்கீழ் கொண்டுவந்தால் என்ன?' என்ற எண்ணம் உருவாகியது. அந்த உணர்வு, கடிதில் செயல்வடிவம் பெற்று, தமிழ் நாடு வல்லம்பர் சங்கம் என்ற பெரிய அமைப்பு உருவானதும் இந்த விழா மூலம் நாம் பெற்ற துணை விளைபொருள் (By Product) ஆகும்.

இம்மட்டோ? கல்வி அறக்கட்டளை சார்பாக ஊர்தோறும் சென்று நாம் பரிசளிப்பு விழா நடத்துகின்றபொழுது நம்மிடையே செய்திகள் பரிமாறிக்கொள்வதில் பல்வேறு இடர்ப்பாடுகள் இருந்தமை உணரப்பட்டது. செய்தித் தொடர்பு இடைவெளியைக் குறைக்க வேண்டும். இதற்கு என்ன வழி?

எல்லா முன்னேறிய சமுதாயத்தினரும் தமக்கென்று ஒன்றிரண்டு இதழ்களைச் சொந்தமாக நடத்தி வருகின்றார்கள். ஆனால் நமக்கென்று ஒரு சிற்றிதழ் கூட இல்லையே! இந்த ஏக்கப் பெருமூச்சே 'ஏ' இதழாக மலர்ந்தது! அஃது எப்படி?

பத்திரிகைத் துறையில் பெரிய பெரிய ஜாம்பவான்கள் எல்லாம், இதழ்கள் தொடங்கித் தோற்றுப் போயுள்ளார்கள் என்பது பொய் கலவாத உண்மை. மென்மையான கலை ஆகிய வாசிப்புக்கலை நம்மிடையே (அதிகம்) இல்லை என்றே கூறலாம்; முன்னேறிய சமுதாயத்தினர் அதிகாலையில் பால், மோர் வாங்குகின்ற பொழுதே, நாள் வார ஏடுகளை வாங்கிப் பழக்கப்பட்டவர்கள்....

எனினும் முன்னோடிச் சிந்தனையாளர் களின் பேராதரவோடும், நம் சமுதாய வள்ளல் பெருமக்களின் தாராளமான கொடைத் திறத்தாலும் 'ஏ' இதழ் துவண்டு விடாமல் பீடு நடை போடுகிறது என்றால் அதுவும் திருக்குட நீராட்டு விழாவின் சிறப்புத்தான் அன்றோ? இந்த 'ஏ' இதழ் மூலமாக நம்மிடையே வாசிப்புக்கலை வளர்ந்து, சமுதாய அக்கறையுடன் கட்டுரை வரையும் நற்சிந்தனை யாளர்களும், கவிஞர்களும், சிறுகதைச் சிற்பிகளும் மெல்லப் பெருகி வருகின்றார்கள் என்பது பெட்டிச் செய்தி!

நமக்கு வெகுதொலைவில் இருந்த இசை, பரதநாட்டியம் போன்ற நுண்கலை வட்டாரங் களிலும் நாம் குறுநடை போடத் துவங்கி உள்ளோம் என்பதை மறுத்தற்கியலாது. பெரிய அளவில் ஆங்கு முத்திரைகள் பதிக்காவிட்டாலும், ஓரளவு துணிந்து நிற்கின்றோம் என்பதே பாராட்டிற்குரியது. அத்தகையதோர் கலை உலக மறுமலர்ச்சி ஏற்பட்டதும் இந்தக் காலக் கட்டத்தில்தான்.

அதேபோல் ஆன்மிகத் துறையிலும் நாம் பாதச் சுவடுகளைப் பதித்துள்ளோம். மெய்த் தொண்டர்கள் புனிதப்பயணத்தின் போது தம்மை இளைப்பாற்றிக்கொள்ளும் விதத்தில் வசதிகள் மிக்க விடுதிகளைக் குன்றக்குடி, பழனி, இராமேஸ்வரம்

போன்ற திருத்தலங்களில் வடிவமைத்து, புனரமைத்துக் கட்டிக் கொண்டதும் நற்சிந்தனை வளம் மிக்க நம் பெரியவர்களின் வெற்றிதானே!

'வண்மை இல்லை ஓர் வறுமை இன்மையால்' - இது கம்பன் கண்ட கோசல நாடு. நம் பாலைய நாட்டிலோ பொருள் வறுமை, சிந்தனை வறுமை... என்ன செய்வது? கல்வி வளமும் பொருள் வளமும் பெருகவேண்டும். இவ்வளங்கள் பெருக என் செய்வது? சமுதாய வள்ளல்களை உருவாக்கி, அவர்கள் மூலம் கல்வி, தொழில் வளங்களைப் பெருக்க வேண்டும். அஃது எப்படி?

'நிதி மிகுந்தோர் பொற்குவை தாரீர்
நிதி குறைந்தோர் காசுகள் தாரீர்
அதுவுமற்றோர் வாய்ச்சொல் அருளீர்'

-என்ற பாரதியின் பாடலை முன்னிறுத்தி வீடு வீடாகச் சென்று நம் சமுதாயப் பெருமக்களின் செவ்வி யறிந்து சென்று, பொருள் வேண்டிப் பெறும் சீர் பெரும் தொண்டர் கூட்டம் தான் இதற்குக் காரணம். எண்பது வயது முதல் நடுத்தர வயதுவரை உள்ள நம் மக்கள் இடம் பெற்றுள்ள இத்தொண்டர் திருக்கூட்டம், கல்வி அறக்கட்டளை என்றும், கோயில் மடம் புனரமைப்பு என்றும் அணுகிய போதெல்லாம் நம்மவர்கள்தாம் மெய் வருந்தி ஈட்டிய செல்வத்தில் ஒரு பகுதியை மனம் நோகாது, கொடுப்பது குறைவு என்று கருதி, 'எடுத்துக் கொள்க!' என்று வாரி வழங்கும் உத்தமப் பண்பு மிக்க நமது வள்ளல்களைப் பாராட்டுரைக்கச் சொல்வளம் நம்மிடம் இல்லை எனின் நெஞ்சால் நினைந்து, நினைந்து நெக்குருகிப் போற்றுவோமாக!

மற்றும் நாம் செலவிட விரும்பாத நேரத்தையும் உடல் உழைப்பையும், தியாகம் செய்து நம்மிடையே வள்ளல்களை உருவாக்கிய சீர்பெரும் தொண்டர் கூட்டத்தை நாம் பாராட்டவேண்டாமோ? பாராட்ட வேண்டாம்; நெருப்பெனச் சுடும் சுடு சொல் ஏந்திக் கவண் தொடுத்து எறியாமல் இருந்தாலே போதுமானது!

"இந்த இருபது ஆண்டுக் காலத்தில் இங்கு நிகழ்ந்துள்ள நிகழ்வுகளைப் பெரிய சாதனைகள் என்பது நாம் போற்றிக் கொள்ள முடியாது; எனினும் நாம் நம் சமூகத்தேரை சிறிது அசைத்துள்ளோம்; இந்தச் சிறிய அசைவு என்பதே பெரிய சாதனைதான்" என்று பாவலர் மணி ஆ.பழநி அய்யா அவர்கள் கூறிய கூற்று இங்கு நினைத்தற்குரியது. பல நூறு ஆண்டுகள் சிந்தனையில் தேக்கம் ஏற்பட்டு நிலைகுத்திப்போன நம் சமுதாயம் இப்பொழுது அசையத் தொடங்கியுள்ளது. இந்த அசைவின் இயங்கு விசையை (Momentum) துரித விசையாக (Acceleration) மாற்ற வேண்டியது நமது கடமை ஆகும்.

இருபது ஆண்டுகளுக்கு முன்பு நடந்த அம்மனின் திருக்குட நீராட்டு விழாதான் இத்துணை மாற்றங்களுக்குத் தாயாக இருந்தது என்று கருதுவதற்கு இடமுண்டு. அதைப்போன்று 10.6.2005 ல் நடைபெற்ற திருக்குட நீராட்டு விழா வினைத் தொடர்ந்து, அடுத்து வரும் 2020க்குள் வலிமைமிக்க சமுதாயமாக மாற வேண்டும் என்பதே நமது வேணவா. நாம் சாதிக்க வேண்டியவை நம்முன் மலைபோல் நின்று நம்மை மலைக்க வைக்கின்றன.

"Woods are dark and deep ...
And miles to go before I sleep"

என்று நம் முன்னாள் பாரதப்பிரதமர் நேரு அவர்கள் அடிக்கடி குறிப்பிடுவார். ஆம்! நாம் கடக்க வேண்டிய அடர்காடுகள், நீந்த வேண்டிய நீர்நிலைகள், பாதம் பதிக்க வேண்டிய பாலை வனங்கள்... இன்னும் எவ்வளவோ இருக்கின்றன. இருந்தால் என்ன? நம்மிடையே மதிநுட்பம் மிக்க சிந்தனையாளர்களும், மன வளமிக்கத் தொழில் வளம் கண்ட வள்ளல் பெருமான்களும், என் கடன் பணி செய்து கிடப்பதே என்று இயங்கும் சீர் பெரும் தொண்டர் கூட்டம், வினைத் திட்பம் மிக்க செயல் வீரர்களும், வாய்ச்சொல் அருளி ஊக்க மருந்தூட்டும் பெருந்தகையாளர்களும் இருக்கின்ற பொழுது நாம் அஞ்சுதல் எற்றுக்கு?

நாம் பீடு நடைபோடுவோம்; அதோ தெரிகிறது வெளிர் நிறம் தோய்ந்த தொடுவானம்; அது நமது சமுதாயத்தின் இனிய விடியலின் விடியலைச் சுட்டும் கீழ்வானம்; புதிய விடியலை நோக்கிப் புறப்படுவோம், வாரீர்! வாரீர்!



# குல சாமி

**சா. நடராசன்**
வல்லநாடு ஏஜென்சீஸ், காரைக்குடி

பாலையை நாட்டின் நடுநாயகமாக இலங்கும் வேலங்குடியில் அமைந்துள்ள பாலையை நாட்டு வல்லம்பர்களின் குலதெய்வம் பெரியநாயகி அம்மன் கோவில் சீரமைப்புப் பெற்று நடைபெறும் குடமுழுக்கு விழாவையொட்டி இம்மலர் வெளியிடப் படுகிறது.

ஒவ்வொரு சமயத்தினருக்கும், பிரிவினருக்கும் அப்பகுதியில் ஒரே அமைப்பு இருக்கும். அதில் அங்கத்தினர்களின் பட்டியல் (புள்ளிகள்) திருமணப் பதிவுகள் முதலியன பதிவு செய்யப்படும். அதன்படி பாலையை நாட்டாரின் திருமணம் இங்கு பதிவு செய்யப்பட்டு, இக்கோவிலிலிருந்து அனுப்பப்படும் மாலையைப் பெற்றே திருமணங்கள் நடை பெறுகின்றன. இப்பதிவுகளைப் பாதுகாக்கப் பதிவறை, அலுவலகம் என இல்லாமல் தனியாரின் மேற்பார்வையில் இருந்து வந்தது. தற்போது குடமுழுக்கு விழாப் பணியுடன் ஒரு நல்ல அலுவலகமும் கட்டப்பட்டு, திறந்து வைக்கப்பட்டது மிகவும் சிறப்பானதாகும்.

இன்றைய நவீன உலகில் பெண் இனத்திற்குக் கோரிக்கை வைக்கும் அனைத்தும் நம்பிரிவில் அன்றே ஏற்றுக் கொள்ளப்பட்டது. இருபாலருக்கும் திருமண நியதிகள் ஒன்றே என ஒப்புக் கொள்ளப்பட்டது. அய்யரை வைத்து, தீ வளர்த்து, திருமணங்கள் செய்வதில்லை. பிறந்த வீட்டு உறவு ஆண்,பெண் இருபாலருக்கும் சாகும்வரை தொடர்ந்துவரும் வகையில் சம்பிரதாயங்களை ஏற்படுத்தி உள்ளோம். பிறந்த வீட்டு உறவு வேண்டும் என்பதாலேயே தாய்மாமனுக்குப் பெண் கொடுத்தனர். மாமன்மகனுக்குக் கொடுக்கலாம் என்று சிலர் நினைக்கலாம். ஆனால் வீட்டில் பெரிசு இருக்கும்போதுதான் வார்த்தை எடுபடும். ஆகவே தான் மாமனுக்கே கொடுத்து வீட்டில் அய்யா, ஆயா கண்முன்னாலேயே நடக்க வாய்ப்பு உண்டு என்பதால்தான் வலியுறுத்தப்பட்டது. ஆரியரின் கன்னிகாதானம் கிடையாது.

பெரிய நாயகி, பெரிய கருப்பன், பெரிய தேர், பெரிய குளம், பெரிய கோவில் என்பதெல்லாம் தஞ்சாவூர் மாவட்டத்தில் பிரசித்தம். நாம் வல்லம் பகுதியில் இருந்து வந்தவர்கள் என்பதற்குப் பெரியநாயகியே சாட்சி. வில் அம்பில் தேர்ச்சி பெற்றவராதலால் வல்லம்பர் ஆனார் என்பாரும் உண்டு.

நம் இறைவழிபாடும், பழந்தமிழர் வழிபாடும் ஒன்றே. நம் ஊர் பிள்ளையார் கூடங்களில் சிலை வைப்பதில்லை. ஏதாவது ஒருபடம், மஞ்சு விரட்டு மாடு படம் போன்றவை இருக்கும். சாமியை வேண்டுமானால், அழைத்துப் பேசுவது, சமுதாயப் பிரச்சனைகளைப் பேசவே இக்கூடங்கள் பயன்பட்டன. அறுவடை முடிந்து, திருவிழா எடுத்து, ஒருவாரம் மட்டும் சோலை ஆண்டவர் அல்லது பெரிய நாயகி அம்மன் சிலையைத் தூக்கி வந்து வழிபட்டு, மகிழ்ந்து, விருந்து வைத்து ஆடல் பாடல் நிகழ்ச்சிகளுடன் முடித்து அத்துடன் 'செய்யும் தொழிலே தெய்வம்' என்றிருப்பவர்கள் நாம். ஐந்து வேளை தொழுகை, பாவமன்னிப்பு கோரல் முக்கால பூஜை போன்று தினமும் கோரிக்கை வைக்கும் பழக்கம் உள்ளவர்கள் அல்லர் நாம். பல தெய்வங்களை வணங்காமல், குலசாமி ஒன்றே சதம் எனவும், பஞ்ச பூதங்கள், கிரகங்களை மனதில் நினைத்து வேறு கோவில்களுக்குச் சென்று, குல தெய்வத்தின் கோபத்திற்கு ஆளாகாமல் நடந்தால் குல சாமி என்றும் கூடவே வரும் என்பது உறுதி.

# ஒன்றுக்கு மூன்று

திருமதி புவனேசுவரி சின்னச்சாமி, பள்ளத்தூர்

“பள்ளத்தூரை ஆளுகின்ற பெரிய நாயகி
பாலைய நாட்டார் போற்றுகின்ற அரியநாயகி”

- இந்தவரிகள் சமயபுரம் மாரியம்மன் துதியில் வருபவை. ஒவ்வொரு சக்தியும், ஒவ்வொரு ஊரிலும் பலபெயர்களுடன் அம்மனாக அருளாட்சி செய்து வருகின்றது.

பாலையநாட்டைச் சேர்ந்த வேலங்குடியில் குடிகொண்டுள்ள அருள்மிகு பெரியநாயகி அம்மன் ஒவ்வொரு ஆண்டும் வைகாசி மாதம் முதல் திங்கட்கிழமை அழைத்து வரப்புட்டு பத்து நாட்கள் சிறப்பாக மண்டகப்படிகள் செய்து மீண்டும் பதினோராம் நாள் அம்பிகையை பள்ளத்தூர் மக்கள் கண்ணீர் மல்க வேலங்குடிக்குத் திரும்ப அனுப்பி வைக்கும் நிகழ்ச்சி மனதை விட்டு என்றும் நீங்காத காட்சி. அந்த சக்தி மிகுந்த அன்னை பெரியநாயகி எங்களுக்கு அருளிய பெருங்கருணையை இங்கே நினைவு கூர விரும்புகிறோம்.

ஏழாண்டுகளுக்கு முன்னால் சென்னையில் வங்கி அதிகாரியாகப் பணியாற்றி வந்த என் கணவர் 1997 நவம்பர் மாதம் ஓய்வு பெற்றதால், குடும்பத்துடன் காரைக்குடிக்கு வந்து சேர்ந்தோம். அன்று மாசி மாத மகா சிவராத்திரி. அன்றிரவு எங்கள் குலதெய்வமாகிய அருள்மிகு கருவி ஆண்டவர் கோவிலுக்குச் சென்று அங்கு நடந்த நான்காம் ஜாம பூஜையில் தரிசனம் செய்துவிட்டு பள்ளத்தூர் திரும்பி வந்தோம். மறுநாள் அருள்மிகு கந்த விநாயகர் கோவிலில் மகா சிவராத்திரி கொண்டாடப் பட்டது. அங்கு சுவாமி தரிசனம் செய்து வரச் சென்றோம். அப்போது அங்குவந்த ஊர்ப்பிரமுகர்கள் சிலர், என் கணவரைச் சந்தித்து, ஸ்ரீ பெரியநாயகி அம்மன் சப்தாரண மண்டகப்படிக்கு, வருகிற ஆண்டில் அவரைத் தலைவராக நியமிக்க உத்தேசித்திருப்பதாகவும், அதற்காக அவரது சம்மதத்தைக் கோருவதாகவும் கூறினார்கள்.

என் கணவருக்குச் சிறிது தயக்கம். ஆனால் அவர்கள் ஒப்புதல் கேட்கும் இடம் கோவில் வாசஸ்தலம். அவர்கள் வேண்டுகோளை ஏற்றுக்கொள்வதா அல்லது மறுத்துவிடுவதா என்று அவர் மனதுக்குள் ஒரு சிறுபோராட்டம். ஏனெனில் அதற்கும் ஒரு காரணம் இருந்தது.

அவர் வங்கி மேலாளராக உடுமலைப்பேட்டையில் பணியாற்றி வந்தபோது, அங்கிருந்த பள்ளத்தூர் நாட்டார் பெருமக்கள் அவரை ஆயுள் சந்தாதாரராக்கி, 1986ம் ஆண்டு வைகாசித் திருவிழா ஆறாம் மண்டகப்படியன்று அவருக்கு பரிவட்டம் கட்டிச் சிறப்புச்செய்தார்கள். அதேபோன்று சென்னையில் வங்கி முதன்மை மேலாளராகப் பணியாற்றி வந்தபோது அம்பத்தூர் வாழ் நாட்டார் பெருமக்கள் அவரை அங்கு ஆயுள் சந்தாதாராகச் சேர்த்து, 1994ம் ஆண்டு வைகாசித் திருவிழா ஏழாம் மண்டகப்படி அன்று அவருக்குப் பரிவட்டம் கட்டிச் சிறப்புச் செய்தார்கள். ஆகவே சற்று தயங்கினாலும் இரண்டு முறை அம்பாள் அருட்கடாட்சம் கிட்டியதால், மூன்றாம் முறையாக வருகின்ற இந்த அரிய வாய்ப்பு அம்பாளின் அனுக்கிரகமாகத் தானிருக்கும் என்ற எண்ணம் மேலோங்க, வந்தவர்களிடம் தனது சம்மதத்தைத் தெரிவித்துவிட்டார். ஆனால் இந்த முறை

மண்டகப்படி செலவுகள் அனைத்தும் எங்களைச் சேர்ந்தது. சுமார் இருபதிலிருந்து இருபத்தைந்தாயிரம் ரூபாய் வரை செலவாகலாம் என்று சொல்லிப்போனார்கள். அவர்கள் கூறிய செலவுகள் பற்றி கவலைப்படாமல் என் கணவர் முழு மனதுடன் ஒப்புக்கொண்டார். அப்போது எங்கள் மீது அக்கறை கொண்ட சில நண்பர்கள், உறவினர்கள் "இந்தச் செலவு அவசியமா? யோசித்துக்கொள்ளுங்கள்" என்று சொன்னதுமுண்டு, அவர்களிடம் என் கணவர் சொன்ன ஒரே பதில், "இது அம்பாள் மூன்றாம் தடவையாகத் தரும் ஒரு அரிய வாய்ப்பு. அவள் கருணை ஒன்றுக்கு இரண்டாக நிச்சயம் கிடைக்கும்" என்று சொல்லி அவர்கள் வாயைப் பொத்தி வைத்தார்.

1998-ம் ஆண்டு மே மாதம் 26ம் தேதி அருள்மிகு பெரியநாயகி அம்மனுக்கு சப்தாரண மண்டகப்படி, அவரைத் தலைவராகக் கொண்டிருந்த வர்த்தகர் மற்றும் தொழிலாளர் சங்கத்தார் உதவியுடன் சிறப்பாக நடந்தேறியது. முறைப்படி அவருக்குப் பரிவட்டம் கட்டி வீட்டிற்கு அழைத்து வந்து விட்டார்கள். வந்திருந்த நாட்டார் பெருமக்களுக்கும் மண்டகப்படி விழா குழுவினர் அனைவர்க்கும், அன்று காலை வீட்டில் சிற்றுண்டி கொடுத்து, உபசரித்து, நன்றி கூறி அனுப்பிவைத்தோம். விழாக் குழுவினர் கூறியது போல, செலவு தொகையும் ரூபாய் இருபத்தைந்து ஆயிரத்தைத் தொட்டுவிட்டது. ஆனால் என் கணவர் மனதில் எவ்வித சலனமுமில்லை. மிக்க மகிழ்ச்சியாகவே இருந்தார்.

ஜூன் மாதம் முதல் வாரம் என் கணவர் பெயருக்கு ஒரு கடிதம் வந்தது. அது பெங்களூரிலிருந்து, ஒய்வு பெற்ற வங்கி அதிகாரிகள் சங்கத்திலிருந்து அனுப்பி வைக்கப்பட்டிருந்தது. அதில் கண்ட அறிக்கையைப் படித்தபோது என் கணவர் மட்டுமல்ல, வீட்டார் அனைவரும் வியந்து போனோம்.

அந்த அறிக்கையில் மத்திய அரசு, தொழிலாளர்களுக்குத் தரவேண்டிய கருணைத்தொகையை (Gratuity) அதிகபட்சம் ரூபாய் மூன்றரை லட்சமாக உயர்த்தி 1997 டிசம்பர் மாதம் புது ஆணை ஒன்று பிறப்பித்து, அதில் குறிப்பாக செப்டம்பர் 1997க்கு பிறகு ஒய்வு பெற்றவர்களுக்கும் அதன் பயனுண்டு என்று அறிவித்திருந்தது. ஆகவே தகுதி உடையவர்கள் வங்கியின் தலைமை அலுவலகத்திற்கு விண்ணப்பித்து ஏற்கனவே வாங்கியதுபோக, பாக்கித்தொகையை வாங்கிக்கொள்ளலாம் என்றும் சொல்லி இருந்தார்கள். அதன்படி என் கணவரும் விண்ணப்பம் அனுப்பி வைத்தார். மறு வாரம் அவருக்குத் தலைமை அலுவலகத்திலிருந்து வந்த கடிதத்தில் ரூபாய் எழுபத்தைந்தாயிரம் அவரது கணக்கில் வரவு வைத்துவிட்டதாக எழுதியிருந்தார்கள். எங்களுக்கோ மட்டற்ற மகிழ்ச்சி. என் கணவர் சொன்னார் "பார்த்தாயா அம்பாளின் கருணையை? அன்று ஒன்றுக்கு இரண்டாகக் கிடைக்கும் என்று சொன்னேன். இன்று அவள் ஒன்றுக்கு மூன்றாகக்கொடுத்திருக்கிறாள்," அவர் கண்ணில் மட்டுமல்ல - வீட்டார் அனைவர் கண்களிலும் ஆனந்தக் கண்ணீர்!

# இறையருள்

இராம. பெருமாள், கானாடுகாத்தான்

உலகெலாம் உணர்ந்தோதற் கரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத்தாடுவான்
மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்
- சேக்கிழார்

"அன்பே சிவம்" "உண்மையே கடவுள்" என்பது சைவநெறி. புத்தம், சமணம், இஸ்லாம், கிறித்துவம், சீக்கியம் ஆகிய அனைத்து மதங்களும் அன்பையும், உண்மையையும் வலியுறுத்துகின்றன. 'உண்மையை நாடு. உண்மை உன் இதயக் கமலத்திலிருக்கிறது' என்று குருநானக் போதித்தார். புத்தர் போதித்த எண் வகை மார்க்கங்களில் தூய எண்ணம், தூய சிந்தனை, தூய வாழ்க்கை, தூய ஒழுக்கம், உண்மைத்தியானம் போன்றவற்றை மனித வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டு மென்று கூறினார். திரி ரத்தினங்களாகிய நன்னம்பிக்கை, நல்லறிவு, நன்னடத்தை ஆகியவற்றை மகாவீரர் மக்களுக்குப் போதித்தார். ஆண்டவனால் படைக்கப்பட்ட நாம் எல்லோரும் சகோதரர்கள். நாம் ஒருவருக்கொருவர் அன்பு காட்ட வேண்டும் என்பது ஏசு பெருமானின் பொன்வாக்கு.

பெற்றோர்கள் குழந்தைகளிடம் காட்டும் அன்புக்கு பாசம் என்று பெயர். தலைவன் தலைவியிடம் காட்டும் அன்புக்குப் பெயர் காதல். மனிதன் இறைவனிடம் காட்டும் அன்புக்குப் பெயர் பக்தி. கடவுள் மனிதனிடம் காட்டும் அன்புக்கு அருள் எனப் பெயர்.

சமயமும் ஆன்மீகமும் ஒரு பெரிய சாகரம். ஆன்மீகத்தில் ஈடுபாடு கொண்டவர் களுக்கு ஆயிரம் கேள்விகள் தோன்றினால், அதில் ஈடுபாடோ. நாட்டமோ இல்லாதவர் களுக்கு பல ஆயிரம் கேள்விகளும், சந்தேகங்களும் தோன்றுகின்றன. ஆன்றோர் களும், ஆன்மீகப் பெரியார்களும் இவற்றிற்கெல்லாம் பதில் கூறி வந்துள்ளனர். அவைகள் ஆன்மீகத்தை, சமயத்தைப் பற்றிய புதிய பரிமாணங்களை வகுத்துள்ளன.

நதிகள் பலவாக இருந்தாலும் சென்றடையும் இடம் ஒன்றே. அதுதான் கடல். பலவிதமான வழிபாட்டு முறைகள் இருந்தாலும் எல்லாம் ஒரே நோக்கத்தை உடையவை. அதாவது இறைக்காட்சி. மனிதர்கள் இயல்பிலும், மனப்பான்மையிலும் வேறுபட்டவர்களாய் இருக்கிறார்கள். வெவ்வேறு இயல்புடையவர்களுக்கு விதவிதமான வழிபாடும், சாதனையும் வேண்டியிருக்கின்றன.

சாத்திரங்களில் நான்கு வகையான வழிபாடுகள் சொல்லப்பட்டு இருக்கின்றன என்று இராம கிருஷ்ண பரமஹம்சர் உணர்த்துகிறார். எல்லாவற்றிலும் மேலான சாதனை சமாதி. அதாவது எங்கும் நிறைந்திருக்கும். பரம்பொருளைக் கண்டு அவனோடு இணைந்திருத்தல். இரண்டாவது தியானம். இறைவன் நான் எனும் இரண்டு மட்டும். தியானம் கூடும்போது இறைவனின் உருவம் மட்டுமே காணப்படும். இது இடைத்தர சாதனை. அதற்கடுத்து ஜபமும் துதி செய்தலும். அதாவது ஜபம் செய்து கொண்டே இறைவனின் திருவுருவத்தையும் சிந்தித்தல். இது கடைத்தர சாதனை. அதற்கும் கீழ்பட்டதுதான் புறவழிபாடு அதாவது விக்கிரகத்தை வைத்து வழிபடுதல். இது எல்லாவற்றிலும் கீழ்ப்பட்ட சாதனை. இந்த சாதனைகள் அனைத்தும் மனத்தின் படைப்புக்களே. இவைகளெல்லாம்

முறையாக உயர்ந்து செல்வதற்கான படிகள். யாருடைய மனம் எந்தப் படியில் இருக்கிறதோ அங்கிருந்து சாதனையை ஆரம்பித்து முன்னேறிச் செல்ல வேண்டும்.

பிறருக்கு உதவி செய்யும் எண்ணம் மனிதனுக்கு ஏற்பட வேண்டுமானால் இரக்க குணம் அவசியம் இருக்கவேண்டும். பிறருக்குத் துன்பம் விளைவிக்காமல் இருப்பதே நல்லகுணம். பிறருடைய துன்பங்களைப் போக்குவதற்கு உதவி செய்வது என்பது உயர்ந்த குணம். நற்குணங்களைக் கொண்டு நற்காரி யங்களைச் செய்வது நல்லது. மக்களுக்குச் செய்கின்ற சேவையே மகாதேவனுக்குச் செய்கின்ற சேவை என்பது சுவாமி விவேகானந்தரின் அருள்வாக்கு. ஜீவ காருண்யம் சிறந்தது என்கிறார் இராமலிங்க சுவாமிகள். 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்பார் அப்பர் சுவாமிகள். மெய்கண்டார் அவரது சிவஞானபோதம் என்ற நூலில் பசு, பதி, பாசம் என்ற சைவ நெறியைக் குறிப்பிடுகிறார். பசு என்பது உயிர். பதி என்பது கடவுள், பாசம் எனப்படுவது மும்மலங்கள். மாயை, கன்மம், ஆணவம் என்பவை இம் மும் மலங்களாகும். மாயா மலம் என்பது இதைச்செய்தால் லாபம், மகிழ்ச்சி கிட்டும் என எண்ணி சில பாவங்களைச் செய்வது. மதி மயங்கிச் செய்யும் காரியம். இல்லாததை இருப்பது போல காண்பித்து ஏமாற்றுவது மாயை. இதற்கு வசப்படாமல் தெய்வத்தை உணர்ந்து ஆன்மீகப் பாதையில் செல்லவேண்டும்.

கன்ம மலம் எனப்படுவது அவனவன் செய்த கர்மவினையினால் ஏற்படும் துன்பங்கள். முன் செய்த வினைப்பயனை அனுபவிக்கிறோம் என எண்ணி இனிமேலாவது பாவத்தை செய்யாமலிருக்கவேண்டும். ஆணவ மலம் என்பது 'நான்தான் பெரியவன், உயர்ந்தவன், செல்வந்தன் என்ற அகம்பாவம் உள்ளவனை குறிப்பிடுகிறது.' இதுபோன்ற ஆணவம் தவிர்க்கப்பட வேண்டிய ஒன்று.

இந்த மூன்று குணங்களையும் ஒழித்து இறைவனை வழிபடல் சாலச் சிறந்தது. இம் மும் மலங்களையும் நீக்கிய உயிர் இறைவனை அடையும் என்பது இதன் தத்துவம். 'முப்பாழும் தாண்டி வந்து அப்பாலே நின்றவர்க்கு அவனருள் கிடைக்கும்' என நந்தனார் பாடியுள்ளார். மேற்சொன்ன மூன்று குணங்களைத்தான் முப்பாழ் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. எனவே மனிதன் இவைகளை அகற்றி இறையருள் பெறவேண்டும். அன்பு, கருணை, விட்டுக்கொடுத்தல், மன்னித்தல் ஆகியவை தேவ எண்ணங்களாகும். பழி வாங்குதல், துன்புறுத்தல், பகை பாராட்டுதல், அகங்காரம் பிறரை அவமதித்தல் முதலானவை அசுர எண்ணங்களாகும். இறைவழிபாடு இறை நம்பிக்கை மூலம் மனிதன் தேவ சக்திகளை வலுப்படுத்த வேண்டும். தேவ எண்ணங்களை வளர்த்து அசுர எண்ணங்களை அழித்தால் மனிதனும் தெய்வமாகலாம். அப்படி ஆனவர்களே ஆழ்வார்களும் நாயன்மார்களும் ஆவர். மனிதனை புனிதனாக்குவது தெய்வசிந்தனை. இறைவனை மனிதன் இடைவிடாது நினைப்பதால் ஜீவன் சிவனாகிறது. 'இன்றைக்கிருப்பவர் நாளைக்கிருப்பார் என்று எண்ணவோ திடமில்லையே' என்பார் தாயுமானவர். மரணம் வருமுன் சரணம் அடைய வேண்டும்.

சூரியன் உலகம் முழுவதற்கும் வெப்பத்தையும் வெளிச்சத்தையும் கொடுக்கக் கூடியது என்றாலும் ஆகாயத்தில் கரிய மேகங்கள் தோன்றிப் பகலவனை மறைக்குமானால் அதன் ஒளியும் மறைந்து போகும். அதுபோல மனத்தில் அகங்காரம் குடிகொண்டிருக்கும் வரையில் அதில்

இறைவனின் ஜோதி பிரகாசிக்காது. மழைநீர் மேட்டுநிலத்தில் தங்கி நிற்பதில்லை. பள்ளமான இடத்திற்கு ஓடி வந்து விடுகிறது. அதுபோன்று கடவுளின் கிருபையானது கர்வமும். தற்பெருமையும் உடையவர்கள் உள்ளத்தில் தங்கிநிற்பதில்லை. பணிவுள்ள வர்களின் உள்ளத்தில்தான் தங்கி நிற்கும் என விளக்குகிறார் இராமகிருஷ்ண பரமஹம்சர்.

தூய்மையாக இருப்பதும், மற்றவர் களுக்கு நன்மை செய்வதும் தான் எல்லா வழிபாடுகளின் சாரமாகும். தூய உள்ளம் இறைவனின் இல்லம். 'கற்றதும் கல்வியும் கடவுள் பூஜையும் நற்றவம் இயற்றலும் நவையில் தானமும் மற்றுள அறங்களும் மனத்தின்பால் அழுக்கு அற்றவர்க்கே பயனளிக்கும்' எனக் குறிப்பிடும் அதிவீரராம பாண்டியரின் கருத்தினை ஈண்டு நினைவு கொள்வோமாக.

தனம்தரும் கல்வி தரும்ஒரு நாளும் தளர்வறியா
மனந்தரும் தெய்வ வடிவுந் தரும்நெஞ்சில் வஞ்சமில்லா
இனந்தரும் நல்லன எல்லாம் தரும் அன்பர் என்பவர்க்கே
கனந்தரும் பூங்குழ லாள் அபிராமி கடைக்கண்களே.

அபிராமியின் கடைக்கண் பார்வைக்கே இத்தனை நலன்கள் கிடைக்கிற தென்றால் முழுக்கண் பார்வையும் கிடைத்தால் எத்தனை நலன்கள் விளையும் என்று நாம் ஆழ்ந்து சிந்திப்போமாக. பாரிலுள்ள அனைவரும் நலமும், வளமும், சீரும் சிறப்பும் பெற்று வாழ அருள்மிகு பெரியநாயகி அம்மன் அருள்புரிவாராகுக. இரை தேடுவது போல் இறையைத் தேடு என்பார் திருமுருக கிருபானந்தவாரியார். மனத் தூய்மையுடன் வாழ்ந்து இறைவன் திருவருளால் இன்சொல்லைப்பேசி, இம்மை இன்பத்தை அடைந்து நற்கதி பெறுவோம்.

வாழ்க வையகம்! வளர்க சைவநெறி!!.

## திருக்குட நீராட்டுவிழா - சில வரிச்செய்திகள்

* புதிதாக உருவாக்கப்படும் கோயில்களுக்குச் செய்யப்படும் கும்பாபிஷேகம் நூதன கும்பாபிஷேகம் எனப்படும்.
* பழமையான கோயில்களைப் புதுப்பித்து மீண்டும் கும்பாபிஷேகம் செய்வது ஜீரணோத்தாரண கும்பாபிஷேகம் ஆகும்.
* அஷ்டபந்தனம் என்றால் எட்டு வகைப் பொருட்களை ஒன்று சேர்த்து பீடத்தில் நிலைக்கச் செய்வதாகும்.
* மனிதன் பஞ்ச பூத சேர்க்கையினால் உருவானவன். இவ்வுலகும் பஞ்சபூதங்களால் அமையப்பெற்றது. இந்த பஞ்சபூதங்களின் சக்திகளை ஒருசேர ஈர்த்து, ஒன்றாக்கி கோபுரக் கலசத்தில் நிலை நிறுத்தச் செய்வதே கும்பாபிஷேகத்தின் நோக்கம்.
* ஆகாயத்தின் பேரருளைக் காற்றில் ஒன்றச்செய்து காற்றின் பேரருளை யாகத்தில் எரியும் தீயில் நிலைக்கச்செய்து கும்பத்தில் உள்ள புனித நீரின் பேரருளை கோபுரக்கலசத்தில் நிலைக்கச் செய்து ஆக மொத்த பேரருளையும் கலசவழி உள்ளிறக்கி கர்ப்பகக் கிரக மூர்த்தத்தில் நிலைக்கச் செய்வதே கும்பாபிஷேகத்தின் நிறைவு நிகழ்வாகும்.

# பெண் வாரிசு

திருமதி வைரஜோதி நாராயணன் B.Sc., B.Ed., (காரைக்குடி) பெங்களூர்-3.

எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும். ஒரு மொழி தழைத்தோங்க எண்ணும் எழுத்தும் எவ்வளவு முக்கியமோ அது போல ஆண், பெண் இருபாலரும் இவ்வுலகம் தழைத்தோங்க முக்கிய காரணமாக இருப்பவர்கள் என்பது நாம் அறிந்ததே. தாயின் கருறையில் ஒரே மாதிரியாகத்தான் பத்துமாதங்கள் குடியிருந்து, பின்பு பாலூட்டி, சீராட்டி வளர்க்கப்படுகின்றனர். பெற்றோரின் மேல் இருவரும் ஒரே விதமான பாசத்தைத்தான் பொழிகின்றனர். ஆனால் வாரிசு எனப் பேசப்படும்பொழுது ஆண்மகனுக்கே முக்கியத்துவம் கொடுக்கப் படுகிறது.

முதற்குழந்தை பெண்ணாகி, பின்பு இரண்டாவதும் பெண்ணாகப் பிறந்துவிட்டால் 'ஹூம்: இதுவும் பெட்டையா?' (கவனிக்க, பெண்மகவு கோழியாகி விடுகிறது!) என அங்கலாய்த்துக் கொள்பவர்களே அதிகம். அவர்களுக்குத் தெரியுமோ பிறப்புலகின் விந்தை? கருவில் ஆண், பெண் என நிச்சயிக்கப்படுவது ஆணின் விந்துவில் உள்ள குரோமோஸோம்கள்தான். பெண்ணிற்கு 'X' குரோமோஸோம் மட்டும் தான் உண்டு. ஆணின் 'Y'குரோமோஸோமும் பெண்ணின் 'X' குரோமோஸோமும் இணைந்தால் ஆண். ஆணின் 'X' குரோமோ -ஸோமும் பெண்ணின்'X'குரோமோஸோமும் இணைந்தால் பெண் என அறிவியல் கூறுகிறது. இதில் பெண் மீது மட்டும் பழி எதற்கு? இதை அறியாமல் கூறும் இருட்டில் இருக்கும் பெண்களை வெளிச்சத்திற்குக் கொண்டுவர ஒரே வழி கல்வி ஒன்று தான். எக்குழந்தையாக இருப்பினும் அதை இயல்பாக ஏற்பதுதான் அழகு.

முற்காலத்தில் ஒவ்வொரு குடும்பத்திலும் நான்கு, ஐந்து எனக் குழந்தைகளின் எண்ணிக்கை இருந்தது. கூட்டுக் குடும்பமாக இருந்ததால் குழந்தை வளர்ப்பில் சிரமம் ஏதுமில்லை. ஐந்தில் ஒன்றாவது ஆணாகப்பிறந்து வாரிசு உரிமையைப் பெற்றுவிடுகிறான். ஆனால் இன்றோ, சிறு குடும்பமே சீரான வாழ்வு தரும் என, இரண்டு போதும், ஏன் ஒன்றே கூடப்போதும் எனக் குழந்தைகளின் எண்ணிக்கை குறைக்கப்பட்டு வருகிறது. இதில் ஆண் வாரிசுக்காக ஏங்குபவர்கள் அடுத்தடுத்து பெண்களைப் பெற்று இறுதியில் ஒரு ஆணைப்பெற்று(?) அவன் தலையில் குடும்ப பாரத்தை ஏற்றி வைத்துச் செல்கின்றனர்.

பாரத தேசந்தன்னை வாழ்வித்த மகாத்மா காந்திக்கு ஆண் வாரிசுகள் இருந்தும், ஒருவர் கூட காந்தியின் பெயருக்குப் புகழ் சேர்க்கவில்லை. ஆனால் ஒரே பெண்ணைப் பெற்ற நேருவைப் பெருமைப் பட வைத்தவர் உலகப் புகழ் பெற்ற அன்னை இந்திரா காந்தி. 'Born with silver Spoon எனப் பேசப்பட்ட நம் பாரத பிரதமர் ஆண் வாரிசுக்காகத் தத்தெடுக்க வில்லை. கல்வி வள்ளல் அழகப்பச் செட்டியாரின் வாரிசு என்றதும் நம் நினைவுக்கு வருபவர் திருமதி உமையாள் ராமனாதன்தான். (வள்ளல் மறைவுக்குப் பின் தத்து எடுக்கப்பட்டிருந்தாலும்). 'கண்கள் இரண்டில் ஒன்றைக் குத்தி காட்சி கெடுத்திடலாமோ? பெண்கள் அறிவை வளர்த்தால் வையம் பேதைமை அற்றிடும் காணீர்' எனக் குரல் கொடுத்த பாரதிக்குக் கூட இரண்டுமே பெண்கள்தான். ஏன்,

திரையுலகில் கொடிகட்டிப் பறக்கும் ரஜினி, கமலுக்குக்கூட இரண்டிரண்டு பெண்கள்தான் அவர்களின் வாரிசு.

இன்றைய உலகம் வெகுவேகமாக எல்லா விதத்திலும் முன்னேறி வருகிறது. வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டி வைப்போம் என்ற காலம் மலையேறி விட்டது. பெண்கள் கல்வி கேள்வியிலும், அறிவுத் திறனிலும் ஆணுக்குச் சரிநிகர் சமானமாக முன்னேறி வருகின்றனர். குழந்தைகள் தாயின் முதல் எழுத்தை 'Initial' ஆகப் போட்டுக் கொள்ளலாம் என்ற சட்டமே வந்துவிட்டது. ஆனால் தம்மை வளர்த்து, ஆளாக்கி, நல்லதொரு வாழ்க்கை அமைத்துக் கொடுத்த பெற்றோர்க்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் (முக்கியமாக இறுதிக்கடன்) செய்ய அப்பெண்களுக்கு உரிமையில்லை. அப்படிச் செய்தால் ஊர் ஏளனமாகப் பார்க்குமோ? உற்றார் உறவினர் ஒதுக்கிவிடுவரோ? பங்காளிகள் பகைத்துக் கொள்வரோ? என்ற அச்சமே காரணம். மனம் ஏங்கினாலும் செய்யத் துணிவில்லை. பூனைக்கு மணிகட்டுவது யார் என்ற எண்ணம் வேறு. ஆண்வாரிசு இல்லாத பெற்றோரின் உதிரத்தில் உதித்த பெண்ணிற்கு இல்லாத உரிமை, பங்காளியின் குழந்தைக்கு எப்படி வந்தது? பெண்ணிற்கு இவ்வுரிமை தரப்பட வேண்டும் என்பதைக் கருவாகக் கொண்டு, திரு அய்க்கண் அவர்கள் கூட சில ஆண்டுகட்கு முன்பு, தொலைக்காட்சித் தொடர் ஒன்றில் பெண் இறுதிக்கடன் செய்வதாகக் காட்டியுள்ளார்கள். பெண்களை மட்டுமே பெற்ற இன்றைய பெற்றோர்கள் ஆண் வாரிசுக்காக ஏங்குவதில்லை. ஆணுக்கு நிகராகப் பெண்களை வளர்க்க ஆரம்பித்து விட்டனர். எல்லாத்துறையிலும் முன்னேற வழி வகுத்துக் கொடுப்பதையே லட்சியமாகக் கொண்டுள்ளனர்.

தான் பெற்ற குழந்தைகளின் கையால் தகனம் செய்யப்படுவதையோ, அடக்கம் செய்யப்படுவதையோ எந்தப் பெற்றோரின் ஆன்மாவும் ஏற்காமல் போகுமோ? துணிந்து செயல்பட யாராவது முன்வந்தால் அவரை இகழாது ஏளனம் செய்யாது, பழங்கதை பேசாது, ஊக்குவித்து நம் சமுதாயத்தில் ஓர் சீர்திருத்தம் கொண்டு வரவேண்டுமென்பதே என் வேண்டுகோள். பெண்களை மட்டுமே பெற்றுள்ள பெற்றோர் எனது இக்கருத்தை ஏற்பர் என நான் நம்புகிறேன். இது என் மனதில் தோன்றிய கருத்துக்களேயன்றி, பழமையைப் புறக்கணிக்க வேண்டுமென்பது என் நோக்கமல்ல.

முற்காலத்தில் செய்யப்படாத (செய்ய விரும்பாத) உதானம் என்ற உடல் உறுப்புக்களைத் தன் இறப்பிற்குப் பின் தானம் செய்யும் உயர்ந்த பண்பு இன்று வளர்ந்துவருகிறது. இது சமுதாயத்தில் எத்தகைய மாற்றங்கள் ஏற்பட்டு வருகின்றன என்பதற்கு ஒரு சிறு உதாரணமேயாகும். மாற்றங்கள் வந்தால் சமுதாயத்திற்கு நன்மையே.

வீடுவரை உறவு, வீதி வரை மனைவி, காடு வரை பிள்ளை என்ற காலம் போய், பெண்கள் இறுதிவரை உடன் சென்று மரியாதை செலுத்தும் வழக்கம் பெரிய நகரமான கோவையில் நடைமுறையில் உள்ளதை நான் நேரிலே பார்த்திருக்கிறேன். காலம் மாறுகிறது. அதற்கேற்ப நாமும் மாறுவதில் தவறு ஒன்றும் இல்லையே! மாற்றம் வந்தால் மகிழ்ச்சியே!

வாழ்க நம் சமுதாயம்!

வளர்க நல்சீர்திருத்தங்களுடன்!!

# நல்வினையும் தீவினையும்

லயன். காந்திமதி கந்தப்பன், பள்ளத்தூர்

அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோயில் திருக்குட நீராட்டு விழா மலரில் எனது கட்டுரை எழுதும் வாய்ப்பு வழங்கிய ஸ்ரீ பெரியநாயகி அம்பாளின் பொற் பாதங்களை வணங்கி இக்கட்டுரையைச் சமர்ப்பிக்கிறேன்.

இன்றைய வேகமான உலகில் கைமேல் பலன் தருவதற்கு, துர்க்காதேவி மூலதெய்வமாக விளங்குகிறாள். துர்க்கை என்று பெயர் வந்ததற்குக் காரணம், தன்னை நம்பியவர்களை துக்கங்களிலிருந்து காப்பாற்றுகின்றாள் என்று மகாபாரதம் சொல்கிறது. கிருஷ்ணபரமாத்மா அர்ச்சுனனைப் பார்த்துச் சொன்னார். "ஏ அர்ச்சுனா! துர்க்காதேவியை ஸ்தோத்திரம் செய். அவளின் கருணையால்தான் எதிரிகளை நீ போரில் வென்று வெற்றிபெற முடியும்" என்றார். அதன்படி அர்ச்சுனனும் தேவியை ஸ்தோத்திரம் செய்து அன்னையின் திருவருளால் பாரதப்போரில் வெற்றி பெற்றான் என்று சரித்திரம் சொல்கிறது.

"துர்க்கா, துர்க்கா, பெரியநாயகி தாயே" என மனம் கனிய நெகிழ்ந்து, உணர்ந்து வாய்நிறைய பொருள் உணர்ந்து அம்பாளைப் பாடியுருகி நின்றால் பலன் நிச்சயம் கிடைக்கும். இயல்பிலேயே நல்லவை அல்லாதவை கூட நல்லவையாகும். நல்ல அவை நல்லதையே செய்யும்.

*நல்லதையே நினைப்போம்*
*நல்லதையே பேசுவோம்*
*நல்லதையே செய்வோம்*
*நல்லவையே நடக்கும்*
*நல்ல சொல் வாழவைக்கும்*
*நல்ல செயல் வாழ்த்த வைக்கும்*

என்பது சத்தியவாக்காகும்.

நாம் வங்கியில் பணம் போட்டு வைக்கிறோம். அப்படி வங்கியில் பணம் போடுகிறவர்கள் நல்லவர்களா, கெட்டவர்களா என்பதைப் பற்றி வங்கிக் காரர்களுக்கு அக்கறை இல்லை. பணம் நம் கணக்கில் உள்ளவரை, கேட்டபோதெல்லாம் கொடுத்துக் கொண்டிருப்பார்கள். கணக்கில் நம் பணம் (Balance) இல்லாதபோது நாம் கொடுக்கும் காசோலையை (Cheque)-ஐ திருப்பி அனுப்பி விடுவார்கள். பணம் தரமாட்டார்கள்

அதே போலத்தான் சிலர் கெட்டவர்களாக இருந்தாலும், பூர்வ ஜென்மத்தில் அவர்கள் சேர்த்து வைத்த புண்ணியம் செலவழிந்து போகும்வரை, இறைவன் அந்த புண்ணியத்துக்குத் தகுந்தபடி, பொன்னையும் பொருளையும், நலத்தையும் வளத்தையும் வழங்குகிறார்.

நாம் வங்கியில் கடன் வாங்கியிருந்தால் கடன் முழுவதையும் தீர்க்கும்வரை நம்மை விடமாட்டார்கள். நடவடிக்கை எடுத்துக் கொண்டே இருப்பார்கள். அதே போல்தான் முற் பிறவியில் செய்த பாவம் தீரும்வரையில் இந்தப்பிறவியில் நாம் நல்லவர்களாக இருந்தாலும், இறைவன் பல துன்பங் களையும் நாமாகவே உண்டாக்கிக்கொண்டு துயரத்தையும், கஷ்டங்களையும் அனுபவிக்குமாறு செய்கிறார்.

நம்முடைய நல்வினை, தீவினைக் கேற்ப நம் வாழ்க்கையும் [illegible] அமைகிறது. சந்தோஷமாகச் செல்வச் செழிப்புடனும் மன அமைதியுடனும் இருக்கிறோம். இல்லையேல் [illegible]

கஷ்டங்களையும் அனுபவித்து மன அமைதியின்றித் தவிக்கிறோம். நம் முற்பிறவியின் பயனாய் துன்பம் அனுபவிக்கும் நமக்கு விமோசனமே கிடையாதா என்றால் உண்டு என்று உறுதியாகச் சொல்வேன்..

ஒரு குறிப்பிட்ட குற்றம் செய்ததற்காக ஒருவன் நீதிமன்றத்தில் தண்டனை பெறுகிறான். அவன், தான் செய்த குற்றத்திற்காக, மனம் திருந்தி, மெய்வருந்தி மன்றாடிக் கேட்டுக்கொண்டால், சில சமயம் நீதிபதியே தண்டனையைச் சிறிது குறைக்கக்கூடும். சில நேரங்களில் சிறைக்குப் போன பிறகும் மனம் திருந்தி நன்னடத்தை யுடன் நடந்துகொண்டால் சிறைத் தண்டனையைக் குறைக்கவும் வழி உள்ளது. நாம் ஏற்படுத்திய சட்டத்திலேயே இப்படியென்றால் பரமகருணையாளனாகிய இறைவனின் சட்டத்தில், நீதியில் இடமிருக்காதா என்ன? சற்று சிந்தித்துப் பாருங்கள்.

நல்வினை, தீவினைக்கேற்ப, இன்ப துன்பத்தை அனுபவித்தேதான் தீர வேண்டுமென்று, இறை நியதி என்றிருக்கும் போது அதெப்படி நாம் முறையிடுவதனால் மாறிவிடும் என்று நீங்கள் கேட்கலாம். கேள்வி சரியானதுதான். துன்பங்களே வராமற் போகாது, வரத்தான் செய்யும். ஆனால் நாம் ஸ்ரீ பெரியநாயகி அம்மனை அந்த ஆத்தாளை மனம் உருகி வேண்டி முறையிடுவதாலும், வணங்குவதாலும், கஷ்டங்களும் துன்பங்களும் தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போனது போல அதிக சிரமமோ, துயரமோ இல்லாது அனுபவித்துத் தாண்டி விடுவோம்.

ஸ்ரீ பெரியநாயகி அம்மன் திருவருளால் அவள் அருளாசியால் வாய்ப்புகள் உங்களைத் தேடிவந்தால் நீங்கள் அதிர்ஷ்டசாலி. வாய்ப்புகளை நீங்கள் தேடிச்சென்றால் நீங்கள் புத்திசாலி. வாய்ப்புகள் வந்தபோது அதைப்பயன் படுத்தத் தவறினால் நீங்கள் ஏமாளி. வாய்ப்புகளே இல்லையென்று புலம்பினால் நீங்கள் கோமாளி.

ஆகவே நீங்கள் புத்திசாலியாக மாறுங்கள். உங்களைச் சுற்றிலும் உள்ள வாய்ப்புகளைக் கண்டுபிடியுங்கள். உங்கள் திறமைகளைப் பயன்படுத்திச் சாதனை புரியுங்கள். நீங்கள் நிச்சயமாக ஸ்ரீ பெரியநாயகி அம்மன் திருவருளால் அதிர்ஷ்டசாலி ஆவீர்கள் - இது கதையல்ல **நிஜம்.**

## திருக்குட நீராட்டுவிழா – சில வரிச்செய்திகள்

- *குடநீராட்டுக்குப் பிறகு 48 நாட்களுக்கு மண்டலாபிஷேகம் தொடர்ந்து செய்யப்படும். 12 ராசிகள் 27 நட்சத்திரங்கள் 9 நவக்கிரகங்கள் ஆக 48 துணைசக்திகளையும் திருக்கோயிலுக்கு துணை புரியுமாறு பூஜிப்பதே மண்டலாபிஷேகத் தத்துவமாகும்.*
- *சக்தி கூட்டப்பெற்ற மூலவரோடு அருள் பேராற்றல், 12 ஆண்டுகளே பொருந்தி இருக்கும். பிறகு மீண்டும் அதற்கு உயிர் ஊட்டவேண்டும்.*
- *12 ஆண்டுகளுக்குப்பின் மீண்டும் கும்பாபிஷேகம் செய்யாவிட்டால் மூர்த்தியிலுள்ள சக்தி தலவிருட்சத்தில் சென்று 12 ஆண்டுகள் தங்கி இருக்கும். அடுத்த 12 வருடத்திற்குள் கும்பாபிஷேகம் நடைபெறாது போனால் இறை சக்தி வானில் சென்று கலந்து விடும்.*

# முயன்றால் முடியும்

சுப. பழநிவேலு M.A., M.E.d., M.Phil.,

மனித வாழ்க்கை மிகப்புனித மானது..... ஆம் - ஒரு மனிதன் எவ்வளவு காலம் வாழ்ந்தான் எனக் கணக்கிடு வதைவிட, அவன் எப்படி வாழ்ந்தான் என்பதே முக்கியமாகும். அம்மனிதனுடைய வாழ்க்கை பிறர்க்கு ஒரு பாடமாக அமையுமாயின், அது வாழ்வியல் பொக்கிஷமாகக் கருதப்படும்.

வாழ்க்கை என்பது பல அனுபவங்கள் நிறைந்த ஒரு தளமாகும். அது வெறும் சம்பங்களை மட்டும் சார்ந்திருக்க முடியாது. அவ்வப்போது நாம் இருந்துவரும் நிலைமையையும் சூழ்நிலை களையும் சார்ந்தே இருக்கும். அச்சூழலில், ஒவ்வொருவரும் தனிமனிதன் அல்ல. ஒவ்வொருக்குள்ளும் அப்பா, பிள்ளை, கணவன், மனைவி, நண்பன், தொண்டன் எனப் பல கூறுகள் உள்ளன. இக்கூறுகள் பலநிலைகளில் ஒரு பொது நோக்கிற்காக சேர்ந்து செயல்படுகின்றன. இப்பொது நோக்குதான் ஒரு குடும்பத்தின்..... ஏன்? ஓர் இனத்தின் ஒற்றுமையையும் உறுதிப் பாட்டையும் நிலை நிறுத்துகிறது. ஒருவரைப் பற்றி மற்றெருவர் ஏற்கனவே கொண்டுள்ள விருப்பு, வெறுப்புகள் அவர்களது செயலில் குறுக்கிடும்போது ஒற்றுமை குலைக்கப்படுகிறது.

ஒவ்வொருவருக்கும் ஒரு தனித் தன்மை உண்டு. ஒருவரை மற்றவருடன் ஒப்பிடமுடியாது. ஒருவரை மற்றவருடன் ஒப்பிடும்போது, அன்றாட வாழ்க்கை சீர்கெட்டுவிடுகிறது. ஒருவரது வெற்றி தோல்வியை மற்றவரது வெற்றி தோல்வியுடன் இணைத்து ஒப்பீடு செய்யக்கூடாது.

நம் நமுதாயத்தில் முன்னோர் பலர் செயற்கரிய பல காரியங்களைச் செய்து நமக்கு வழிகாட்டிகளாக வாழ்ந்து காட்டி உள்ளனர். அவர்களில் வேலங்குடியைச் சேர்ந்த அமரர் திரு. சி. ஆ.பெரி. வெள்ளைச்சாமி அம்பலம் மற்றும் அவரது இளவல் அமரர் திரு.சி.ஆ.பெரி.காசி விசுவநாதன் அம்பலம் ஆகியோரைக் குறிப்பிட்டுச் சொல்லலாம். அவர்களின் தீர்க்க தரிசனத்தால், பாலையநாட்டுக்கு நிரந்தர வருவாய் கிடைக்கும் வண்ணம் பல அறப்பணிகளை நிறுவியுள்ளனர். பள்ளத்தூரிலுள்ள பாலைய நாட்டார் கட்டிடங்கள், இராமேசுவரத்திலுள்ள பாலையநாட்டார் விடுதி, குன்றக்குடியில் பாலையநாட்டார் மடம், பாலையநாட்டார் அறப்பணிகள் டிரஸ்ட் ஆகியவை அவர்களது பெருமுயற்சியால் நிறுவப் பட்டவையே. அவர்களது தனிமனிதப்பண்பு, நிதி நிர்வாகம், மதி நுட்பம், ஆளுமைத் திறம் ஆகியவை அனைவராலும் மதித்துப் போற்றுவதற்குரியவை.

ஒவ்வொரு மனிதனுடைய வாழ்க்கை யும் தனிமனித வாழ்க்கை, குடும்ப வாழ்க்கை, தொழில் சார்ந்த வாழ்க்கை மற்றும் சமூக வாழ்க்கை எனப் பல கூறுகளை உள் அடக்கியதாகும்.

தனிமனித வாழ்க்கை என்பது அடிப்படை ஆசைகள் (Fundamental Desires) அவ்வப்போது எழும் ஆசைகள் (Topical Desires) என்பவற்றின் மூலம் அமைவது.

ஒருவனுக்கு வீடு, நிலம், உணவு போன்ற அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்வது அடிப்படை ஆசை. மாறிவரும் சூழல்களுக்கு ஏற்ப, பயன்படும் பொருள்களின் தேவையை நிறைவு செய்வது மற்றொன்று. தனிமனித வாழ்க்கைச் சூழலும் மரபு வழித் தன்மையும் ஒருவனது ஆளுமை உருவாக்கத்துக்கும், வாழ்க்கை மேம் பாட்டுக்கும் இன்றியமையாத தளங்களாக அமைகின்றன.

ஒருவனது குடும்ப வாழ்க்கையில், மற்றவர்மீது அவன் கொண்டுள்ள எண்ணம்தான் அன்பாக பிரதிபலிக்கிறது. இதே அன்பை நாசமாக்குவதும் இன்னொரு எண்ணம் தான். குறிப்பாக, ஒருமனைவி தன் கணவர் இப்படித்தான் இருக்கவேண்டும். என்று தானாகவே கற்பனை செய்து கொண்டு, அவரை சில எதிர்பார்ப்புடன் பார்ப்பதால்தான் பல பிரச்சினைகள் தலைதூக்குகின்றன. குடும்ப வாழ்வில் சில நிகழ்வுகளை நேசிப்பது, இல்லையேல் வெறுப்பது என்ற எழுதாத விதிமுறைகள் தான் நம்மை கட்டுப்படுத்துகின்றன. எந்த நிகழ்வையும் சரியா அல்லது தவறா என சீர்தூக்கி முடிவெடுத்தால் குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும், அன்பு பெருகும்.

ஒருவனுக்கு வெற்றி என்பது, தான் விரும்பியதை அடைவது, திருப்தி என்பது தனக்குக் கிடைத்ததைக் கொண்டு மனநிறைவு அடைவதாகும். வெற்றியும் திருப்தியும் சமச்சீரான நிலையில் இருந்தால் இயல்பான வாழ்க்கை (Pragmatic life) அமையும்.

ஒரு வித்து தன்னை நிரந்தரமாக அழித்து, செடியாகி காய்த்து பலருக்கு பயன்படுகிறது. அதுபோல குடும்பத்தில் ஒவ்வொரு நபரும் தன்னை ஒரு வித்தாகக் கருதி, தன் மாற்றத்தால் பிறர்க்கு நன்மைபயக்கும் செயல்களை முனைப்புடன் செய்ய முன்வரவேண்டும். அந்நிலையில் அக்குடும்பம் மகிழ்ச்சி நிறைந்த ஒரு பல்கலைக்கழகமாகத் திகழும்.

செருப்பு சிறிதாக இருந்தால் அது நம் காலைக் கடிக்கும், பெரிதாக இருந்தால் நம்மை இடறிவிடும் என்ற ஓர் அறிஞன் கூற்று எல்லா சமுதாயத்தினருக்கும் பொருந்தும். ஒரு சமுதாயத்தில் சிலர் தம்முடைய வெற்றியை விட, பிறருடைய தோல்வியையே அதிகம் விரும்புகிறார்கள். சமுதாய அமைப்பில் மிக உயர்ந்த நிலையில் உள்ளவர்கள் கருத்துக்களை விவாதிப்பார்கள். சாதாரணமானவர்கள் சந்தர்ப்பங்களை விவாதிப்பார்கள். கீழ்த்தரமானவர்கள் நபர்களை விவாதிப் பார்கள் என அறிஞர்கள் கூறுவர். அவர்களில் ஒருவன் உலகத்தை எப்படிப் பார்க்கிறானோ, அப்படியே உலகமும் அவனைத்திரும்பப் பார்க்கும் என ஓர் அனுபவ வாக்கும் உண்டு. இன்றைய சமுதாய நிலையில் உள்ள பிரச்சனையைத் தீர்க்கும் முயற்சியில் ஒவ்வொருவரும் தன்னை ஈடுபடுத்தி கொள்ளவேண்டுமே மொழியே, தன்னையே ஒரு பிரச்சினையாக உருவாக்கிக்கொண்டு ஏற்கனவே இருக்கும் பிரச்சினைகளின் அளவை அதிகப்படுத்தக் கூடாது என்பதுதான் நாம் வேண்டும் பிராத்தனை. இப்பிரார்த்தனையின் பயனாக, தேவைப் படும்போது நீங்கள் நியாயத்தைப் பேசுங்கள். அப்படிப்பேசும்போது சிலர் வருத்தப்படக்கூடும். அது உங்களுடைய பிரச்சினை அல்ல, அது அவர்களுடைய பிரச்சினை என மனநிறைவு கொள்ளுங்கள்.

சமுதாய வாழ்க்கையில், ஒவ்வொரு வரும் தம்மால் முடிந்த நற்செயல்களை பொதுநன்மை கருதிச் செய்ய மன உறுதி கொள்ளவேண்டும். அவர்கள் தமக்குக் கிடைக்கும் வாய்ப்பை நழுவவிடாமல் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். அப்போது முடியும் என்ற நம்பிக்கை பிறக்கும். வெற்றி உறுதியாக கிட்டும் என்பதை மாவீரன் நெப்போலியன், 'முடியும் என்பது நம்பிக்கையின் ஆரம்பம் முயற்சிக்கு முன்னுரை. எழுச்சிக்கு வித்து செயலுக்கு ஆதாரம். வெற்றிக்கு ஊன்றுகோல்' என்றும், 'சோம்பேறிகளைத் தவிர வேறு யாரும் முடியாது என்ற சொல்லைப் பயன்படுத்தமாட்டார்கள்' என தீர்க்கமாக வலியுறுத்துவான். இக்கூற்று எல்லாத்துறையினருக்கும் பொருந்தும்.

# சமுதாயச் சீர்நோக்கு

ஆ. நாராயணன் M.A காரைக்குடி.

நமது தமிழ்நாட்டில் எண்ணற்ற சமுதாயங்கள் இயங்கி வருவது எல்லோரும் அறிந்ததே. நமது சமுதாயமாகிய வல்லம்பர் சமுதாயம் குறிப்பிட்ட மாவட்டங்களில் மட்டுமே கணிசமான அளவில் நிலவி வந்தபோதிலும் நமது சமுதாயத்தின் கோட்பாடுகள் செயல் ஆக்கம், பழக்க வழக்கங்கள், நடைமுறைகள் இவற்றினை நம்பகுதியிலுள்ள மற்ற சமுதாயங்களுடன் விருப்பு வெறுப்பின்றி ஒப்புநோக்குவோமெனில் நமது சமுதாயம் உண்மையாகவே, தலை நிமிர்ந்து உன்னதமான உயர்ந்த இடத்தில் உலவி வருவதைக் கண்ணாரக் காண முடிகிறது.

தனித்தன்மை : நமது மாநிலத்தில் உள்ள பெரும்பாலான சமூகத்தினர் தமது வீடுகளில் நடத்தப்பெறும் மங்கலம் மற்றும் அமங்கலமான குடும்ப நிகழ்ச்சிகள் அனைத்திற்கும் ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தைச் சார்ந்தவரே வந்து நடத்திக் கொடுக்கும் பழக்கத்தைக் கடைப்பிடித்து வருகின்றனர். (யாரையும் புண்படுத்தும் நோக்கம் அன்று) ஆனால் அதற்குமாறாக நமது சமூகத்தினர் நல்ல மற்றும் அவல நிகழ்ச்சிகளை நடாத்துதற்கு யாரையும் சார்ந்திருப்பதில்லை. நம் சமூகத்தைச் சேர்ந்த அந்தந்த வேளைகளில் ஆங்காங்கே கலந்து கொள்ளும் மூத்த குடிமக்களின் ஆலோசனை மற்றும் அறிவுரைகளின் படியே அவற்றை மேற்கொள்கின்றனர். இதனைச் சிந்தித்துப்பார்க்கையில் ஒரு நிகழ்ச்சி என் நினைவில் பசுமரத்து ஆணிபோல் நிலைத்து நிற்கிறது. நானும் எனது உளமார்ந்த இனிய நண்பர் வழக்கறிஞர் தெய்வத்திரு சி. மோகன், பி.காம். பி.எல் அவர்களும் எங்களது கல்லூரி நாட்களில் ஒருநாள் காரைக்குடியில் மகர்நோன்புப் பொட்டலில் கவியரசு கண்ணதாசன் தலைமையில் நடந்த ஒரு சொற்பொழிவினைக் கேட்கச் சென்று இருந்தோம். அப்பொழுது கவியரசர் அவர்கள், தான் ஒரு முக்கியமான வலிமையான சமூகத்தைச் சார்ந்தவராயிருப்பினும் தம்சமுதாயச் சடங்குகள் மற்றும் நிகழ்வுகள் வல்லம்பர் சமுதாயத்தில் நடப்பதைப்போல் பிறிதொருவரைச் சார்ந்திராமல் அக்காலத்திலேயே சுதந்திரமாக (Independent) நாம் நடத்தும் இவ்வரிய முறையினைத் தாம் மனமுவந்து பாராட்டுவதாகவும், தனது சமூகத்தினரும் இதனைப் பின்பற்ற ஆலோசனை கூறிப் போந்தார். எது எவ்வாறிருப்பினும் இத்தனித்தன்மை நம் சமுதாய மணிமகுடத்தினை அலங்கரிக்கும் மாணிக்கக்கல்லுக்கு நிகரான மாட்சிமை உடையதாகும்.

தேர்ந்தெடுக்கும் தொழில் :
தொன்றுதொட்டு சமீப காலம் வரை நமது சமுதாயத்தில் பெரும்பாலானோர் வேளாண்மைத் தொழிலையே முக்கியமாகக் கடைப்பிடித்து தங்களது வாழ்க்கையையும் குடும்பத்தையும் நடாத்திவந்தனர். ஆனால் இன்றோ நம் சமூகத்தினரில் அநேக குடும்பத்தினர் கடல்கடந்து பறந்துசென்று பணிபுரிகின்றனர். சிலர் தொழில்களை மேற்கொள்கின்றனர். அதன்பலனாக அவர்கள் தங்களது வருவாயையும் வாழ்க்கை நிலையையும் மேன்மேலும் மேம்படுத்திக்கொள்கின்றனர். முன்னாட்களில் நமது சமூகத்தினர் பாலைய நாடு பதினாறு ஊர்களில் மட்டுமே இருந்து வந்து இயல்பான இல்லறம் நடத்தினர்.

**பெண்டிர் பெருமை :** பழங்காலத்தில் ஏன் - சற்று முந்தைய காலம் வரைக்கும் நமது சமுதாயத்தில் படித்த பெண்களின் கணக்கெடுப்பினை விரல்விட்டு எண்ணி விடலாம். ஆனால் தற்பொழுது காய்தல், உவத்தல் இன்றிக்காணுங்கால் படித்த ஆண்களை விட படித்த பெண்கள் குறிப்பாக உயர்கல்வி பயின்ற பெண்கள் மிஞ்சிய நிலையில் உள்ளனர். அதன் விளைவாக நமது சமுதாயத்தில் அத்தகைய பெண்களின் திருமணத்தின் போது பெற்றோர்கள் பெரும் அவதியுறுகின்றனர். அங்கலாய்க்கின்றனர். அத்தகைய இக்கட்டான சூழ்நிலையிலும் கூட சில பெண்கள் தன் உள்ளக்கிடக்கை யினைச் சரிசெய்து கொண்டு பெற்றோர்கள் தேர்ந்தெடுக்கும் கணவன்மார்களுக்கு ஒப்புதல் அளித்து பெரிய மனதுடன் ஏற்றுக்கொள்கின்றனர். இத்தருணத்தில் பாரதிதாசனாரின் "கல்வியை உடைய பெண்கள் திருந்திய கழனி. அங்கே நல்லறிவுடைய மக்கள் விளைவது நவிலவோ நான்?" என்ற கவிதை வரிகள் என் மனக்கண்முன் ஊஞ்சலாடுகிறது. மேலும் போதுமான கல்வியறிவு உடைய பெண்கள் தன் கணவனை இழந்த நிலையிலும்கூட - ஒருக்கால் குடும்பத்தினர் சரியான முறையில் பராமரிக்காது விட்டபோதிலும் பணியில் அமர்ந்து குடும்பத்தினை குந்தகம் விளைவிக்காத முறையில் நடாத்திச் சென்றுகரை சேர்த்து விடுகின்றனர்.

**பெண் விடுதலை பற்றி :** மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோம் என மாண்புற பெண்ணின் பெருமையைப்பாராட்டி மகுடம் சூட்டினார் ஒரு தமிழ்க்கவிஞர். இக்காலத்தில் கூட பெண்களில் சிலர் கணவன் இறந்த போழுது செய்யும் ஒவ்வாச்சடங்கு முறைகளையும் சம்பிரதாயங்களையும் தகர்த்தெறிந்து தங்களது தனித்தன்மையும் தளர்விலாத் துணிச்சலையும் தக்க வைத்துக் கொள்கின்றனர். ஆனால் அதே வேளையில் முற்றிலும் பொருந்தாத் திருமணங்களைப் போராடியும் நிறுத்திக் கொள்கின்றனர். பெண்களின் இத்தகைய பண்புகள் என்றென்றும் பாராட்டுதற்குரியன. பாரதிதாசரின் "எங்கெங்குங்காணினும் சக்தியடா" என்ற போற்றுதற்குரிய அடிகள் பளிச்சென நாம் பார்வையில் நிற்கிறது.

**பொருளாதாரப்போக்கு :** நம் சமூகத்தினர் திருமணச் சடங்குகளையும் சம்பிரதாயங் களையும் நீண்ட நேரம் நடத்தி காலத்தை வீணாக்காது அதனைப் பொன்போல் போற்றி வருகின்றனர். அதே போல் அவரவர்கள் தகுதிக்கேற்ப விரலுக்குத் தகுந்த வீக்கம் என்பதற்கிணங்க தங்களது நிலைக்கு ஒப்பான முறையில் திருமணச் செலவுகளையும் பின்னர் மணமுறை களையும் செய்து முடித்துக் கொள்கின்றனர். இதனை நோக்குங்கால் கேரளா மாநிலத்தில் உள்ள குருவாயூரப்பன் கோவிலில் ஒரே மேடையில் தொடர்ந்து நடக்கும் திருமணமுறை என் அகக்கண் முன்னால் மிளிர்கிறது. எந்நிலையில் உள்ள குடும்பத்தினராயினும் அக்கோவிலில் எவ்வித வேறுபாடின்றி குறுகிய காலப்பொழுதில் ஒரே முறையில் திருமண நிகழ்ச்சிகளை நடத்தி இறைவன் இல்லத்தில் அனைவரும் சமம் என்னும் பொன்னான கருத்தினைப் பேணிவருகின்றனர். இச்செயலைச் சீர்தூக்கிநோக்குங்கால் நமது சமுகம் பாராட்டும் புகழும் பெறுதற்கு உரியதாகும்.

**விதவைகள் மறுமணம் :** பகுத்தறிவுப் பகலவன் தந்தை பெரியார் அவர்கள் நமது சமுதாயத்தில் பன்னெடுங்காலமாகப்பின் பற்றி வரும் விதவைகள் மறுமணத்தினை வானளாவ வாழ்த்தியுள்ளார். பாவேந்தர்

பாரதிதாசனாரும் தனது பாக்களில் "வாடாத பூப்போன்ற மங்கை நல்லாள் மணவாளன் இறந்தால் பின் மணத்தல் தீதோ" என அக் கருத்திற்கு கட்டியம் கூறுகிறார். இவ்வொழுங்கு முறைக்கு ஒப்புதல் அளிக்காது மறுக்கின்ற ஏன் குறை கூறுகின்ற பல சமுதாயங்களில் மிக இளம் வயதிலேயே கணவனை இழந்து உற்றார் உறவினர்களின் ஆதரவு இழந்த நிலையில் பிறந்த குழந்தைகளுடன் நல்வாழ்க்கை வாழ இயலாது நலிந்தநிலையில் விதவைகள் அளப்பரிய அல்லல் உறுகின்றனர். அவர்களில் சிலர் காலச்சூழ்நிலை மற்றும் சுற்றுச் சூழ்நிலை போன்ற பல காரணங் களால் திசைமாறிய பறவைகளாக மாறும் கசப்பான காட்சிகளையும் நாம் கண் கூடாகக் காண்கிறோம். இவ்வகையில் நமது சமுதாயம் வீரமான வெற்றிநடை போடுகிறது.

*சமுதாயச் சீர்திருத்தம்* : சமுதாயச் சீர்திருத்தம் என்பது இயற்கையிலேயே ஒரு காரசாரமான செய்தி - ஏன் இன்னும் சொல்லப்போனால் ஒரு கசப்பான மருந்தும் கூட. நடைமுறையில் உள்ள பழக்கவழக்கங் களையோ, அல்லது சம்பிரதாயங்களையோ மாற்றம் செய்யும் முயற்சிகளுக்கு பெரும்பாலானோர் குறிப்பாக வயது நிரம்பிய மூத்த குடிமக்கள் மனம் இடங்கொடுக்க மலைக்கின்றனர். அன்றி தயக்கமும் காட்டுவர். இதனை அன்றே உணர்ந்த புதுமைப்பித்தன் வாணிதாசன் போன்ற பலபுரட்சி எழுத்தாளர்கள் பொதுவான முறையில் சமுதாயத்தில் போற்றுதற்கும் மற்றும் மாற்றுதற்கும் உரிய ஒழுகலாறுகளை வெள்ளிடைமலையென விளக்கிக்காட்டினார்கள். உறுதியாக இவ்வேட்கை ஒரு மலர்ப்படுக்கையன்று. ஆனால் அதே வேளையில் அதனை முள் படுக்கையாகவும் நாம் எண்ணவேண்டாம். நடைமுறையில் சமுதாயச்சீர்திருத்தங்களை நிறைவேற்றுங்காலை பல வினாக்களை எதிர்நோக்க வாய்ப்புண்டு. சான்றாக ஆண்மகவற்ற பெற்றோர்கள் தம் இறுதிக்கடனை பெண்மகவு மூலம் செய்ய இசைவு அளிப்பதொன்றாகும். இந்நற் பணிக்கு நமது 'ஏ' பத்திரிக்கை (இதழ்) விடாமுயற்சியுடன் கத்திமுனையைக் காட்டிலும் பேனா முனை கூர்மையானது என்ற பழமொழியின் கருத்துக்கு பறைசாற்றலாக அமைந்து தொடர்ந்து செவ்வனே செயலாற்றி வரும் அரிய பண்பினை வாயார உளமார ஒவ்வொருவரும் பாராட்டுவதுடன் நமது வல்லம்பர் சமுதாயம் பல நிலைகளில் பலதுறைகளில் உறுதியாக முன்னேறுகிறது, முன்னேறிக் கொண்டே யிருக்கிறது என்பது உள்ளங்கை நெல்லிக் கனியாகும். மேலும் நம் சமுதாயம் முனைப்புடனும் முழு மூச்சுடனும் முன்னேறி அதன் முகட்டினை எட்டி விடவேண்டும் என்பதே - எனது ஏன் நம் எல்லோருடைய முதன்மையான அவா எனக்கூறி அதனைச் சிந்தாமல் சிதறாமல் நிறைவேற்றுதற்கு பாட்டுத்திறத்தாலே இவ்வையத்தினைப் பாலித்திடவேண்டும் என பாரதியார் பராசக்தியைப் பரவியது போல், வல்லம்ப சமுதாயத்தினருக்கு வளங்குன்றாத வாழ்வளித்துவரும் எல்லாம் வல்ல பெரிய நாயகி அம்மன் தமது திருவருளைத் திண்ணமாக பொழிந்தே தீருவார் என அனைவர் சார்பாகவும் இவ்வேளையில் இறைஞ்சி எனது சிறிய இக்கட்டுரைக்கு முற்றுப்புள்ளி வைக்கின்றேன்.

---

* *ஆண்டவன் வழிபாடு எதையும் செய்ய முடியாதவர்கள் 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை செய்யப்படும் கும்பாபிஷேகத்தில் கலந்து கொண்டு கை கூப்பித்தொழுதால் அவனது பேரருள் நிச்சயம் வாய்க்கும்.*

# சமுதாய முன்னேற்றம்

ராம. சின்னச்சாமி, பள்ளத்தூர்.

அதிகாலை நேரம். கந்தவிநாயகர் கோவிலுக்குக் கிழக்கே கருவி ஆண்டவர் கோவில் செல்லும் சாலை. அதன் ஓரத்தில் நிற்கும் புளிய மரத்தடியில் ஒரு சுமை தாங்கிக்கல். அதன் அருகே ஒரு பட்டியல் கல். ஊர்ப்பெரியவர் ஒருவரால் அந்த ஊர்க்கோடியில் ஊன்றப்பட்ட சுமைதாங்கிக் கல். கிழக்குச் சீமையிலிருந்து வெள்ளிக் கிழமை சந்தைக்கு அரிசி காய்கறிகளை விற்றுப்போக தலைச்சுமையாக வருபவர்களுக்கு, உதவியாக இருந்தது. அப்படி வருபவர்கள் தங்கள் தலைச்சுமையை கல்லின் மேல் இறக்கி வைத்து, பட்டியக் கல்லில் உட்கார்ந்து, சற்று களைப்பாற்றிக் கொண்டு புறப்பட்டு செல்வார்கள்.

அந்தப்பட்டியக்கல்லில் உட்கார்ந்து கொண்டு ஊர் பிரமுகர்கள் இருவர், புளியங் குச்சியால் பல் தேய்த்துகொண்டே ஏதோ சுவாரஸ்யமாகப் பேசிக்கொண்டிருக்கிறார்கள். நமக்கும் ஓர் ஆர்வம். என்னதான் பேசு கிறார்கள், கேட்டுத்தெரிந்து கொள்வோமே?

*************

***ராமையா*** :- ஞாபகம் இருக்கா சோமையா, நாம படிக்கிற காலத்திலே, லீவு நாளிலே, இங்கே வந்து உட்கார்ந்து படிப்போமே?

***சோமையா***:- நல்லா ஞாபகம் இருக்கு. நீங்க பட்டியக்கல்லில் உட்கார்ந்து படிப்பீங்க. நான் சுமைதாங்கிக்கல் மேல் ஏறிப்படிப்பேன். ஒன்னு தெரியுமா ராமையா, இந்தச் சுமைதாங்கிக்கல் ஒரு போதனை தர்றதா நான் நினைக்கிறேன்.

***ராமையா*** :- அதென்னப்பா போதனை?

***சோமையா***:- தலைச்சுமையோடு வருபவர்கள். சுமையைக் கல் மேல் இறக்கி வைத்து களைப்பாறிச்செல்ல இந்தக்கல் உதவுகிறது. அதுபோல, பிறர் தங்கள் கஷ்டங்களை சுமை போல் ஒருவரிடம் இறக்கி வைக்கும்போது மனதுக்கு ஆறுதலாக இருக்கு அதனாலே ஒவ்வொருத்தரும் முடிந்தவரை சுமைதாங்கி போல் செயல்படவேண்டும் என்பதை நினைவூட்டு -வதாக நான் நினைக்கிறேன்.

***ராமையா*** :- இப்படியும் சொல்லலாம் இல்லியா? தன் சுமையை, தானே கல்லின்மேல் இறக்கிவைத்து, களைப்பாறிய பின், தன் தலையைக் கல்லில் முட்டுக்கொடுத்து, சுமையை தன் தலையில் தாங்கி பிறர் உதவியின்றி நடைபோட்டுச் செல்வார்கள். அது ஒரு மனிதன், தன் கையே தனக்கு உதவி என்பதைப் புரிந்து கொள்ளவும், தன் சொந்தக்காலில் நிற்கத் தெரியவேண்டும், என்பதை உணரவும் சுமை தாங்கிக் கல் சொல்வதாகக் கொள்ளலாமே?

***சோமையா*** :- அருமையாய்ச் சொன்னீங்க! ஒருவன் வாழ்க்கையில் முன்னேற வேண்டுமானால் பல விஷயங்கள் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. போகட்டும், நீங்க சென்னையிலிருந்து எப்ப வந்தீங்க?

***ராமையா***:- அதை ஏன் கேக்கிறீங்க? புறப்படுற வரைக்கும் வேலை. கடைசியா, ஒருவழியா பல்லவன் எக்ஸ்பிரஸை புடிச்சு, இங்கு வீடு வந்துசேர ராத்திரி ஒருமணி ஆயிடுச்சு. இன்றைக்கு ஏழாம் மண்டகப்படி எங்களது ஆச்சே? அம்பத்தூர் வாசிகள் எல்லோரும் வந்திருக்கோம். ஆமா, கோயம்புத்தூரில் இருந்து நீங்க எப்ப வந்தீங்க? தொழில்துறை எல்லாம் எப்படி இருக்கு?

***சோமையா*** :- நேற்று ஆறாம் மண்டகப்படி நாங்க நடத்தினோம். அதுக்காக காலையில் வந்துட்டோம். அம்பாள் அருளாலே தொழில் ரொம்ப நல்லா நடக்குது.

***ராமையா*** - திருவிழா முடிகிற வரைக்கும் இங்குதானே?

***சோமையா***:- இல்லை. சப்தாரணம் முடிந்ததும் புறப்படுறோம். நாளை மறுநாள் சென்னைக்குச் சென்று அன்றிரவே ஸ்டேட்ஸ் புறப்படுறோம்.

***ராமையா***:- ஏதாவது விசேஷமா?

***சோமையா***:- என் பையன் டெட்ராயிட் நகரில் ஆட்டோ மொபைல் எஞ்சினீயராய் வேலை பார்க்கிறான். அவன் மொபைல்லே அடிக்கடி கூப்பிட்டு வரச்சொல்லித்

தொந்தரவு செய்றான். அதான் போய், அவனை பார்த்துட்டு வரலாம்னு போறோம்.

**ராமையா:-** ரெம்ப சந்தோஷம். நானும் என் சம்சாரமும் அடுத்த மாதம் ஸ்டேட்ஸ் போகிறோம். என் மகளுக்கு டெலிவரி டயம். அதுக்கு உதவியா இருக்கும்னு வரச் சொல்லியிருக்காங்க.

**சோமையா:-** நாம போய் ஹெல்ப் பண்ணலைனா எப்படி? அவசியம் போயிட்டு வாங்க. ஆமா, அவங்க எங்கே இருக்காங்க? சொல்லவே இல்லையே?

**ராமையா:-** அமெரிக்காவைக்கண்டு பிடிச்சது யாரு?

**சோமையா:-** கொலம்பஸ்

**ராமையா:-** அங்குதான் சாப்ட்வேர் கம்பெனி ஒன்றில் என் மாப்பிள்ளை வேலை பார்க்கிறார்.

**சோமையா:-** பார்த்தியா, ராமையா நாம பள்ளியிலே படிக்கிறபோது காலை நேரத்திலே ஒரு விமானம் சிலோன் நோக்கி பறந்து போகும். அதை அண்ணாந்து பார்த்து ரசிப்போம்.அப்ப வீட்லே என்ன சொல்வாக? "தம்பி, பிளேன் போயாச்சு.மணி ஒன்பதாச்சு. ஸ்கூலுக்கு புறப்படு நேரமாச்சு" என்பார்கள். ஆனா இன்னைக்கி நாமே பிளேன் ஏறி பறக்கப்போறோம் என்று நினைக்கும்போது எவ்வளவு மகிழ்ச்சியா இருக்கு?

**ராமையா :-** இது ஒரு காலக்கட்டம். நம் சமுதாயத்தில் கல்வியால் ஏற்பட்ட மாற்றம்- அதன் வாயிலாக ஒரு முன்னேற்றம். நாம் பெருமைப்படவேண்டிய விஷயம்.

**சோமையா:-** ஆனால், இன்று போல் அன்றில்லையே. எஸ்.எஸ்.எல்.சி படித்து முடித்துவிட்டால் அதுவே பெரிய படிப்பு என்று பலர் இருந்துவிட்டார்கள். சிலர் கிடைத்த வேலைகளுக்கு வெளியூர் சென்றார்கள். பலர் விவசாயம், தோட்டம் என்று ஒரு வரைமுறை வகுத்துக்கொண்டு வாழ்ந்து வந்தார்கள். அதனால்தான் எழுபது ஆண்டுகளுக்கு முன்னால் விரல் விட்டு எண்ணக்கூடிய அளவில் நம் சமுதாயத்தில் பட்டதாரிகள் இருந்தார்கள். அதில் முதல் பட்டதாரி என்ற பெருமை பெற்றவர் அமரர் திரு. எஸ்.பி.ஆர் அவர்களே. ஊருக்கருகில் கல்லூரி ஒன்றும் இல்லாததால் சிதம்பரம் சென்று அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் படித்து பி.ஏ.ஹானர்ஸ் பட்டம் பெற்றார். அவரை அடுத்து திரு. பி. சுப்பையா அம்பலம் (முன்னாள் எம்.பி.) பட்டம் பெற்றார். பச்சையப்பன் கல்லூரி முன்னாள் பேராசிரியர் வடிவேலு அவர்கள் அன்றைக்கு பம்பாய் சென்று வணிகவியலில் பட்டம் பெற்றார். 1950-ம் ஆண்டுக்குப் பின்னர்தான் நம் பட்டதாரிகள் எண்ணிக்கை கணிசமான முன்னேற்றம் கண்டது.

**ராமையா:-** ஆனா இன்னைக்கு வீட்டுக்குவீடு ஆணும், பெண்ணும் போட்டி போட்டுக் கொண்டு படிக்கிற நிலை ஏற்பட்டிருக்கு. இஞ்சினீயரிங் பட்டதாரிகள் நிறையப்பேர் இருக்காங்க. மருத்துவப் படிப்புக்குத்தான் போதிய ஆட்கள் இல்லை. அதற்குக்காரணம் மருத்துவக்கல்லூரிகள் ஏற்படுத்தும் பொருளாதார நெருக்கடியாக இருக்கலாம்.

**சோமையா:-** எப்படியோ இன்று நம் சமுதாயக் குழந்தைகள் கல்லூரிகளில் படித்து,கலை, இலக்கியம், விஞ்ஞானம், விவசாயம், தொழில் நுட்பம், மருத்துவம், விளையாட்டு ஆகிய துறைகளில் பட்டம் பெற்று பெருமை சேர்த்து வருகிறார்கள். இது மகிழ்ச்சிக்குரியதுதானே?

**ராமையா:-** நிச்சயமா! ஒரு காலத்தில் சென்னையைத் தாண்டியிராத நமது சமுதாய இளைஞர்கள், இன்று படித்து முடித்து, கடல் கடந்து, அமெரிக்கா, கனடா, லண்டன், ஜெர்மனி, மலேஷியா, சிங்கப்பூர், ஆஸ்திரேலியா, ஹாங்காங், அரபு நாடுகள். மொரிஷியஸ் என்று எல்லா நாடுகளிலும் வியாபித்திருக்கிறார்கள். இது கல்வியால் ஏற்பட்ட முன்னேற்றம்தானே?

**சோமையா :-** இல்லையா பின்னே? இது எல்லோராலும் ஒப்புக்கொள்ள வேண்டிய உண்மையான உண்மை. ஆனாலும் ஒரே ஒரு வருத்தம் எனக்கு. இன்றும் சில இளைஞர்கள் ஊரிலேயே இருந்து கொண்டு, வெளியுலகத்தைப் பார்க்க மறுக்கிறார்களே?

**ராமையா :-** அதுவா? ஊரை விட்டு வெளியூர் போய்விட்டால் மஞ்சுவிரட்டு, மாட்டு வண்டிப்பந்தயம், திருவிழா காலங்களில் கரகாட்டம், கூத்து, இவற்றில் எல்லாம் கலந்து கொள்ள முடியாதே என்ற

நினைப்பு காரணமாக இருக்கலாம். அந்த மோகத்தைக் குறைக்க நாம் முயற்சி செய்யவேண்டும்.

சோமையா:- நல்ல வேளையாப் போச்சு! நம் சமுதாயத்தின் சார்பில் வெளிவரும் ஏ பத்திரிகையில்தான் பேராசிரியர் டாக்டர். அய்க்கண் அவர்கள், தேவையற்ற நிகழ்ச்சிகளின் பயனற்ற தன்மைபற்றி மாய்ந்து மாய்ந்து எழுதித்தள்ளிக் கிட்டிருக்காரே? ஆன்லாலும் இன்னும் சில ஊர்களில் அந்த மோகம் தொடர்ந்து இருந்துதான் வருகிறது. அவர்கள் மனம் ஒரு நாள் நிச்சயம் மாறும் என்ற நம்பிக்கையில் இருப்போம்.

ராமையா :- பாவலர் மணி திரு. ஆ. பழநி அவர்கள் சொன்ன கருத்து ஒன்று இப்ப என் நினைவுக்கு வருது. நாற்றங்காலில் விதைத்திட்ட நெல் பயிராகிப் பலன் தருவதைவிட, அதையே பறித்துக் கொண்டுபோய் நடுவயலில் நட்டுவைத்தால் அதன் விளைச்சலே அலாதிதான். அதுபோல நம் சமுதாயத்தினர் ஊரைவிட்டு வெளியூர் சென்று வேலை பார்த்தோ, தொழில் புரிந்தோ வந்தார்களானால் அங்கு காண்கின்ற செழுமை முழுமையாக இருக்கும். இதனைப் புரிந்து கொண்டுதான் அமரர் எஸ்.பி.ஆர். அவர்கள் செயலாற்றினாரோ, என்னவோ? அந்தந்த ஊரில், படித்துப் பாதி, படிக்காமல் பாதி என்றிருந்த இளைய சமுதாயத்தினரை அழைத்து சிபாரிசு கடிதங்கள் கொடுத்து, அம்பத்தூர் சைக்கிள் பாக்டரி, ஆவடி டைமன் செயின் என்று கம்பெனிகளுக்கு அனுப்பியதன் விளைவு மற்றுமொரு தலைமுறை உருவாகி, இன்று அங்கு ஒரு சின்ன பாலைய நாடே உருவாகியுள்ளது. மேலும் 1984 ம் ஆண்டு அவர் குத்து விளக்கேற்றி ஆரம்பித்து வைத்த வல்லம்பர் பேரவை, ஆல் போல் தழைத்து, அருகு போல் வேருன்றி நிற்கிறது.

சோமையா:- போன வருஷம் பேரவையினர் 20ம் ஆண்டு விழாவை சிறப்பாக நிகழ்ச்சிகள் நடத்திக் கொண்டாடினார்களாமே, நீங்க போயிருந்தீங்களா?

ராமையா :- நான் போகாமலா? நிகழ்ச்சிகள் நடந்த மண்டபம் ஒரு பாலைய விலாஸாக காட்சியளித்தது. ஒவ்வொரு குடும்பத்தாரும் தங்கள் வீட்டு நிகழ்ச்சியாக அதில் கலந்துகொண்டு ரெம்ப மகிழ்ச்சியாக இருந்தார்கள். அதைவிட இரட்டிப்பு மகிழ்ச்சி -அவர்களது குழந்தைகள் மேடையில் தோன்றி சிறிதும் சபைக் கூச்சம் இல்லாமல், பேசி, நடித்து, ஆடி, பாடி, கலை நிகழ்ச்சியைக் கண்கொள்ளாக்காட்சியாக நமக்குத் தந்தார்கள். அதற்காக அவர்களை மட்டுமல்ல, அவர்களது பெற்றோர்களையும் பாராட்டியே தீரவேண்டும். காரணம், அவர்கள் கொடுத்த பயிற்சியும், ஊக்கமும்தான்.

சோமையா :- போன மாசம் கும்பாபிஷேக நிதி வசூல் கமிட்டியார் கோவை வந்து, நமது சமுதாய அன்பர்களை எல்லாம் சந்தித்து, நிதி திரட்டி மனநிறைவோடு திரும்பிச் சென்றார்கள். நானும் அவர்களுடன் கூடச் சென்றிருந்தேன். எல்லோரும் முகம் சுளிக்காது கொடுத்தார்கள்.

ராமையா:- இல்லையா பின்னே? அது அம்பாள் காரியமாச்சே? மேலும் அவள் பாலைய நாட்டுக் குலதெய்வம். கோவை வருவதற்கு முன்னாடியே சென்னைக்கு வந்து போனார்கள். அங்கும் அனைவரும் போட்டி போட்டுக் கொண்டு வாரி வழங்கினார்கள். அதைப் பார்த்து அசந்துபோன வசூல் கமிட்டித்தலைவர். என்னிடம் வந்து "தம்பி! நம்ம நாட்டார் பெருமக்கள் தந்த உபசரிப்பு விருந்தோம்பல், அதைவிட மனமுவந்து தந்த நன்கொடை எல்லாம் எங்களை திக்குமுக்காடச் செய்துவிட்டது. அதற்காக நன்றி" என்று கூறி தலைக்குமேல் இரு கரங்கூப்பி, "எல்லோரும் வாழ்க வளமுடன்" என வாழ்த்திச் சென்றாரே, அது என்றும் மனதைவிட்டு அகலாத ஒன்று.

சோமையா :- ஆக, நம் சமுதாய மக்கள் 'ஆளைப்பார்த்தார் அள்ளிக்கொடுத்தார்' என்ற புது மொழியை உருவாக்கியிருக் கிறார்கள், இல்லையா?

ராமையா :- ஆமாம்! சிறுதொழில் புரிவோர் பெருந்தொழிலதிபர் என்ற பேதமில்லாது, ஒருவரை ஒருவர் அனுசரித்து பெருந் தன்மையுடன் பழகி, பரந்த மனப்பான்மை யோடு நம்மவர்கள் ஒற்றுமையாக வாழ்ந்து வருகிறார்கள் என்றால் அது நமது சமுதாயத்தின் மாபெரும் வளர்ச்சிதானே?

**சோமையா:-** எல்லாம் சரி, ராமையா! சில நேரங்களில் நாம் தூங்கி விடுகிறோம். விழிப்புணர்வு கொள்ள மறந்து போகிறோம். செயற்கரிய செய்தவர்களைப் பாராட்டத் தவறிவிடுகிறோம்.

***ராமையா:-*** எதைவைச்சு அப்படிச் சொல்றீக?

**சோமையா :-** சொல்றேன் கேளுங்க... அவர் சமுதாயத்தின் விடிவெள்ளி. எழுத்துலகுக்கும் அவர் விடிவெள்ளிதான். ஐம்பது ஆண்டு களாக ஆயிரத்துக்கும் மேற்பட்ட கதை களும் குறுநாவல், பெரிய நாவல் எல்லாம் எழுதி பலமொழிக்கதைத் தேர்வில், தனது கதைக்கு, இந்திய அரசு பாராட்டித் தந்த முதற்பரிசு பெற்றவர். அவர் கதைகள் எல்லாம் பள்ளிகளில், கல்லூரிகளில் பாடப்புத்தகங்களில் இடம் பெற்று இருக்கின்றன. மற்றவர்கள் எல்லாம் அவரை அழைத்து, நற்கதை நம்பி என்றும் எழுத்துவேந்தர் என்றும் பட்டம் வழங்கி கௌரவித்துள்ளார்கள். ஆனால் அவருக்கு நம் சமுதாயம் இதுவரை ஒன்றும் செய்ய வில்லையே? உலகப்புத்தக நாள் விழாவன்று அவரது 50ஆவது படைப்பாக ***'விடிவெள்ளி'*** என்ற நாவல் கம்பன் மணி மண்டபத்தில் வெளியிடப்பட்டது. அது முழுக்க முழுக்க நம் சமுதாயத்தினரைப் பற்றிய கதை. அங்கு வந்திருந்த அறிஞர்கள் பலர் அவரைப் பாராட்டிப் பேசினார்கள். ஆனால், நாம் எப்பொழுது அவரைப் பாராட்டப் போகிறோமோ?

***ராமையா:-*** வாஸ்தவம்தான்... இந்நேரம் அவர் வேறு இனத்தவராக இருந்திருந்தால் ராஜா அண்ணாமலை மன்றம், என்ன ராஜேஸ்வரி மண்டபம் என்ன, என்று...நிறைய பாராட்டு விழாக்கள் நடந்து முடிந்திருக்கும்... காலம் கனியும் என்று நம்புவோம்.

**சோமையா:-** பாராட்டு என்றதும் ஒரு நிகழ்ச்சி ஞாபகத்துக்கு வருது. 1989 செப்டம்பர் 6ம் தேதி என்று நினைக்கிறேன். அன்று, நம்ம சமுதாயத்திற்குச் சேவை செய்வதே ஆனந்தம் என்ற கொள்கை உடைய இனிய தொண்டர் எஸ்.பி.ஆர் அவர்களுக்கு பாராட்டு விழா நடத்த ஏற்பாடு செய்து பாலைய நாட்டு நாட்டார் பெருமக்கள் மட்டுமல்லாது, ஏனை யோரையும் ஜாதி, மத, பேதமின்றி அழைத்து மத்திய அமைச்சர், பெருந்தொழிலதிபர்களையெல்லாம் வரவழைத்து வாழ்த்துக்கள் வழங்கச் செய்தவர்களில் முக்கியமானவர் பேராசிரியர் டாக்டர். அய்க்கண் அவர்கள். அதைப் பொறுக்காத சிலர் புறக்கணிப்பு செய்ததாகச் சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறேன். இத்தகைய மனப்பான்மை வளர்ந்து விட்டால் சமுதாயம் ஒரு களைக் காடாகிவிடும். அதைக் களை எடுக்க வேண்டியது சமுதாய மக்களின் கடமையாகும். செயற்கரிய செயல் புரிந்தவர்களை எல்லோரும் ஒருமனதாகப் பாராட்ட முன்வர வேண்டும்.

***ராமையா:-*** சரி, காலை விழாவுக்கு சாமி தூக்கப்போகணும். நேரமாச்சு, வாங்க போகலாம்.

*******

என்ன அன்பர்களே! அவர்கள் பேச்சில் லயித்துவிட்டீர்களா? நான் சொல்வதையும் சற்று கேளுங்கள்... நம் சமுதாயம் இன்று ஓரளவுக்கு முன்னேறி வந்திருக்கிறது. ஆம் என்று சொல்வதோடு நின்றுவிடாதீர்கள். நம் சமுதாயத்தில் நாம் இதுவரை பெற்றுள்ளது. ஒரு அமைச்சர், ஒரு பாராளுமன்ற உறுப்பினர், மூன்று சட்டமன்ற உறுப்பினர்கள், ஒரு நீதிபதி, ஒரு ஐ.ஜி., இரண்டு மாவட்ட வனத்துறை அதிகாரிகள் - இப்படி ஓரிரு விரல்களை மடக்கிக்கொண்டு எத்தனை நாள் இருக்கப் போகிறோம்? எல்லாத் துறைகளிலும் நம்மவர்கள் மிளிர வேண்டும். அதற்கான ஒத்துழைப்பு நல்கி உதவிக்கரம் நீட்டுங்கள். உங்கள் சிந்தனைகளைச் செயலாக்க முன் வாருங்கள். சமுதாய அமைப்பில் ஏற்றம் காண முனைப்போடு பாடுபடுங்கள். குறைகளைத் தவிர்த்து நிறைகளை ஏற்றுக்கொள்ளுங்கள். என்றும் அழியா சரித்திரப்புகழ் பெறுங்கள்.

தனி மனிதன் ஒருவனால் சமுதாயத்தை மேன்மையடைச் செய்ய இயலும். காரணம் அவனது நல்ல செயல், பலன் எதிர்பாராத தொண்டு, வழிநடத்தி செல்லும் பக்குவம், அக்கறையோடு அனுசரிக்கும் குணம் - அப்படி உருவாகும் சமுதாயம் நிச்சயம் பெரும் முன்னேற்றம் காணும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

*"வாழ்க, சமுதாயம் வாழ்கவே - வாழ்க*
*வாழ்க, வல்லம்பர் சமுதாயம் வாழ்கவே"*

# நாம்

பேராசிரியர் டாக்டர் அய்க்கண்

உலகில் வேறெந்த மொழியிலும் இல்லாத சிறப்பாகத் தமிழில் 'பொருள்' இலக்கணம் கண்டவர்கள் தமிழர்கள். பொருள் இலக்கணத்தை, அகம், புறம் என்று இரு வகையாகப் பிரித்து, மனித வாழ்வுக்கு இலக்கணம் வகுத்துள்ளனர். ஒரு மனிதனின் மனப்போக்கும் சிந்தனைகளும் செயல் முறைகளும் பண்புகளும், அவன் வாழ்கின்ற நிலத்தின் தன்மையையும் காலத்தின் தன்மையையும் அடிப்படையாகக் கொண்டு இருக்கின்றன என்று இன்றைய உளவியல் வல்லுநர்கள் (Psychologists) கருதுகிறார்கள். இந்தக் கொள்கையை அன்றே உணர்ந்த நம் முன்னோர், மனித வாழ்வின் பண்புகளைக் கூறும்போது, நிலத்தையும் காலத்தையும் முதற் பொருளாக அமைத்து அடிப்படை யாகக் கொண்டார்கள்.

### பாலை நாடு

நிலத்தைக் குறிஞ்சி, முல்லை, பாலை மருதம், நெய்தல் என ஐந்து வகையாகப் பிரித்து அதற்கேற்ப மனித வாழ்க்கையின் ஐந்திணை ஒழுக்கங்களை அமைத்து உள்ளார்கள்.

மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி என்றும், காடும் காடு சார்ந்த இடமும் முல்லை என்றும், வயலும் வயல் சார்ந்த இடமும் மருதம் என்றும், கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல் என்றும் வழங்கப்பட்டன.

ஆனால் பாலை நிலத்திற்கென்று தனி இடம் கூறப்படவில்லை. பாலை நிலம் என்றால் ஆப்ரிக்கச் சகாராப் பாலைவனம், ராஜஸ்தான் தார்ப்பாலைவனம் போன்ற வெறும் மணல் பகுதி என்று நினைக்கக்கூடாது அப்படிப்பட்ட கொடிய மணல் வெளி, தமிழகத்தில் இல்லை.

முல்லை நிலமும் குறிஞ்சி நிலமும், தத்தம் வளத்தில் குறைந்து வறண்ட நிலமாக இருப்பதே பாலை என்று கூறப்பட்டது.

"முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து நல்லியல்பு இழந்து நடுங்குதுயர் உறுத்துப் பாலை என்பதோர் படிவங் கொள்ளும்." (சிலப்பதிகாரம்-காடுகாண் காதை-64-66) என்னும் பாடல், பாலை நிலத்தின் தன்மையைக் கூறுகின்றது.

வல்லம்பர் வாழும் நிலப்பகுதி, முல்லைக்குரிய செழிப்பும் குறிஞ்சிக்குரிய வளமும் குன்றி. ஆற்றுப்பாசனமோ, கடல் பகுதியோ இல்லாத வறண்ட நிலமாக இருப்பதால், இது பாலைநாடு என்று வழங்கப் பெற்றது. காலப் போக்கில் இது பாலையநாடு எனப் பெயர் மருவியுள்ளது.

### வீரப்பண்பு

பாலை நிலத்தின் தெய்வம் கொற்றவை என்றும் இங்கு வாழ்வோர் வீரப்பண்பினர் என்றும் இந்நிலத்தின் தொழில் போர் புரிதல் என்றும் பொருள் இலக்கணம் கூறுகின்றது.

கொற்றவையின் கூறுகளான அம்மன் வழிபாடும், சிறு தெய்வ வழிபாடும், தெய்வங்களுக்கு உயிர்ப்பலியிடுதலும், வீரச்செயல்களும், பாலைநாட்டில் மிகுதியாக நிறைந்திருக்கக் காண்கிறோம்.

பாலைய நாட்டு வீரர்கள், அரசர்களின் படைகளிலே போர் வீரர்களாய்ப் பணியாற்றினார்கள். அதிலும் சிறப்பான வில் வீரர்களாகத் திகழ்ந்தார்கள். அம்பு எய்வதில் வல்லவர்களாகப் புகழ்பெற்றிருந்ததால், இந்நாட்டினர் வல்லம்பர் என்று பெயர் பெற்றிருந்தார்கள்.

அக்காலத்தில் அரசர்களுக்கு இருந்த நாற்படைகள் இரத, கஜ, துரக, பதாதிகள் என்று அழைக்கப்பட்டன. இந்நாற்படையில்,

தேர்ப்படையே சிறந்த படையாக முதலிடம் பெற்றிருந்தது. அரசர்களும் சிறந்த வீரர்களும் தேரில் ஏறிச்சென்று போர் புரிவதே வழக்கம். வீரன் அர்ச்சுனனுக்குத் தேர் ஓட்டும் சாரதியாகக் கண்ணபிரானே விளங்கினான் அன்றோ? தேர் ஏறிச் சென்று போர்புரியும் வீரர்களுக்கு வில்திறமையே முக்கியம். வில் எய்யும் திறமை பெற்றவர்களே, முதலிடம் பெற்றுத் தேர்ப்படையில் இடம் பெற இயலும்.

### வில்லும் அம்பும்

புராணங்களிலும் இதிகாசங்களிலும் சிறந்த வீரர்களாகப் போற்றப்படுபவர்கள் வில் வீரர்களே. இராமன், இராவணன், அர்ச்சுனன், கர்ணன் போன்ற வீரர்கள், அம்பெய்யும் திறமை மிகுந்தவர்களே,

சங்ககாலத்தில், வில்திறமையில் சிறந்த ஓரி என்னும் மன்னவனைப் பற்றிப் புற நானூற்றுப் பாடல் குறிப்பிடுகிறது.

*வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி*
*பேழ்வாய் உழுவையைப் பெரும்பிறிதுஉறீஇப்*
*புழற்றலைப் புகர்க்கலை யுருட்டி யுரற்றலைக்*
*கேழற் பன்றி வீழ வயல*
*தாழற் புற்றத் துடும்பிற் செற்றும்*
*வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன்*
*புகழ்சால் சிறப்பின் அம்புமிகத் திளைக்கும்*
*கொலைவன் யார்கொலோ கொலைவன்...*

(புறநானூறு -152-(1-8)-பரணர்)

(இதன் பொருள் - யானையைக் கொன்று வீழ்த்திய அம்பு, பெரிய வாயை உடைய புலியை இறக்கச்செய்து, கொம்பினை யுடைய புள்ளிமானையும் உருட்டி. காட்டுப் பன்றியையும் வீழச்செய்து பக்கத்தில் புதரிலிருந்த உடும்பில் பாய்ந்து நிற்கும் வில் திறமையுடையவன்.) ஓரிக்கு அமைந்த சிறப்புப் பெயர்போல வேல் எறிதலில் வல்ல சாத்தன் என்ற மன்னனுக்கு வல்வேல் சாத்தன் என்னும் பெயர் (புறநானூறு-242ம்பாடல்) அமைந்துள்ளது குறிப்பிடத் தக்கது.

இத்தகைய வில் திறமை பெற்றிருந்தவர்கள் பாலைய நாட்டு வீரர்கள். மன்னன் ஓரி, வல்வில் ஓரி என்று வழங்கப்பட்டதுபோல், அம்பு எய்வதில் வல்லவராக விளங்கிய பாலைய வீரர்கள், வல்அம்பர் என்ற சிறப்புப் பெயர் பெற்றிருந்தார்கள்.

இன்றும் பாலைய நாட்டில் விஜயதசமி அன்று அம்மன் முதலிய தெய்வங்கள் உலா வந்து திறந்த வெளியில் அம்பு போடும் திருவிழா நடைபெறுகின்ற காட்சியைக் காணலாம்.

### வேளாண்மைத் தொழில்

காலப்போக்கில், மன்னர்களின் ஆட்சியும், குறுநிலத் தலைவர்களின் அதிகாரங்களும் மறைந்து, வில், அம்பு, வாள் வைத்து நடைபெறும் போர்களும் இல்லாதொழிந்த பின்பு, வல்லம்பர்கள் தம் உணவுக்காக, உழுது பயிரிடும் தொழிலில் ஈடுபட்டார்கள்.

*'காடு கொன்று நாடு ஆக்கிக்*
*குளம் தொட்டு வளம் பெருக்கி'*

(பட்டினப்பாலை (283-284)

வேளாண்மைத் தொழிலிலும் தம் வலிமையைப் பயன்படுத்திச் சிறந்த பயன்பெற்றனர்.

'கள்ளர் மறவர் கனத்த அகம்படியர்
மெள்ள மெள்ள வெள்ளாளர் ஆனார்.'

என்று செவிவழிப் பாடலாக வழங்கி வரும் ஒரு நாடோடிப் பாடல், இந்தத் தொழில் மாற்றத்தைக் குறிக்கிறது.

வீரத்தொழில் புரிந்தவர்கள், பிற்காலத்தில் வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டனர் என்பதைத்தான் இப்பாடல் தெரிவிக்கிறது. வீர சமுதாயத்தினர், வேளாளச் சமுதாயத்தார் ஆனார் என்பது இப்பாடலின் பொருள் இல்லை. அத்தகைய சமுதாய மாற்றங்கள் எக்காலத்திலும் நடைபெறுவதற்கு வாய்ப்பு இல்லை.

வல்லம்பர் வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டாலும், தம் இனப் பண்பான வீரத்தை இழந்துவிடவில்லை. ஊர்தோறும் மஞ்சு விரட்டுக்களில், வலிமை வாய்ந்த முரட்டுக் காளைகளைப் போராடி அடக்குகின்ற வீரச்செயல்களும், சிலம்பம், மற்போர், வேட்டை முதலிய வீர விளையாட்டுக்களும், இச் சமுதாயத் திடையே இன்றும் தொடர்ந்து நிலவுகின்றன. பிள்ளையார்கூடத்தின் முன் கிடக்கும் இளவட்டக் கல்லைத் தூக்கி எறியும் இளமை விளையாட்டுக்கள் இன்றும் இச்சமுதாய இளைஞரிடையே காணப்படுகின்றன.

### நகரத்தார்க்குத் துணை

சாத்துக்கள் எனப்படும் வணிகர் கூட்டங்களாகப் புகார் நகரிலிருந்து இங்கு குடியேறியதாகக் கூறப்படும் நகரத்தார் களுக்கு, வல்லம்பர் பெருந்துணையாகவும் ஆதரவாகவும் விளங்கினர். வழிப்பறிக் கொள்ளையரிடமிருந்து, தம் வணிகப் பொருள்களையும், செல்வத்தையும் காப்பாற்றுவதற்கு. நகரத்தார்கள் வலிமை மிகுந்த வல்லம்பர் சமுதாயத்தோடு இணங்கி வாழ்ந்தனர். ஒவ்வொரு நகரத்தார் குடும்பத்திற்கும் துணையாக ஒரு வல்லம்பர் குடும்பம் விளங்கிவந்த வரலாற்று உண்மையை, இப்போதும் பாலைய நாட்டில் காணலாம்.

### சரித்திரக் குறிப்பில் 'அவமான வம்சம்'

வரலாற்றுக் காலத்திற்கு முன்பு இருந்தே, இம்மண்ணின் மைந்தர்களாக வாழும் வல்லம்பர் சமுதாயம் பற்றி, அண்மைக் காலத்தில் பல தவறான யூகங்கள், வரலாற்றுப் போர்வை போர்த்திக் கொண்டு பேய்த்தேர்களாக உலவுகின்றன. **Castes and Tribes of Southern India** என்னும் நூலை எழுதிய் திரு. **Edgar Thurston** என்ற பொருட்காட்சிசாலைக் கண்காணிப்பாளரும், அவருக்குத் துணையாயிருந்த திரு. ரங்காச்சாரி என்பவரும், வல்லம்பர் என்னும் சமுதாயத்தினர் ஒரு வேளாளருக்கும் ஒரு வலையப் பெண்ணுக்கும் பிறந்தவர்களே என்று விஷமத்தனமான பொய்யை எழுதி உள்ளார்கள்.

சமுதாய வரலாற்றில் எத்தனையோ நூற்றாண்டுகள் கடந்த பிறகு-வேளாளர் என்றும் வலையர் என்றும் இரு சமுதாயங்கள் ஏற்பட்டு வளர்ந்து நிலைத்துவிட்ட பிறகு- அச்சமுதாயத்தில் ஒருவனும், இச் சமுதாயத்தில் ஒருத்தியும் கலந்தால், அது தனிப்பட்ட ஒரு குடும்பமாகத்தான் இருக்குமே ஒழிய ஒரு புதிய சமுதாயத்தினர் உருவாக முடியுமா? வெவ்வேறு சமுதாய மரபுகளை உடைத்துத் தோன்றும் காதல், ஏதேனும் ஒரு சமுதாயத்தில் சங்கமமாகித் தவிக்குமே ஒழிய, தனியே ஒரு புதிய சமுதாயமாக உருவாவது என்பது இயலாது. சமுதாய வரலாற்றுக் கூறுகளை ஆராய்ந்து பார்ப்போருக்கு இ.வ்வுண்மை தெளிவாகும்.

வரலாற்றின் இந்த அடிப்படைக் கூற்றினைக் கூடப் புரிந்துகொள்ளாத யாரோ ஒருவர், வேண்டுமென்றோ அல்லது அறியாமையாலோ, சொன்ன தவறான செய்தியைச் சரியாக ஆராயாமல், தனது வரலாற்றுக் (?) குறிப்பில் எழுதியுள்ளது, வேதனைக்குரியது.

மேலும் தமது குறிப்பு, ஆராய்ச்சி யாலோ, அல்லது சான்றுகளாலோ நிரூபிக்கப்படாதது என்பதை ஒப்புக் கொள்ளும் வகையில் 'They are said to be..'. 'சொல்லப்படுகிறார்கள்... கூறப்படுகிறது...' என்று சொல்லி, பொறுப்பிலிருந்த நழுவும் பாங்கு, இக்குறிப்பில் காணப்படுகிறது.

வரலாற்றுக் காலத்தையோ, சமுதாயத்தின் பண்புகளையோ ஆராயாமல், செவிவழிக் கற்பனைக் கதைகளையும் அடிப்படையாக வைத்து, அந்தக்குறிப்புக்

களை எழுதிவைத்துள்ள ஆசிரியர்களின் பொறுப்பற்ற எழுத்துக்கள், கண்டனத்திற்கு உரியன.

**பூர்வீக 'வல்லம்'**

வல்லம்பர் என்பவர்கள், தஞ்சைக்கு அருகிலுள்ள வல்லம் என்னும் பகுதியில் இருந்து, பஞ்சம் காரணமாகப் பாலைய நாட்டில் குடியேறியவர்கள் என்ற ஒரு கருத்தும் நிலவுகிறது.

வல்லம் என்ற நாட்டிலிருந்து வந்திருந்தால் அவர்கள் வல்ல நாட்டார் அல்லது வல்லத்தார் என்று அழைக்கப்படும் வாய்ப்பு இருக்கிறதே ஒழிய வல்லம்பர் என்று **பர்** விகுதி இணைந்துவருவதற்கு, இலக்கண வழக்கோ, பேச்சுவழக்கோ, சிறிதும் கிடையாது.

*வசையில் புகழ் வயங்கு வெண்மீன்*
*திசைதிரிந்து தெற்கு ஏகினும்,*
*தற்பாடிய தளியுணவிற்*
*புள்தேம்பப் புயல்மாறி*
*வான்பொய்ப்பினும் தான்பொய்யா*
*மலைத்தலைய கடற்காவிரி*
*புனல் பரந்து பொன்கொழிக்கும்*
*விளைவறா வியன் கழனி*

(கடியலூர் உருத்திரங்கண்ணனார்)

நிறைந்து தமிழகத்தின் நெற்களஞ்சியம் எனப் பெயர்பெற்ற தஞ்சைப் பகுதியிலேயே பஞ்சம் என்றால் வேறொரு வளமான நாட்டுக்கு மக்கள் போவார்களே தவிர, வானம் பார்த்த பூமியாகிய பாலைய நாட்டுப்பகுதிக்கா வருவார்கள்? அதிலும், வேளாண்மைத் தொழிலையே உடைய வல்லம் வேளாளர், வேளாண்மைக்குத் தகுதியற்ற வறண்ட பகுதிக்கு வந்தார்கள் என்பது சிறிதும் பொருத்தமில்லை.

**ஊன் உணவும் உயிர்ப்பலியும்**

வல்லத்துப் பகுதியில் இருக்கும் வேளாளர்கள், மற்ற வேளாளர்களைப் போல, சைவ சமயத்தினராகவும் சைவ உணவு உண்பவராகவும் விளங்குகிறார்கள். ஆனால் பாலைய நாட்டு வல்லம்பர்களோ, அம்மன், அய்யனார், கருப்பன் முதலிய சிறுதெய்வ வழிபாடுகளில் ஈடுபட்டவர்கள். தம் தெய்வங்களுக்கு ஆடு, கோழி முதலிய உயிர்களைப் பலி இட்டு விழாக் கொண்டாடு பவர்கள். வல்லம்பர்களில் அனைவருமே இறைச்சி உணவு உண்டவர்கள்.

காலப்போக்கில், சிறுதெய்வ வழிபாட்டினர், இறைவனின் ஏகத்தன்மை உணர்ந்து, முதற்தெய்வ வழிபாட்டுக்கு மாறுவதும், அசைவ உணவு உண்டவர்கள், கொல்லாமையின் சிறப்பை உணர்ந்து ஜீவகாருண்ய மேலிட்டுச் சைவ உணவுக்கு மாறுவதுமே, தனிமனிதப் பண்பாட்டு வளர்ச்சி, இந்த வளர்ச்சிக்கு மாறாக, வல்லத்திலிருந்து வந்த 'வேளாளர்,' இங்கு சிறுதெய்வ வழிபாட்டினராகவும் ஊன் உண்ணுபவராகவும் மாறினர் என்பது சமுதாய வரலாற்றுக்குப் பொருந்தாத செய்தியாகும்.

**நுண்கலைத் திறமைகள்**

பொதுவாக வேளாளர் சமுதாயம், இசை, நாடகம், நடனம், ஓவியம், சிற்பம், இலக்கியம் முதலிய நுண்கலைகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டு, அக்கலைகளில் சிறப்பிடம் பெற்றிருக்கின்றது. அந்த நுண்கலைகளில் வல்லவர்கள் பலரை, அச்சமுதாயத்தில் காணலாம்.

வல்லத்திலிருந்து வந்த வேளாளர் தான் வல்லம்பர்கள் என்பது உண்மை யானால், வல்லம்பர் சமுதாயத்திலும் இத்தகைய நுண்கலைகளில் வல்லவர்கள் பலர் இருந்திருக்கவேண்டும். இருக்க வேண்டும். ஆனால், வல்லம்பர் சமுதாயத்தில் போர்க்குணமும் வீரச்சிறப்புமே மிகுதியாக உள்ளது. நுண்கலைகளில் புகழ்பெற்ற வல்லவர்களை, விரல்விட்டு எண்ண, ஒரு கையே போதும்! அவர்களும் ஆயிரத்தில்

ஒருவராகவே அருகிக் காணப்படுகிறார்கள். எனவே வல்லம்பர், வேளாள மரபினர் அல்ல என்பது சமுதாய ஆய்வு மூலமும் தெளிவாகும்.

**'வல்லம் தோற்றது...'**

வல்லம்பர் சமுதாயத்தில், முன்பு பத்திரப்பதிவுகளில் வல்லம்பரை, வேளாளர் என்றும் வல்லம் தோற்ற வேளாளர் என்றும் குறிப்பிடப்பட்டிருப்பதை ஆதாரங்களாகக் கொள்வோர் சிலர் உளர். இந்தக் குறிப்புக்களும், முன்பு சொன்னதுபோல, செவிவழிக் கதைகளை அடிப்படையெனக் கொண்டதால் வந்த தவறுகளே.

'ஆரியப்படை கடந்தவன்' 'இமயம் வென்றவன்' 'கங்கை கொண்டான்' 'கடாரம் வென்றான்' என்று தம் வெற்றிச் சிறப்புப் பெயராகச் சொல்வதே வரலாற்று மரபு. ஒரு சமுதாயம், தன் சாதனையாக, வெற்றியாக உள்ளதைக் குறிப்பிட்டுப் பெருமை கொள்ளுமே தவிர, தான் தோற்றுப் போனதைக் குறிப்பிட்டுப் பெருமைப்படும் என்பது சமுதாய உணர்வுக்குப் பொருந்தாத செய்தி.

**இங்கிருந்து அங்கு...**

வல்லம் தோற்ற என்பது ஒருவேளை வல்லம் தோற்றுவித்த என்று இருக்கலாம் எனச் சிலர் கூறுவர். பாலைய நாட்டிலிருந்து சென்ற படைவீரர்கள், தஞ்சைக்கருகில் வல்லம் என்னும் குறுநாட்டைத் தோற்றுவித்திருக்கக்கூடும். வல்லத்தில் பள்ளத்தி அய்யனார்கோயில் ஒன்று இருப்பது இக்கூற்றுக்கு அரண் செய்கிறது.

பாலையநாட்டிலிருந்து சோழ மன்னனுக்குத் துணைப்படையாகச் சென்ற வல்லம்பர் அங்குத்தங்கி, வல்லநாட்டை உருவாக்கியிருக்கலாம். தாங்கள் பலநாட்கள் தங்க நேர்ந்த இடத்தில் தம் ஊர்த் தெய்வமாகிய அய்யனாருக்குக் கோயில் கட்டி வழிபட்டிருக்கலாம்.

முற்காலத்திலும்-இக்காலத்திலும் கூட-மலேசியா, சிங்கப்பூர், தாய்லாந்து, இந்தோனேஷியா, அமெரிக்கா போன்ற நாடுகளுக்குச் சென்று தங்கியிருக்கும் தமிழர்கள் அந்தந்த இடங்களில்,தம் நாட்டுத் தெய்வங்களுக்குக் கோயில் எழுப்பி வழிபாடு செய்வதைக் காண்கின்றோம்.

கி.பி. 642-643-ல் பல்லவமன்னன் இரண்டாம் நரசிம்மவர்மன், புலிகேசியின் வாதாபிக்குச் சென்று முற்றுகையிட்டு வென்று திரும்பும்போது, அங்கிருந்த கணபதி சிலையைக் கொண்டு வந்து தமிழ்நாட்டில் பிரதிஷ்டை செய்து 'வாதாபி கணபதி' என்னும் பெயரிட்டு வழிபாடு செய்த வரலாறு இங்கு ஒப்பு நோக்குதற் குரியது.

வல்லத்திலுள்ள அய்யனார், பள்ளத்தூரிலிருந்து சென்ற தெய்வமாகையால், பள்ளத்தி அய்யனார் என்று அங்கே பெயர் பெற்றுள்ளார். எனவே இங்கிருந்து வல்லம்பர், தஞ்சை வல்லம் சென்று தங்கி, போர்முடிந்ததும் ஊர் திரும்பினார்கள் என்பதே உண்மையாக இருக்கவேண்டும்.

மேற்சொன்ன கருத்துக்களை, அறிஞர் உலகம் மேலும் விரிவாக நுணுகி ஆராய்ந்து, உண்மை காண முயல வேண்டும்.

**வரலாற்றில் நாம்**

வல்லம்பர்கள் வேறுநாட்டிலிருந்து குடியேறியவர்கள் அல்லர் என்பதும், இந்த மண்ணுக்குரிய மைந்தர்களே என்பதும், அவர்களுக்குரிய நாட்டார் என்னும் பெயராலே மேலும் உறுதிப்படுகிறது.

கல்தோன்றி மண்தோன்றாக் காலம் தொட்டே, வில்லோடு முன் முன்தோன்றி முத்தகுடியே வல்லம்பர் என்பது, மேற் சொன்ன செய்திகளால் வலுப் பெறுகிறது.

# கோட்டையூர்

நகரத்தாரின் முதன்மைக் கவிஞர்கோ பாடுவார் முத்தப்ப செட்டியார் அவர்களால் 'அருஞ்செல்வம் வீற்றிருக்கும், நீண்ட புகழ்க் கோட்டையூர்' என புகழப்பெற்றதும், 'பொன்பூத்த மணிசெழிக்கும் தடம்புடைசூழ் கோட்டையூர் புகழ்பெற்று ஓங்க, இம்மண்ணில் பூத்த அனைத்து உலகைப் பாலனம் செய்யக்கூடிய கோட்டைநாச்சி மலர்ப்பாதம் வணங்கி வாழ்வோம்' என வித்வான் சுப்பிரமணிய ஐயரால் பாடப்பெற்றதும், கோட்டையூரின் பெருமையைக் குறிக்கும். பாலைய நாட்டாரின் சிறப்பு ஊராக நாட்டின் நடுவாக அமைந்துள்ள இவ்வூரே முதலில் தாய்க்கிராமமாக கருதப்பட்டது என்பதற்குச் சான்றாக, இன்றும் நாட்டு மரியாதை வரிசையில் முதல் ஊராக அழைக்கப் படுகிறது. மேலும் பாலைய நாட்டில் முதலாகக் **கற்றளி** (கோட்டைநாச்சியம்மன் - கற்பக விநாயகர் கோயில்) கட்டியுள்ள பெருமை இவ்வூர் நாட்டார்க்கு உரியது. நமது பாலையநாட்டு முறைப்படி ஊர்த் தேர் திருவிழாவும் ஆண்டுதோறும் சித்திரை மாதக் கடைசியில் பத்து நாட்கள் மரபு வண்ணத்தோடு கோட்டை நாச்சியம்மன் திருஉலாவாகச் சிறப்புற நடத்தப்படுகிறது. தமிழ்த்தெய்வம் திருமுருகனுக்கு உரிய சிறப்பு விழாவான சஷ்டி நாளில், ஆண்டுதோறும் சிறந்த தமிழறிஞர்களை அழைத்து ஆன்மீக நிகழ்ச்சிகளைத் திருக் கோயிலில் நடத்தும் மரபு, கோட்டையூர் நாட்டார் பெருமக்களின் இலக்கிய ஈடுபாட்டுக்குச் சான்றாகும்.

நாட்டார்களுக்குச் சொந்தமான பாரம் பரிய குலதெய்வ வழிபாடுகளுக்குட்பட்ட கோயில் களும், மேடைகளும் பழங்காலம்தொட்டு சிறப்புற அமைந்துள்ளன என்று சொல்வதிலும் பெருமை கொண்டது கோட்டையூர். எடுத்துக்காட்டாக வயிரவர்கோயில், கொத்தங்கருப்பர், கொன்னக் கருப்பர், சாவக்கருப்பர், சங்கிலிக் கருப்பர், கொல்லங்காளி, பட்டவர், ஊமக்குலவட ஐயனார், கிருஷ்ணன்கோயில், மாரியம்மன், அடைக்கலம் காத்தய்யனார், செக்காலை ஐயனார், பேய்க்காட்டுக் கருப்பர் முருகதண்டான், ஊர்க்காவலன் என தெய்வ சாந்நித்யங்கள் பல அமைந்துள்ளன.

ஆன்மீக வளர்ச்சிக்குப் பாலையநாட்டின் முதல் ஊராகத்திகழும் கோட்டையூர் நாட்டார் பெருமக்களின் உள்ளப் பாங்கினை விவரித்துச் சொல்ல விரியும். எனவே குறிப்பாக பெருமைக் குரிய ஒரு சிலவற்றை கோடிட்டுக் காட்டும்போது நமது நாட்டின் (பாலையநாட்டின்) முதல் 'சிவன்கோயில்' (லிங்க வழிபாடு) என்ற பாரம்பரியத்திற்குரியதாய் நாட்டார்களால் நிர்வகித்து வரப்படும் கல்லாங்குடியின் புகழ்மிக்க திருப்பாதீஸ்வரர் கோயிலாகும். இதுவே நம் பகுதியில் உள்ள பழமையான சிவன்கோயில் களான சாக்கோட்டை, கண்டதேவி கோயில்களுக்கு முன்னோடியாகக் கட்டப்பட்டு நாட்டார்களால் பரிபாலிக்கப்பட்டு வருகிறது. இதன் சமீபத்திய திருக்குடமுழுக்கு விழாவை 2.2.1996ல் சிறப்புற நடத்தியமைக்காக 'வேள்விச் செம்மல் கோட்டையூர் நாட்டார்' என்ற சிறப்பு விருதும் வழங்கப்பட்டது. அதற்கு முன்பாக 1993ம் ஆண்டில் நடத்திய ஆயிரத்தெட்டு கலசாபிஷேக மகாயாகப் பெருவிழா நடத்தியதைப் பாராட்டி 'பல்யாகசாலை கோட்டையூர் நாட்டார்' என்ற பட்டம் பெற்ற பெருமையும் உண்டு. கோயில்களைக்கட்டி, புனர் நிர்மாணம் செய்து திருக்குட நீராட்டு விழா நடத்திய கோட்டையூர் நாட்டார்கள் திருப்பணியைப் பட்டியலிட்டால் (சமீபகாலத்தில்) கல்லாங்குடி திருப்பாதீஸ்வரர் கோயில் - இருமுறை, கோட்டை நாச்சியம்மன் கோயில் - இருமுறை (1984 - 1999), கொல்லங்காளியம்மன் கோயில் அஷ்டபந்தன மஹாகும்பாபிஷேகம் 2002 ஜூன் மாதம் மிகச் சிறப்பாக நடத்தப்பட்டு கோயிலின் முழு புனர்நிர்மாணப் பணியும் செய்யப்பட்டது. அதனையடுத்து ஊமக்குளவட ஐயனார் - கருப்பர் கோயில் கும்பாபிஷேகமும் நடத்தப்பட்டது. இவ்வாறாக ஆன்மீக வளர்ச்சிக்கு கோட்டையூர் நாட்டார்களின் தொண்டுகள் பற்றி வர்ணிக்க ஆரம்பித்தால் முடிவே அடையாது. ஏனென்றால் இங்குள்ள பாரம்பரிய குலதெய்வ வழிபாட்டுக்குள்ள தெய்வங்களின் எண்ணிக்கை பதினெட்டுக்கு மேலாகும். அவற்றை வணங்கும் இந்த ஊர் எட்டுக்கரை வல்லம்பர்களின் உயர்வுக்கும்

வளர்ச்சிக்கும் பக்கபலமாக நின்று அவர்களைக் காத்து நல்வழிகாட்டியருள்வதால் எல்லா ஆலயங்களையும் மேடைகளையும், பள்ளயங் களையும் புனிதமான பக்தியுணர்வோடு வழிபட்டுப் பெருமையடைகிறார்கள்.

ஒரு ஊரின் பெருமையும் அந்த மண்ணைப்பற்றிய சிறப்பும், அவர்களது தார்மீக உணர்வுகளை வெளிப்படுத்தும் ஆன்மீகத் திருக்கோயில் தொண்டுகளுக்குப் பின், இன்றைய சமூக வளர்ச்சிக்கான முக்கிய கூறாகக் கருதப்படும் கல்வி வளர்ச்சி. இதில் கோட்டையூர் நாட்டார்களின் பங்கின் பிரதிபலிப்புத்தான் - கோட்டையூரிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் வளர்ந்துவரும் அழகப்பா பல்கலைக் கழகமும் மற்றுமுள்ள கல்வி ஸ்தாபனங்களும். 'கோடி கொடுத்த கொடைஞன்' இந்த கோட்டையூர் தந்த வள்ளல் அழகப்பர். 1947ஆம் ஆண்டு ஏன் நாமும் ஒரு பல்கலைக் கழகத்தை இந்த மண்ணில் சிதம்பரத்தைப் போல் உருவாக்கக்கூடாது என்று அழகப்ப வள்ளல் எண்ணியதும், அவர் முதலாக அணுகிப் பேசியது கோட்டையூர் நாட்டார்களைத்தான். காடுமேடாக உள்ள சுமார் 300 ஏக்கர் நாட்டார்கள் நிலத்தைச் சமன்செய்து கல்லூரிகள் அமைக்க, கோட்டையூர் நாட்டார்களும் சேர்ந்து கைகொடுத்து உதவ வேண்டும் என்ற உடனேயே, அன்றைக்கு கோட்டையூர் நாட்டார்களின் தீர்க்கதரிசிகள் கலந்தாலோசித்து, ஒப்புதல் அளித்த பின்னர், அதனை முறைப்படி சரிசெய்து, அரசாங்க சட்டதிட்டங்களுக்கு உட்படுத்தி 1948ல் கட்டுமான வேலைகளை ஆரம்பித்து, இன்று உலகம் புகழும் அழகப்பா பல்கலைக் கழகத்திற்கு ஆணிவேராக அழகப்பருடன் நின்று வித்திட்ட பெருமை, கோட்டையூர் நாட்டாரையே சாரும். அதனை அடிப்படையாகக் கொண்டு, இன்று தமிழ் நாட்டிலேயே கல்வி வளர்ச்சி மையமாக கோட்டையூரைச் சார்ந்த பகுதி ஒளிவிடக் கண்கூடாகக் காண்கிறோம். அதுவே இன்று சமுதாய வளர்ச்சிக்கான கால்கோளாக அமைந்தது என்பது வரலாற்று உண்மை.

தனிப்பட்ட முறையில் கோட்டையூர் நாட்டார்களால் உருவாக்கப்பெற்றுள்ள 'வல்லம்பர் ITI நிறுவனம்தான், நமது சமுதாயத்திற்கு ஒரு முன்னோடித் தொழிற் கல்வி நிலையமாக விளங்குகிறது.

ஆன்மீக வளர்ச்சிக்கு அடிப்படையான சமயத்தொண்டு, அறிவு வளர்ச்சிக்கான கல்வித் தொண்டு - இவையெல்லாம் எப்படி ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தின் வளர்ச்சியை மட்டும் காட்டாமல், உடன் வளரும் சமூக நலனுக்கும் பயன்படுவது போல், சமூக நலவளர்ச்சிக்காக இந்த மண் கொடுத்த நாட்டார் பெருமக்களைப் பற்றி நிச்சயமாகச் சொல்லக் கடமைப் பட்டுள்ளோம். கோட்டையூரின் முதல் குடியாக எண்ணப்படும் அருணாசலம் அம்பலம் குடும்பத்தில், கைலாச அம்பலகாரர் குமாரர் அருணாசலம் அம்பலம் அவர்கள், ஊர் அம்பலகாரராக வாழ்ந்த காலம், கோட்டையூரின் பொற்காலம் எனப்படும். சிறந்த சிவபக்தர்; கல்லாங்குடி திருப்பாதீஸ்வரர் ஆலயம், சாக்கோட்டை, கோவிலூர் போன்ற சிவகங்கை ஜமீனுக்கு சொந்தமான சிவ ஆலயங்கள் முதலியவற்றின் தக்காராக விளங்கியவர். கோட்டையூரைச் சுற்றியுள்ள நிலப்பரப்பு தவிர தனியாக செக்காலைக்கோட்டை (ஜெயங்கொண்ட புரம்), கிராமத்தைத் தன்பெயருக்கு பெற்ற பெருமையும் இவரையே சாரும். சிவகங்கை மன்னருக்கு பட்டுச்சாத்தும் உரிமம் பெற்றவர். கோட்டையூரில் நகரத்தாருக்கு அடைக்கலம் கொடுத்து, அவர்கள் கேட்டதுபோல், முதலில் தன்னைச் சுற்றியே அவர்களை இருக்கச்சொல்லி மனை இடம் கொடுத்துள்ளதை இன்றும் கண்கூடாகக் காணலாம். நாட்டார்-நகரத்தார் உறவை வலிமைப்படுத்திய பெருமை இவரையே சாரும். நாட்டுக்கோயிலான பெரியநாயகி அம்மன் கோயில் முதல் தாளாளராக இருந்து, மூன்று நாள் திருவிழாவை பத்து நாள் திருவிழாவாக்கிய பெருமையும் இவரையே சாரும். தெய்வ நெறிச் செல்வராக வாழ்ந்து வழிகாட்டிய ஆன்மீகச் செம்மல் அவர். அதே வம்சாவழியில் வந்த வயி.ராம. அருணாசலம் அம்பலம், கோட்டையூர் பேரூராட்சிமன்றத்தின் தலைவராக, ஏறத்தாழ இருபது ஆண்டுகள் தொடர்ந்து பணியாற்றி 'சேர்மென் அருணாசலம் அம்பலம்' என்ற புகழுடன், தல ஆட்சி வரலாற்றில் சாதனைபடைத்த மக்கள் தலைவராவார்.

பேரூராட்சித் தலைமையென்று குறிப்பிடும் போது, அண்மைக் காலத்தில் - தற்போது உள்ள திருமதி திலகவதி ஆனந்தன் B.E.,-யும் இவருக்கு

முன்பிருந்த திருமதி அருணாதேவி சோலைமலை B.Sc., B.Ed., இருவரும் நமது சமுதாய முதல் மகளிர் தலைவர்கள் ஆவார்கள்.

கோட்டையூரைச்சேர்ந்த திரு. வயி. குளவன் அம்பலம், காரைக்குடி நகர்மன்றத்தின் துணைத் தலைவராக இரண்டுமுறை தேர்ந்தெடுக்கப்பெற்று, பணி யாற்றிய சிறப்பும் குறிப்பிடத்தக்கது. தன்னலமற்ற சமுதாயத் தொண்டாற்றும் அனைத்துலக நிறுவனமான ரோட்டரி இயக்கத்தின் உறுப்பான காரைக்குடி சுழற்குழு (Rotary Club) வின் தலைவராக, திரு KR.S. குமார் அவர்கள் இப்போது தேர்ந்தெடுக்கப்பெற்றுப் பதவி ஏற்றுள்ளார் என்பதும் குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

இவையெல்லாம் இந்த மண்ணுக்குக் கிடைத்த பெருமையாக எண்ணுகிறோம். தேர்ந்தெடுக்கப் பட்ட மக்கள் பிரதிநிதிகள் வரிசையில் கோட்டையூரில் நமது சமுதாயத்தில் முதலிடம் பெறுபவர் மாண்புக்குரிய சட்டமன்ற முன்னாள் உறுப்பினர் திரு. N. சுந்தரம் B.A., Ex.M.L.A. அவர்கள். இளவயதில் பொறுப்பான பிரதிநிதித்துவம் பெற்று சமுதாய வளர்ச்சிக்குத் துணை நின்று, காட்சிக்கு எளியனாய், கடுஞ்சொல் அல்லனாய், பொது நலனைப் பேணிக்காக்கும் பெருமைக்குரியவர்.

இந்த மண்ணின் என்றென்றும் அழியாப்புகழ் செல்வமாக எண்ணப்படுபவர் டாக்டர் - பேராசிரியர் 'அய்க்கண்'. இவர் பெற்றுள்ள அகில இந்திய விருதுகளுக்கே கணக்கில்லை. சிறுகதை என்று சொன்னாலே தமிழ்நாட்டில் முதலிடம் வகிப்பவர் பேராசிரியர்தான். 800க்கு மேற்பட்ட சிறுகதைகள், நாவல்கள், 20க்கு மேற்பட்ட நாடகங்கள் எழுதிப்புகழ் பெற்றவர். மேலும் தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர், தமிழ் இசைச் சங்கத்தின் இசைப் போட்டிக் குழுத் தலைவர். பேராசிரியர் கலந்துகொள்ளாத நமது சமுதாயக் கூட்டங்களே இல்லை எனலாம். இந்தப் பகுதியில் என்ன, தமிழ்நாட்டில் எந்த ஒரு மூலையிலும், ஏதாவது ஒரு தமிழ் இலக்கியம் சம்பந்தமான சொற்பொழிவோ கலந்தாலோசனையோ நடக்குமானால் அதில் பேராசிரியர் நிச்சயமாக இருப்பார். ஏன் - மலேசியா, சிங்கப்பூர், டெல்லி, மும்பாய் என்றாலும் பேராசிரியர் இல்லாமல் இருக்காது. நமது சமுதாயத்தைப் பற்றி வெளியில் உள்ளவர்கள் அறிவதற்குக் கலங்கரை விளக்காக விளங்குபவர் பேராசிரியரே.

மேலும் நமது சமுதாயக்குரலை வெளி உலகிற்குக் கேட்கும்படியாகச் செய்கின்ற பெருமை - நமது சமுதாயத்தின் சார்பாகத் தனி நபராக நின்று ஒரு மாத ஏடாக வெளியிடும் பெருமை பெற்றவர், பேராசிரியர் டாக்டர் அய்க்கண் அவர்களே ஆவார்கள். எவ்வளவோ தனிப்பட்ட வேலை களுக்கு இடையே 'ஏ' இதழ் தடையில்லாமல் வெளிவருகிறது என்றால் அது பேராசிரியர் ஒருவரால்தான் செய்யமுடியும். பேராசிரியரின் சமுதாயப்பற்று- அதன் வளர்ச்சிக்கு பணியாற்றும் தொண்டு உணர்வுகளின் அடிப்படைகளாக அவர் ஏற்றுள்ள பல்வேறு பொறுப்புகள்-எண்ணி முடியாதவை. டாக்டர் பேராசிரியர் அய்க்கண் அவர்களின் நமது சமுதாயத்தொண்டு பற்றி எழுத வேண்டுமென்றால் அதற்காக ஒரு தனிமலரே வெளியிடவேண்டும். இப்படியெல்லாம் ஒரு சிறு குறிப்பாக எழுதி முடிக்க முடியாது. எங்களுடைய முழு ஆசையெல்லாம் பேராசிரியர் போன்ற நாடறிந்த நல்ல தமிழ் அறிஞர் பெருமக்களை இந்த சமுதாயம் உருவாக்கி அதன் மூலம் இந்நாட்டில் நமக்கென்று ஒரு தனி **அடையாளத்தை** நிலைநாட்டும் வாய்ப்பைப் பெறவேண்டும் என்பதுதான். பல்லாண்டு காலம் வாழ்க வளர்க என்று 'டாக்டர் பேராசிரியர் அய்க்கண், அவர்களை இந்த சமுதாயத் தொண்டு செய்ய வாழ்த்துகிறோம். நமது சமுதாயத்தைப் பற்றி நாம் வாழ்கின்ற இந்த சமூகத்தில் அறிந்துகொள்ளக் கூடிய முறையில் பொது நலச்சேவையும் தொண்டும் செய்வதில் இன்று மிகச் சிறப்பாகச் செயல் புரிபவர்கள் என்று பட்டியலை எடுத்தால் - சிவகங்கை மாவட்டக் கால்பந்துக் கழகத் தலைவராக உள்ள திரு. K.S. ஆனந்தன் B.Sc., செயலாளராகப் பணியாற்றும் N. சுப்பையா B.A., அவர்களைத்தான் முதல் வரிசையில் வைக்க வேண்டும். இதில் மிகச்சிறப்பு - இருவரும் கோட்டையூரைச் சேர்ந்தவர்கள் என்பதில் எங்களுக்கு பெருமை.

அரசாங்கப் பணிபுரிந்து பொதுமக்களின் நல்ல தொடர்போடு ஓய்வுபெற்று இந்த

சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் என்று பிறரால் போற்றப்படக் கூடியவர்கள் என்ற வரிசையில், திரு SP. சுந்தரேசன், நெய்வேலி லிக்னைட் கார்ப்பரேஷனில் 35 ஆண்டுகாலம் பொறியாளராகப் பணிபுரிந்து ஓய்வு பெற்றவர். ஜெர்மனி போன்ற வெளிநாடுகளுக்கு உத்தியோக ரீதியாகச் சென்று வந்தவர். கோட்டையூர் நாட்டார் வல்லம்பர். I.T.I - யை உருவாக்கத் துணையாக நின்றவர். திரு. லெ. கருப்பையா B.E., அவர்கள் தமிழக அரசு தொழில் துறையின் சார்பாளராக 1978ல் ஜெர்மனி நாட்டுக்கும் 1999ல் யூகோஸ்லோவேக்கியா நாட்டுக்கும் சென்று பணியாற்றிய பெருமை பெற்றவர். பேராசிரியர் திரு. மு. வயிரவன் M.A.,M.Phil.,B.T., அழகப்பா கல்லூரிப் பேராசிரியராக இருந்து ஓய்வு பெற்றவர்.

இந்த சமுதாயத்தின் முதல் போலீஸ் அதிகாரியாக வெளிமாநிலத்தில் 36 ஆண்டுகள் பணியாற்றி ஓய்வு பெற்றுவந்து இன்று பொதுமக்கள் தொடர்பாளராக விளங்குபவர் திரு.அரு. சுப்புராமன் B.A., OPS(1) Retd. AC. of Police, Orissa, அவர்கள் தற்சமயம் சிவகங்கை மாவட்ட மாஸ்டர்ஸ் அத்லட்டிக் அஸோசியேஷன் தலைவராகப் பொதுத் தொண்டு செய்துவருகிறார்கள். திரு.RM. தெய்வமணி என்ற லெட்சுமணன் B.E. தமிழ்நாட்டின் முதன்மை தொழிலக ஆய்வாளராக இருந்து ஓய்வுபெற்றவர். தற்போது சென்னையில் பொதுத் தொண்டாற்றி வருகிறார். நமது சமுதாயத்தைப்பற்றி இந்த தமிழ்நாடு மட்டுமல்லாமல் நாட்டின் பல பகுதிகளுக்கும் உன்னதமான முறையில் பறைசாற்றக்கூடிய அளவில் இந்த மண் கொடுத்த ஒரு பேராசிரியர் 'அய்க்கண்' ஒரு M.L.A. சுந்தரம் போன்ற பலர் வரிசையில், ஆசிய விளையாட்டுப் போட்டிகளில் முதலில் பங்குபெற்ற நமது சமுதாயத்தவர் என்ற பெருமைக்குரியவர் திரு. அரு. வாசுதேவன் ஆவார்கள். 1972 முதல் 1981 வரை சைக்கிள் ஓட்டும் போட்டிகளில் தேசிய அளவில் வெற்றிபெற்றவர். 1974ம் ஆண்டு டெஹ்ரான் ஆசிய விளையாட்டுப் போட்டியிலும் 1978ம் ஆண்டு பாங்காக் ஆசிய விளையாட்டுப் போட்டியிலும் பங்குபெற்றவர். 3 ஆண்டுகாலம் தமிழ்நாடு சைக்கிள் அசோசியேஷன் செயலாளராகப் பணியாற்றியவர். இப்படி உயர்நிலை அரசாங்க உத்தியோகம் பெற்று ஓய்வு பெற்றவர்கள் எண்ணிக்கையைச் சொல்லிக் கொண்டே போகலாம். இப்பொழுது தலை நிமிர்ந்து நிற்கின்ற உள்ளுணர்வுகளில் எவ்வளவோ இளம் தலைமுறையினர் சிறு, பெருந்தொழில் அதிபர் களாகவும், வங்கிகளின் அதிகாரிகளாகவும் பணியாற்றி புகழ் சேர்த்துக் கொண்டிருக்கிறார்கள். பல இளம் தலைமுறையினர் வெளிநாடுகளுக்குச் சென்று பல துறைகளிலும் பெயரும் புகழும் பெற்று உயர் வாழ்வு வாழ்கிறார்கள். எதிர்காலத்தில் IAS, IPS ஆபீசர்களாகவும். நீதிமன்றங்களின் நீதியரசர் களாகவும் சிறந்த வழக்கறிஞர்களாகவும், உயர்ந்த மருத்துவர்களாகவும் உருவாகி நமது சமுதாயத்தை வெளி உலகுக்குக் கோடிட்டுக் காட்டுவார்கள் என்ற நம்பிக்கையுடன் ஸ்ரீ பெரியநாயகி அம்மனை வேண்டி வணங்குகிறோம்.

## வேலங்குடி

வேலங்குடி, நகர வேலங்குடி, கோட்டையூர் வேலங்குடி என்பதே இன்றைய வழக்குப் பெயர்களாக இருப்பினும் பாண்டியர் காலத்தில் தேசிக நாராயணபுரம் என்று வேறு பெயரிலும் அழைக்கப்பட்டது. இன்றும் வேலங்குடியில் உள்ள பெருமாள் கோயிலுக்குப் பின்புறம் உள்ள பகுதி, தேசிக நாராயணபுரம் என்று அழைக்கப்பட்டு வருகிறது. நகரத்தாருடைய ஆவணங்களிலும் இசைப்பிடிமானத்திலும் வேலங்குடி கல்வெட்டிலும் இவ்வூர் வேலங்குடியான தேசிக நாராயணபுரம் என்றே அழைக்கப்பட்டு வந்துள்ளது. வேலங்குடி சண்முக ஆசாரி வீட்டு தோட்டத்தில் விஜய நகர அரசர் தேவராயர் காலத்திய கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது. குரோத வருஷத்தில் (கி.பி. 445) இக்கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. இவ்வூரை தேசிகநாராயணபுரம் என்றும் குறிக்க காண்கிறோம்.

வேலங்குடி சுமார் 1500 ஆண்டுகளுக்கு முற்பட்ட தொன்மைவாய்ந்த ஊராகும். இவ்வூர் ஊருணிக் கரையிலும் ஊரின் புறப்பகுதிகளிலும் கழனி வெளியிலும் மக்கள் வாழ்ந்துவந்த பண்டைய குடியிருப்பு பகுதிகளிலும் அக்கால மக்கள் விட்டுச்சென்ற ஈழத்தாழிகள், முதுமக்கள் தாழிகள்,

மட்கலங்கள், அம்மி, கல்உரல் போன்ற பொருட்கள் காண கிடைக்கின்றன. இவையாவும் சங்க காலத்துக்குச் சற்று பிற்பட்டவை. கி.பி.4 - 5 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை. முற்கால மற்றும் பிற்காலம் பாண்டியர் ஆட்சியின் போதும் இப்பகுதி அவர்களது ஆளுகையின் எல்லைக்குள் இருந்துவந்துள்ளது. தொடர்ந்து விஜயநகர, மதுரை நாயக்கர் ஆட்சியின்போதும் சிவகங்கை மன்னர்களின் ஆட்சியின்போதும் இவ்வூர் அவர்களது கட்டுப்பாட்டின் கீழ் இருந்து வந்துள்ளது. எனவே 1500 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே தொடர்ந்து மக்கள் இப்பகுதியில் வாழ்ந்து வந்துள்ளனர் என அறிய முடிகிறது. இவ்வூரின் வடபகுதியில் வாகீசன் பெருங்குளம் நன்று என்ற வாசகம் பொறிக்கப்பட்டிருக்கிறது. வல்லம்பர் எனப்படும் நாட்டார் பெருமக்கள் வாழ்ந்து வந்துள்ளனர் என அறியமுடிகிறது.

வேலங்குடியில் அருள்மிகு சொற்கேட்ட விநாயகர் திறந்த வெளியில் வீற்றிருக்கும் பகுதியைச் சுற்றிலும் தரையை உயர்த்தி திருப்பணி செய்திருக்கிறது. கோயில் முன் மண்டபம், வசந்த மண்டபம் வேலங்குடி நாட்டார்களால் திருப்பணி செய்யப் பட்டும் தீர்த்தகேணி சி.ஆ.பெரி.காசிவிஸ்வநாதன் அம்பலம் அவர்களின் நன்கொடையாலும் செய்யப் பட்டிருக்கிறது. இவ் விநாயகரின் திருஉருவம் யானை முகமும், மானிட உடலும் பெற்று விளங்குகிறது. அளவான அங்கங்கள், சற்று சரிந்த தொந்தி, குட்டையான கால்கள், தசைப்பற்றுள்ள உடல்வாகு யாவும் பிற்கால பாண்டியர் சிற்ப வடிவினை நினைவூட்டுகிறது. கிபி. 12 - 13ம் நூற்றாண்டைச் சார்ந்த பிற்கால பாண்டியர் கலைப் பாணியில் இச்சிறிய வடிவம் அமைந்துள்ளது. வேலங்குடி பழைய சிவன் கோயில் காலத்தியதாக இவ்விநாயகரை கருதலாம். இவ்வகையில் வேலங்குடி சொற்கேட்ட விநாயகர் உருவம் தொன்மை சிறப்புப்பெறுகிறது. வேலங்குடி நாட்டார்களின் டிரஸ்டிகளால் கோவில் நிர்வாகம் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

அன்பர் சொற்கேட்கும் அருள்மிகு சொற்கேட்ட விநாயகர், சொற்கேட்ட முனீஸ்வரர் என்று அழைக்கப்படுகிறார். முன் மண்டபம் வசந்த மண்டபம் கட்டப்பட்டிருக்கிறது. ஜாதி பேதமின்றி பொங்கல் வைத்தும் அன்னதானங்கள் செய்தும் பக்தர்கள் வணங்கி வருகிறார்கள். சொற்கேட்ட விநாயகர் கோயிலுக்கு மேற்கே சிதம்பர பொய்கை ஊரணியும் பாலை மரங்கள் வீரை மரங்கள் அடர்ந்த வனமும் இருக்கிறது. புனிதமான இடமாக இருப்பதால் யாரும் அங்கே வெல்வதற்கு அச்சப்படுவார்கள். இரவில் நட்டநடு சாமத்தில் சலங்கை ஒலி கேட்பதாக நவில்வர். சொற்கேட்ட விநாயகர் பெருமானுக்கு ஆண்டுதோறும் சிவராத்திரி அன்று வேலங்குடி நாட்டார்கள் காவடி எடுத்தும் அன்னதானம் செய்தும் வணங்கி வருகிறார்கள். வேலங்குடியில் பிறக்கும் குழந்தைகளுக்கு முதலில் முடியிறக்கி பொங்கலிட்டு பெயர் கூப்பிடுவது தொன்று தொட்டுவரும் பழக்கமாக இருந்துவருகிறது.

## தனிச்சிறப்பு

பொதுவாக இவ்வாறு சொற்கேட்ட விநாயகர் கோயில் திருச்சுற்றில் அமைந்துள்ள தட்சினா மூர்த்தியை வேறெங்கும் காண இயலாது. வேலங்குடிக்கு மட்டுமே உரியது. தட்சணா மூர்த்திக்கு தனி கோயில் எழுப்புமாறு காஞ்சி சங்கராச்சாரியார் கூறியதன் அடிப்படையில் இங்கு தனிச்சந்நிதி எழுப்பப்பட்டுள்ளது.

## வரலாறு படைத்த வடிவழகி

ஊரின் நடுவே நடுநாயகமாக அமைந்துள்ளது அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோயில். வரலாற்றுச் சிறப்புமிக்க இக்கோயில் பாலையநாட்டாரின் திருக்கோயிலாகும். பல நூற்றாண்டுகளுக்கு முன்பு ஆண்டுதோறும் பாலையநாட்டார்கள் அனைவரும் ஒன்றுசேர்ந்து 'பாரிவேட்டை' யாடுவது என்பது பாரம்பரிய வழக்கம். ஒருமுறை பாரி வேட்டையாடும் போது பாலை மரங்கள் அடர்ந்த காட்டில் அருள்மிகு அம்பிகை முயல் ரூபமாக காட்சியளித்துத் துள்ளி விளையாடி எல்லோர் கவனத்தையும் ஈர்த்து பிரணவ ரூபமாக விளங்கிய பாலை மரப் பொந்தில் நுழைந்தது. வேலங்குடியைச் சேர்ந்த ஒருவர் தொடர்ந்து ஓடி அங்குள்ள பாலைமரப் பொந்தில் வேல்கம்பு கொண்டு வேகமாக குத்தினார். என்ன ஆச்சர்யம் கணீர்! கணீர்!! என்ற சப்தம் காதில் விழுந்தது. அது கேட்டு அவர் துணிந்து அப்பொந்தில் கையை விட்டுத் துருவி ஆராயத் தொடங்கினர்.

'தங்கச்சிலை' ஒன்று கையில் தட்டுப்பட்டது. அப்பால் அதன் பக்கத்தில் ஒரு சிறிய சூலாயுதமும் இருக்கப் பார்த்தார். அவைகளைப் பரிந்தெடுத்தார். சிறிய சூலாயுதத்தை மாத்திரம் தன் அடிமடியில் வைத்து மறைத்து கட்டிக்கொண்டார்.

பின் தொடர்ந்துவந்த நாட்டார்கள் பாலைமரப் பொந்திலிருந்து பெரிய விக்கிரகத்தை தூக்கி எடுத்தார்கள். பொற்சிலையைப் பார்த்த நாட்டார்கள் உள்ளம் பூரித்தனர். தூய பக்தியுடைய உளத்தினராதலின் பொய்யறியா அவர்கள் செந்நா 'தனிப் பெருந்தலைவி நம்பால் உற்றனள். பெரியநாயகி அம்மன் பெரிது வந்து எழுந்தருளினாள்' என உளக்களிப்பால் முழங்கிய முழக்கமே அம்மைக்கிட்ட பெயராய் பெரியநாயகி அம்மன் என்றாயிற்று. குலதெய்வமாக கொண்டாடத் தொடங்கினார்கள். அப்பொழுது தாய்க் கிராமமாக இருந்த பெரிய ஊராகிய பள்ளத்தூரில் அம்மனை எழுந்தருளச் செய்து ஆகம விதிப்படி, பூசை புனஸ்காரம் முதலியவைகளைச் செய்துவர வேண்டுமென்று தீர்மானித்தனர்.

ஆனால் கிழக்கு முகமாக இருந்த அம்மன் சிலை, திடீரெனத் தெற்கு முகமாகத் திரும்பி இருக்கக் கண்டனர். பெரும் வியப்படைந்தனர். நாட்டாரும் இந்த நல்ல செய்தியைக் கேட்டாரும் எல்லோரும் ஒன்றுசேர்ந்து விடியும்வரை விழித்திருந்து பார்த்தனர். தெற்கு முகமாகவே மீண்டும் திரும்பி இருக்கப் பார்த்துச் செய்வதின்ன தெனத் தெரியாது தயங்கினர், மயங்கினர். பின்னர் ஒருவாறு தெளிந்தனர். இவ்வூர் அல்லாது வேறு ஒரு ஊரில் கொண்டு வைத்து வணங்குவது என்ற முடிவுக்கு வந்தனர். பின்னர் சில ஊர்களிலும் வைத்துப் பார்த்தும் தேவி அங்கிருக்க திருவுள்ளம் கொள்ளவில்லை. முன்னம் வேலங்குடியைச் சேர்ந்த ஒருவர் மடியில் வைத்து மறைத்துக் கொண்டு வந்த 'சூலாயுதம்' பின்னர் 'பிடாரி' என்னும் பெயரில் அமர்ந்துள்ள வேலங்குடியை நோக்கி வெகுவாகத் திரும்பி இருக்கக் கண்டனர். மிக்க மகிழ்ச்சியடைந்து வேலங்குடியை தக்க இடம் எனச் சமாதானத்திற்கு வந்தனர். என்ன வியப்பு! பல ஆண்டுகளுக்குப் பின்னர்தான் வேலங்குடியில் பிடாரி என்று சூலாயுதத்தை வணங்கிவந்தது தெரியவந்தது. வேலங்குடியை நோக்கி அம்பாள் திரும்பிய நோக்கமும் தெரியவந்தது.

பெரியநாயகியாய் அன்றே வேலங்குடியில் அமரச் செய்து திருக்கோயில் எழுப்பி முறைப்படி பூசை முதலியவைகளை அன்று தொட்டு இன்றுவரை அழகாக பாலைய நாட்டார்கள் செய்துவருகிறார்கள். பாலைய நாட்டாரின் குலதெய்வமாக விளங்கும் அருள்மிகு பெரியநாயகி அம்பாளுக்கு ஆண்டு தோறும் பத்து நாட்கள் ஏழூர் திருவிழா, மது எடுப்புத் திருவிழா சிறப்புற நடந்தேறிவருகிறது.

## *ஏழூர் திருவிழா*

ஆண்டுதோறும் பங்குனி உத்திரத்தை அடுத்த திங்கட்கிழமை கோட்டையூரை அடுத்த அழகாபுரியிலுள்ள அருள்மிகு அழகியநாச்சி அம்பாளுக்கு காப்பு கட்டுவார்கள். அதனைத் தொடர்ந்து வெள்ளிக் கிழமையன்று பள்ளத்தூர் நாட்டார்கள் பள்ளத்தூர் ஆரன்வீட்டாரிடமிருந்து நெல் எடுத்துக்கொண்டு வேலங்குடி அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோயிலுக்கு வருவார்கள். அந்நெல்லை திருவிழாவுக்காக முளைப்போடு வதற்கு வைத்து வணங்குவார்கள்.

அம்பாளுக்கு தீபாராதனை செய்து முடிந்தவுடன் வைக்கோல் பிரியை வைத்து அதன்மீது வைக்கோல் பரப்புவார்கள். முதலில் கோவில் குருக்கள், அடுத்து நாட்டுச்சேர்வை பதினெட்டாம்படி கருப்பர் சாமியாடி, காளி சாமியாடி, அய்யனார் சாமியாடி, பட்டங்கருப்பர் சாமியாடி மற்றும் வந்திருக்கும் பெரியோர்கள் வரிசை முறைப்படி அம்பாளை வணங்கி தம் கையினுள் மூன்று முறை நெல்லை எடுத்து வைக்கோல் பரப்பில் போடுவார்கள். எஞ்சியுள்ள நெல்லை அம்மன் கோயில் பூசாரி எடுத்துப் போட்டவுடன் வைக்கோல் பிரிகளை பந்து வடிவத்தில் இறுக்கக் கட்டுவார்கள். இதற்கு மாலை அணிவித்து தீபவழிபாடு செய்யப்படும். இதனை வந்திருக்கும் சாமியாடிகள் நாட்டுச்சேர்வை மற்றும் பெரியோர்கள் தூக்கி கோயிலின் உட்பிரகாரத்தில் வலம் வந்து நீர் நிரப்பியுள்ள அண்டாவில் மூழ்க வைப்பார்கள். மறுநாள் அதை வெளியே எடுத்து முளை வெளிவரும் வரை நீர் ஊற்றி வருவர். முளைக் குறுத்து வெளி வந்ததும் அதனை வெயிலில் உலர்த்தி அதிலிருந்து அரிசிக்கள் தயார் செய்வார்கள். இப்பொறுப்பினை அம்மன் கோயில்

பூசாரி வகையறாவும் கரைப் பெண்களும் ஏற்றுக்கொள்வார். இவ்வாறு வடித்தெடுத்த கள் ஏழுர் திருவிழா தேரோட்ட நாளில் பிடாரி மதுக்குடம் மற்றும் பக்க மதுக்குடங்களில் ஊற்றப்படும்.

திங்கள் கிழமை அம்பாளுக்கு காலையில் காப்புக்கட்டி அன்றையதினம் முதல் மண்டகப்படி நடைபெறும். புதன் கிழமையன்று வடகுடி நெல்லியாண்டவர் கோயிலில் பாலைய நாட்டார் கூடி சுவாமி வழிபாடு முடித்து மஞ்சுவிரட்டு நடத்துதல் தொன்றுதொட்டு நடந்துவருகிறது. அடுத்த செவ்வாய் கிழமை ஏழுர் மது எடுப்பு மற்றும் தேர் திருவிழா நிகழும். அந்நாளில் அம்பாள் சந்நிதியில் கரக மது, பிடாரி மது, பக்கமது குடங்கள் வைத்து பூஜை தீபாராதனைகள் செய்தபின் பதினெட்டாம்படி கருப்பரை வரவழைத்து அம்மன் கோயில் பூசாரி மனைவியின் தலை மீது கரக மதுவை பதினெட்டாம்படி கருப்பரும் பூசாரியும் சேர்ந்து தூக்கி வைப்பார்கள். அச்சமயத்தில் அம்மன் கோயில் பூசாரி மீது திருவருள் வரும். அவர் பிடாரி மதுக்குடத்தை பூசாரியின் பங்காளி உறவுப் பெண் தலையிலும் பக்க மதுக்குடங்கள் கரைப் பெண்கள் தலையிலும் தூக்கி வைப்பார்கள். அருள்மிகு பெரியநாயகி அம்பாள் கரக மது மற்றும் பதினெட்டாம்படி கருப்பர் உடன் வர தேரேறப் பவனி வருவாள்.

தேர் புறப்படும் முன், பாலைய நாட்டார்கள் பதினெட்டாம்படி கருப்பர் கோயிலுக்கு மேளதாளத்துடன் சென்று வழிபட்டு கருப்பரையும் காளியையும் தேரடிக்கு அழைத்து வருவார்கள். பின்பு பட்டங்கருப்பரையும் அழைத்து வருவார்கள். தாம் நினைத்ததை நிறைவேற்ற அம்மனை வேண்டி பெண்கள் பதினெட்டாம்படி கருப்பர் காளி கோவிலிலிருந்து பால் மதுக் குடங்களை எடுத்து வருவார்கள். இவ்வாறாக கருப்பர் காளியுடன் ஆயிரமாயிரம் பெண்டிர், மதுக்குடம் ஏந்திப் பின் தொடர அருள்மிகு பெரியநாயகி அம்பாள் தேர் புறப்படும். தேரோட்டம் அருள்மிகு வயல்நாச்சி அம்மன் கோவில் நோக்கிச் சென்று வேலங்குடி பெரிய கண்மாயின் தென் பகுதியில் நிலை கொள்ளும். அங்கு கருப்பர் காளியாடி சாமியாடிகள் தூய துணியின் மீது அமர்ந்து பக்தர்களுக்கு திருநீறு வழங்குவார்கள். அதுபோழ்து ஒன்பது ஊர்களின்றும் மதுக்குடங்களுடன் அழைத்து வரப்படும் சாமியாடிகள் குறிசொல்லுதல் வியத்தகு செயலாகும். மதுக்குடம் ஏந்தி வருவோர் தேரின் முன் நின்று வணங்கி அதனை மூன்று முறை வலம்வந்து பின்பு வயல்நாச்சி அம்மன் கோயில் சென்று அதனையும் மும்முறை வலம் வந்து மதுக்குடத்திலிருக்கும் பாலை பலி பீடத்தில் ஊற்றி அம்பாளை வணங்கி ஊர் திரும்புவர். இதனையடுத்து அருள்மிகு பெரியநாயகி அம்பாள் தேரிலிருந்து இறக்கப்பட்டு கருப்பர். காளி சாமியாடிகள் பின் தொடர அருள்மிகு வயல்நாச்சி அம்மன் கோயிலை அடைவாள். அங்கு பதினெட்டாம்படிக் கருப்பர் அர்த்த மண்டபத்தில் ஆடிக்குறி சொல்வது ஒரு சிறப்பாகும். பின்பு கோயிலுக்கு மேல்புறம் அமைந்துள்ள கருப்பர் மேடைக்கு வந்து குறிசொல்லி மலையேறும்.

அன்றிரவு அருள்மிகு வயல்நாச்சி அம்பாளுக்கும் அருள்மிகு பெரியநாயகி அம்பாளுக்கும் அபிஷேகம் செய்து அலங்காரம் செய்து பால்வாடை அன்னம் படைக்கப்படும். பிடாரி அம்மனுக்கு அம்மன் கோவில் பூசாரி வாய்கட்டி பள்ளயம் போட்டு அரிசிகள் படைத்து தீப வழிபாடு செய்வார். பள்ளயத்தை அதன் உரிமை உள்ளவர்களுக்கும் அரிசிக்கள்ளை வந்திருப் போர்க்கும் வழங்கப்படும். அரிசிக்கள் தயாரிக்கும் முறை சங்க இலக்கியமான பெரும்பாணாற்றுப் படையில் காணப்படுவதைப் போன்றது.

மறுநாள் புதன்கிழமை காலையில் அம்பாளுக்கு வழிபாடுகளைச் செய்து பதினெட்டாம்படிக் கருப்பர் கரக மதுக்களுடன் பின் தொடர அம்பாள் மீண்டும் தேருக்குக் கொண்டு வந்து தீபாராதனை முடிந்து தேர் புறப்படும். வேலங்குடி நான்கு ரதவீதிகளையும் சுற்றிவந்து நிலைகொள்ளும். அது சமயம் நாட்டுச் சேர்வைக்கு காளாஞ்சி மரியாதை செய்யப்படும். அம்பாள் வழிபாடு முடிந்ததும் நாட்டார்கள் பதினெட்டாம்படிக் கருப்பரை. அதன் கோவிலுக்கு முறைப்படி அழைத்துச் சென்று நல்வாக்கு சொல்லி மலையேறும். பின்பு நாட்டார்கள் அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோவிலில் கூடி நாட்டுச் சேர்வைக்குப் பரிவட்டம் கட்டி பிள்ளையார் கூடத்திற்கு அழைத்து வருவர். அதனைத் தொடர்ந்து ஒவ்வொரு ஊர் நாட்டாருக்கும் வரிசைப்படி காளாஞ்சி மரியாதை கொடுக்கப்படும்.

அன்றிரவு சப்தாவரண மண்டகப்படி நடைபெறும், மறுநாள் காலையில் அம்பாளுக்கு சிறப்பு வழிபாடுகள் செய்து காப்பு அவிழ்க்கப்பட்டபின் காப்புத்தடை நீங்குவதாக கருதப்படும்.

அதற்கடுத்த செவ்வாய்க்கிழமை மறு செவ்வாய் எனப்படும். அன்று கரக மதுக் குடத்திலுள்ள தென்னம் பாளை புதுப்பிக்கப்படும். அன்றிரவு அம்பாளுக்கு அபிஷேக ஆராதனை முடிந்த பின் திரையினால் மறைத்து பிடாரி மற்றுமுள்ள தெய்வங்களுக்கு மகா மண்டபத்தில் அம்மன் கோயில் பூசாரியால் வாய்கட்டி பள்ளயம் மற்றும் அரிசிக்கள் படைக்கப்படும். படைப்பதற்கு முன்பு குருக்கள் வெளியேறிவிடுவார். பூசாரி தீபம் பார்த்ததும் பதினெட்டாம்படி கருப்பரை வரவழைத்து பள்ளயங்களுக்கு சாமியாடி நீர் வளாவியபின் அதிலிருந்து அம்மன் கோயில் பூசாரி கையினால் பள்ளய அன்னத்தை சட்டியில் எடுக்கப்பட்டு பதினெட்டாம்படி கருப்பர் சிதம்பர பொய்கைக்கு அருளுடன் செல்வார். பின் தொடர்ந்து செல்பவர்களை ஒரு குறிப்பிட்ட இடத்தில் நிறுத்தி சாமியாடியும் அம்மன் கோயில் பூசாரியும் தீவட்டியுடன் சென்று சிதம்பர பொய்கை வனத்தில் எறி சோறு எறிந்தும் சட்டியிலுள்ள நீரை வாரி இறைத்தும் மூன்று முறை பேரோலி எழுப்பியும் திரும்புவர். நேராக அம்மன் கோயில் அடைந்து இன்னலுற்றோர் குறைகேட்டு நல்வாக்கு அருள்வார். பள்ளயங்களை உரியவர்களுக்கும் அரிசிக்கள்ளை வந்திருப்போர்க்கும் வழங்கப்படும். பின்னர் கரக மதுவை பூசாரியின் வீட்டிற்கு பாலை நாட்டார் மேளதாளத்துடன் அழைத்துச் செல்வர். இத்துடன் ஏழுர் திருவிழா நிறைவு பெறும்.

ஏழுர் திருவிழா நாட்களில் மண்டகப்படி சீர்பாத சேவைக்கு ஒன்பது ஊர் நாட்டார்களில் ஒவ்வொரு ஊர் நாட்டாரும் ஒரு நாளை ஏற்றுக் கொண்டுள்ளார்கள். மண்டகப்படி அன்று அம்பாள் திருக்கோயில் சேர்ந்தவுடன் தீபாராதனை செய்து சீர்பாத காளாஞ்சி கொடுத்து பால் வாடை அன்னம் வழக்கபடி பிரித்து வழங்கப்படும். மற்ற நாட்களில் நடைபெறும் அபிஷேகங்களில் வேலங்குடி நாட்டார் முதல் காளாஞ்சி மரியாதையைப் பெற்றுக் கொள்கிறார்கள். திருவிழா மற்றும் தினசரி படித்தளத்திற்கு பாலை நாட்டாரின் புள்ளி ஒவ்வொருவரிடமும் ஒரு படி நெல் வசூல் செய்வதை நான்கு ஆண்டுக்கு முன் நடைபெற்ற நாட்டுக் கூட்டத்தில் நெல்லுக்குப் பதில் ரூபாய் ஐந்து என்று முடிவு செய்து சென்ற ஆண்டு நாட்டுக் கூட்டத்தில் புள்ளி ஒன்றுக்கு ரூபாய் பத்து என்று ஏற்கப்பட்டது. அதேபோல நடைமுறையில் இருந்துவருகிறது.

ஏழுர் திருவிழா, நவராத்திரி திருவிழா, தைப்பொங்கல், தீபாவளி போன்ற நாட்களில் ஏற்படும் செலவினங்களைப் பாலைய நாட்டார் அறப்பணிகள் டிரஸ்ட் நிதியிலிருந்து நடத்தப் படுகிறது. நவராத்திரி நாட்களில் அம்பாளுக்கு அலங்காரம் மற்றும் வழிபாடுகளும் 10ம் நாள் விஜயதசமியன்று அம்பாள் அம்பு போடுதல் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும். வெள்ளிக்கிழமை தோறும் இரவு 7 மணி முதல் 9 மணிவரை தேவாரம், திருவாசகம், அம்பாள் துதிப்பாடல்கள், போற்றி முதலியன மாணவ, மாணவிகளால் மற்றும் பக்தர்களால் பாடப்படுகிறது. இதனை வார வழிபாட்டு மன்றத்தார் நடத்திவருகிறார்கள். அவற்றிற்கான செலவை ஒவ்வொரு மாதமும் ஒருவர் ஏற்றுக் கொண்டுள்ளார்கள். ஒவ்வொரு ஆண்டும் தை மாதம் கடைசி வெள்ளிக்கிழமை மகாலெட்சுமி பூஜை என்னும் திருவிளக்குப் பூஜை சிறப்பாக நடைபெறுகிறது. மார்கழி மாதம் முழுவதும் காலையில் திருப்பள்ளி எழுச்சி நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. அதுபோழ்து திருப்பாவை, திருவெம்பாவை, அம்பாள் பக்திப்பாடல்கள் பாடப்பெற்று மாதக் கடைசிநாளில் மாணவ, மாணவியர்களுக்கு பரிசுகள் வழங்கப்படுகிறது. இந்நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்த அறங்காவலராக சிறப்புற சேவை செய்த சி.ஆ.பெரி. வெள்ளைச்சாமி அம்பலம், அம்மன் கோயில் பூசாரி அ.மு.சி. பெரியணன் அம்பலம் போற்றுதற்குரியவர்கள். மேலும் அருள்மிகு பெரியநாயகி அம்பாளுக்கு பெருந்தொண்டாற்றி புகழடைந்த பெரியோர்கள் நடுவிலார் மகன் என்ற பெரியணன் அம்பலம், சி.ஆ.பெரியணன் அம்பலம், சி. ஆ. பெரி. வெள்ளைச்சாமி அம்பலம், கோட்டையூர் ராம. ராமசாமி அம்பலம், அரு. கைலாசம் அம்பலம், சி. ஆ. பெரி. காசி விஸ்வநாதன் அம்பலம் ஆகியோர் நினைவில் நின்றவர்கள் ஆவர்.

அருள்மிகு பெரியநாயகி அம்மன், அருள்மிகு வயல் நாச்சியம்மன் கோவில்களில் நகரத்தார்களுக்கு காளாஞ்சி மரியாதை வழங்கப்படுகிறது. இத்தெய்வங்களை ஆத்தங் குடியைச் சேர்ந்த சி.மு.வகையறா, பெ.க.வகையறா குடும்பத்தினர் மிகுந்த ஈடுபாடுடன் வணங்கி வருகிறார்கள். ஒ.சிறுவயல் நகரத்தார்களும் மிகுந்த ஈடுபாட்டுடன் வணங்கி வருகிறார்கள்.

## *வயல் நாச்சியம்மன் கோயில்*

வயல் வெளியில் கோயில் கொண்டு வீற்றிருக்கும் இந்த அம்மன் வடக்கு நோக்கி அருள்பாலித்து வருகிறாள். பாலைய நாட்டார்கள் பதினாறு கிராமங்களுக்கு கட்டுப்பட்ட கோயிலாக வயல் நாச்சியம்மன் கோயில் கருதப்படுகிறது. கருவறையின் நடுவே நீண்ட பீடத்தின் மேல் அசுரன் தலையை உதைத்த நிலையில் வலது காலைக் குத்திட்டு இடது காலைத் தொங்கவிட்டு எண் தோள்களுடன் முகத்தில் சாந்தம் தவழ அம்மனின் உருவம் காணப்படுகிறது. அம்மனின் கரங்களில் வலது கைகளில் முறையே திரிசூலம் பிடிக்கும் நிலையிலும், குறுவாள், அங்குசம், நாகபாசம் ஆகிய ஆயுதங்கள் ஏந்திய நிலையிலும் காட்சியளிக்கிறாள். இடது கைகளில் மேல்கை வியக்கும் கரமாகவும் விஸ்மய முத்திரையில் அமைந்துள்ளது. அடுத்த கரம் கேடயம் பற்றியுள்ளது. மூன்றாவது கரம் கபாலத்தை ஏந்திய நிலையில் சுட்டு விரலால் சூசிமுத்திரை காட்டுகிறது. இவ்வாறு எண் கரங்களில் ஆறு கரங்கள் கொடிய ஆயுதங்களைப் -பற்றி கால்களில் வீழ்ந்து கிடக்கும் அசுரனை சம்ஹாரம் செய்யும் நிலையிலும் அம்பாள் அமைந்துள்ளார்.

அம்மனின் தலையை விரிந்த ஜடா மகுடம் அலங்கரிக்கிறது. வலது காதில் நாகுண்டலமும், இடது காதில் வட்டமான பத்ரகுண்டலமும், அணி செய்கின்றன. கழுத்தில் கண்டசரமும், மார்பகங்களைச்சுற்றிலும் மார்புக் கச்சையாக நாகபந்தம் இணைத்து காட்டப் பட்டுள்ளது. இடது தோளில் இருந்து இரு தலைகளின் ஊடே கபால மாலை சரிந்து அலங்கரிக்கிறது. இடையிலிருந்து தொடை வரை இடைக்கச்சை கட்டப்பட்டுள்ளது. அம்மன் எண் கரங்களுடன் வீறுகொண்ட குத்திட்டு வீற்றிருக்கும் கோலமும், பரந்து விரிந்த முகமும், அனல் முடியும், விரிந்த நெற்றியும் மலர்ந்த விழிகளும், எடுப்பான மூக்கும், கடைவாய் பற்களோடு கூடிய வாயும் வலுவான அங்கங்களும் நேரில் கண்டு வணங்கத்தக்கது. அம்மனின் காலடியில் வீழ்ந்து கிடக்கும் அசுரன் வலுவான அங்கங்களும் நேரில் கண்டு வணங்கத்தக்கது. அம்மனின் காலடியில் வீழ்ந்து கிடக்கும் அசுரன் கைகளில் உள்ள வாளும் கேடயமும் செயலற்றுள்ளன. தலையில் மகுடமும், காதில் குண்டலமும், கைகளில் அணியும் கழுத்தில் சரமும் இடையில் ஆடையும் கொண்ட அசுரன் அம்மனின் முன் தோற்று அபயக்குரல் எழுப்பி வீழ்ந்து கிடக்கிறான். இப்பெண் தெய்வம் இவ்வூர் மக்களின் காவல் தெய்வமாகவும் பாலைய நாட்டார் மற்றும் நகரத்தார்களின் குலதெய்வமாகவும் விளங்கி அருள்பாலித்து வருகிறாள்.

## *கோயில் மாலை*

வயல் நாச்சியம்மன் கோயில் வல்லம்பர் சமூதாயத்திற்குக் குலக்கோயிலாகும். எனவே வல்லம்பர் திருமணத்திற்கு முன் பெரியநாயகி அம்மன் கோயிலில் பதிவு செய்வார்கள். கோயிலுக்கு மாலை கொண்டு வரப்பட்டு பின் திருமண வீட்டாருக்கு கொண்டு செல்லப்படுகிறது. இம்மாலையை கோயில் வைராவி கொண்டு செல்வார். திருமண வீட்டில் வயிராவியை உட்காரவைத்து சங்கு ஊதி திருமண மாலையை பெற்றுக்கொள்வர். அம்பாள் பிரசாதமாக கோயில் மாலையை மணமக்கள் முதலில் சூட்டிக்கொண்டு காப்புக்கட்டி மண மேடைக்கு மாமன் முறையினர் அழைத்துச் செல்வார். திருமணச் சடங்குகள் முடிந்து காப்பு அவிழ்க்கும்வரை கோயில் மாலையை அணிந்திருப்பர். இம்முறையில் வல்லம்பருடைய புள்ளிக்கணக்கு இதனால் பதிவு செய்யப்பட்டு முறையாக பராமரிக்கப்படுகிறது. எனவே இது நாட்டுக்கோயில் என்ற சிறப்பை பெறுகிறது. திருவிழாவில் நாட்டார். நகரத்தார் ஊரார் என்று வழங்கும் முறை இன்றும் வழக்கத்திலுள்ளது. நாட்டாருக்கு பாத்தியப்பட்ட ஊராகையால் நாட்டார்க்கே முதல் மரியாதை செய்யப்படுகிறது.

அம்பிகையின் திருக்கோயிலான அருள்மிகு வயல்நாச்சியம்மன் கோயில்,

அருள்மிகு பெரியநாயகி அம்மன் கோயிலுக்க காமகோடி பீடம் பெரியவர் அவர்களும், புதுக்கோட்டை ஸ்ரீமத் சாந்தானந்த சுவாமிகளும், ஹரிதாஸ் சுவாமிகளும் தரிசனம் செய்து சென்றார்கள். அன்னை புவனேஸ்வரியின் சொந்த சொரூபம் இதுவேதான் என்று சொன்னார்கள்.

உழைப்பால் உயர்ந்து பொன்மனம் படைத்த திரு.வெ.கரு. கிருஷ்ணன் அம்பலம் அவர்களின் திருப்பணித்தொண்டு பாராட்டுக் குரியது. சோலை வளர்த்த அய்யனார் கோயில் புதுப்பிக்கப்பட்டு சுற்றுப் பிரகாரம் கருங்கல் தளவரிசை அமைத்து 1982ம் ஆண்டு அஷ்ட பந்தன மகா கும்பாபிஷேகம் செய்வித்தார்கள். அருள்மிகு சோலைவளர்த்த அய்யனார் கோயிலுக்கு கண்மாய் கரையில் ரோடு அமைத்து கும்பாபிஷேகம் செய்ய வேண்டுமென்ற நல் எண்ணத்துடன் செயல்பட்டுவரும் அவர்களை பாராட்டுகிறோம். மேலும் அருள்மிகு சொற்கேட்ட விநாயகர் கோயிலில் அன்னதானம் நடைபெறும் காலங்களில் பக்தர்கள் உணவருந்துவதற்கு ஓர் அழகான மண்டபம் அமைக்க பூமி பூஜை நடைபெற்று விரைவில் மண்டபம் பூர்த்தியடைய வேண்டுமென்று அருள்மிகு சொற்கேட்ட விநாயகரை வணங்கி திரு. கிருஷ்ணனின் தொண்டு சிறக்க வேண்டுகிறோம். மண்டபம் கட்டுவதற்கு இடம் கொடுத்த ஸ்ரீகண்டீஸ்வரர், காமாட்சி தேவஸ்தான அறங்காவலர் பிச்சப்பா வள்ளியம்மை ஆச்சி குடும்பத்தார்களை பாராட்டுகிறோம்,

கல்வி வள்ளல் சி.ஆ.பெரி. சுப்பையா அம்பலம், எம்.ஏ., பி.எல்., அவர்கள் முன்னாள் நாடாளுமன்ற உறுப்பினராக இருந்து தேச சேவை செய்தும் இப்பகுதி மக்கள் கல்வி வளர்ச்சியில் மேம்பாடு அடைய வேண்டி காரைக்குடியில் ஸ்ரீசுப்பையா அம்பலம் மெட்ரிக்குலேசன் பள்ளி ஆரம்பித்து பள்ளிக்கு பிரமாண்டமான கட்டடங்கள் கட்டி நம் சமூகத்திற்கே எடுத்துக்காட்டாக இருக் கிறார்கள். அதனைத்தொடர்ந்து சுப. துரைராஜ் அவர்கள், சட்டமன்ற உறுப்பினராக இருந்து நம் சமுதாய முன்னேற்றத்திற்கு சேவை செய்து புகழ் பெற்றிருக்கிறார்கள்.

### *பிள்ளையார் கூடம்*

வேலங்குடி பிள்ளையார் கூடம் 1920ம் ஆண்டு சி.ஆ.சுப்பையா அம்பலம் மேற் பார்வையில் வேலங்குடி நாட்டார்களால் கட்டப்பட்டது. கலைநயம் மிகுந்த எழிலான தோற்றமுடைய கண் கவர் கலைக் வடமாக காட்சியளிக்கிறது. 2002ம் ஆண்டு பிள்ளையார் கூடத்தை புதுப்பிக்கும் பணியினை நாட்டார்கள் செய்து சிறப்படைந்தார்கள். ஏழூர் திருவிழாவின் போது அம்பாள் வீற்றிருந்து மண்டகப்படிகள் நடைபெறுகிறது.

### *பதினெட்டாம்படி கருப்பர் கோயில்*

கிராம தெய்வங்களின் சீற்றத்தால் தமக்கும் தம் பக்தர்களுக்கும் கொடிய நோய்களும், சோதனைகளும், வேதனைகளும் நேருகின்றன எனக் கிராம மக்கள் நம்புகின்றனர். எனவே அத்தெய்வங்களின் சீற்றத்தை தணிக்கும் வகையில் பூசையும், பொங்கலும், சந்தனகாப்பு சாத்தி வழிபடுகின்றனர். இவ்வழிபாடு இக் கோயிலில் பணியாரப்பச்சை, அரிசிப்பச்சை ஆகியவைகள் நடைபெறுகிறது. இக்கோயிலுக்கு வடக்குப் பகுதியில் மூட்டாவூரணி காளி ஆலயம் இருக்கிறது. ஆண்டுதோறும் மாசி மாதம் அன்று பதினெட்டாம்படி கருப்பர் காளியம்மன் கோயில் ஆலயத்திலிருந்து சந்தன குடம் பக்தர்களால் எடுக்கப்பட்டு ஆலய மேடையில் பூசாரியால் சந்தனம் பூசப்பட்டு மேடை வண்ணப்பூக்களால் அலங்கரிக்கப்பட்டு சர்க்கரை பொங்கல் நைவேத்யம் செய்து வினியோகிக்கப்படுகிறது. அன்றையதினம் வந்திருக்கும் பக்தர்களுக்கு அன்னதானம் சிறப்பாக நடைபெறுகிறது. மறுநாள் கிடா வெட்டுப் பூசை நடைபெற்று அன்னதானம் நடைபெறுகிறது.

மேலும் அபயம் ஆண்டி என்ற கோயில், முருகன் கோயில், பட்டம்மன் கருப்பர் கோயில், களிக்காரி கோயில் பிடாரி கோயில் நொண்டி கருப்பர் கோயில், பாம்பு காளிகோயில் புதூரணி பிள்ளையார் கோவில் ஆகியவைகளும் ஊர் மக்களால் வணங்கப்பட்டுவருகிறது.

**சி.ஆ.பெரி. கணபதி அம்பலம்**

அருள்மிகு பெரியநாயகியம்மன் கோயில்

அறங்காவலர்

# கண்டனூர்

கண்டனூர் எழில் குலுங்கும் இயற்கைச் சோலை ; இந்நாள் நகரம் ஒன்றின் வசதிகள் யாவும் ஒருங்கே வாய்ந்த கிராம நகரம். இது சாக்கோட்டை ஊராட்சி ஒன்றியத்தைச் சேர்ந்த ஒரு சிறப்பு ஊராட்சியாகும். கண்டனூர், கலைஞர், கவிஞர், அறிஞர், வள்ளல்கள், அமைச்சர், கால்பந்தாட்ட வீரர்கள் போன்ற பல்வேறு துறை வல்லுநர்களை உருவாக்கித் தரும் பண்ணையாகும்.

காரைக்குடி என்னும் கல்வி நகரத்திற்கு வடகிழக்கில் 10 கிமீ. தொலைவில் கண்டனூர் உள்ளது. காரைக்குடி - புதுவயல் நெடுஞ்சாலையில் கோட்டையூர் வழியாகக் கிழக்கே திரும்பி அழகாபுரியைத் தாண்டினால் கண்டனூரை அடையலாம். கண்டனூரில் கிழக்கு எல்லை கண்டனூர் - புதுவயல் புகைவண்டி நிலையமாகும்.

கண்டனூர் சிறப்பு ஊராட்சி இரு பகுதிகளை உடையது. நெடுஞ்சாலையின் தென்பகுதி கண்டனூர் ஆகும். வடபகுதி பாலையூர் எனப்படும். கண்டனூரில் மேற்கு எல்லையாக அமைந்த வையைக்கரைக் காட்டில் பாலை எனப்படும் மரமும், வீரை எனப்படும் மரமும் மிகுதி. எனவே கண்டனூர்ப் பகுதியைப் பண்டை நாளில் 'வீரவனம்' என்றும் நாட்டார்கள் 'பாலைய நாடு' என்றும் வழங்கும் பெயர்கள் காரணப் பெயர்களாகும்.

## *தோற்ற வரலாறும் பெயர்க் காரணமும்*

கண்டனூரின் தோற்ற வரலாறும், பெயர்க்காரணமும் வீரவனப் புராணத்தில் இடம் பெற்றுள்ளன. அப்புராணத்தை இயற்றியவர் மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள். வீரவனம் என்பது இன்றைய சாக்கோட்டையை எல்லையாக உடைய ஒரு பகுதியாகும். சாக்கோட்டையில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் பெயர் வீரசேகரர். அவருக்குத் 'திருமுடித் தழும்பர்' என்ற சிறப்புப் பெயரும் உண்டு. அச்சிறப்புப் பெயர் வந்த வரலாற்றுக்குள் கண்டனூரின் தோற்ற வரலாறும் அடங்கி இருக்கிறது.

வீரசேகரராகிய சுயம்புலிங்கம் ஒரு வீரமரத்தின் அடியிலுள்ள புற்றில் மறைந்திருந்ததாம். புற்றின் அடியிலுள்ள கிழங்கைத் தோண்ட, வீரன் என்னும் வேடுவர் தலைவன் புற்றை இரும்புக் கோலால் கிண்டினானாம். இரும்புக்கோல் தாக்கி லிங்கத்தின் தலையில் குருதி பீறிட்டதாம். இரும்புக்கோலால் தாக்கப்பட்ட தழும்பைத் தலையில் தாங்கியபடியால் வீரசேகரர் 'திருமுடித் தழும்பர்' என்னும் பெயரைப் பெற்றார்.

சோழநாட்டை ஆண்ட 'கண்டன்' என்னும் சோழ வேந்தன் வெண் குட்டத்தால் மனம் நொந்து தலப்பயணம் மேற்கொண்டான். திருமுடித் தழும்பருக்குத் திருக்கோயில் கட்டப் பொருளின்றி வருந்திய வீரன் கனவில் 'சோழ மன்னன் ஒருவன் வருவான்' என்று சிவபெருமான் சொல்லியபடி, கானச்சோலையில் தங்கியிருந்த சோழமன்னனை வீரன் கண்டான். வீரசேகரப்பெருமானின் பெருமையை விளம்பினான். அதனைக் கேட்டவுடனேயே சோழன் செவியைத் தாக்கிய குட்டம் நீங்கிற்று. 'அவரைக் காண்போம்' என்று எழுந்ததும் கால்குட்டம் நீங்கிற்று. கை குவித்ததால் கைக்குட்டம் நீங்கிற்று. வீரனோடு சென்று திருமுடித் தழும்பரைக் கண்டு வணங்கித் தழுவினான். உடல் முழுவதும் வாட்டிய குட்டம் நீங்கி, மேனி பழைய நிறம் பெற்றது.

சோழன் கண்டன், கோவில் திருப்பணி செய்தான், வீரவனத்திற்கு மேற்குப் பகுதியில் அமைந்த கானச் சோலையில், மனைவியோடு நிலையாகத் தங்கி வீரசேகரப் பெருமானையும், உமையம்மையையும் வணங்கி வரலானான்; தான் தங்கியிருந்த இடத்தைக் காடுவெட்டி நாடாக்கினான். கடிய நிலம் திருத்தி வீடுகள் அமைத்தான். மக்கள் பலரைக் குடியேற்றினான். குளம் தொட்டு வளம் பெருக்கினான். தன் பெயர், வரலாற்றில் என்றும் விளங்கத்தக்க வகையில் '*கண்டன் ஊர்*' எனப் பெயரும் இட்டான். இதனைக் கூறும் வீரவனப் புராணப் பாடல்கள் வருமாறு :

*தண்ணிய குணத்து வேந்தன்*
*தன்பெரும் தமர்கள் சூழக்*
*கண்ணிய மேல்பால் கானக்*
*கண்அமர் இருக்கை உற்றான்.*

*அன்னவெம் கானம் முற்ற*

*அழித்துமா நகர்உண் டாக்கிப்*

*பன்னரும் குடிகள் ஏற்றிப்*

*பலவளங் களும்பொ ருந்தித்*

*தன்னமும் குறையு றாது*

*தன்பெயர் விளங்கும் ஆற்றால்*

*கல்நவில் தடம்பு யத்தான்*

*கண்டனூர் எனும்பேர், இட்டான்.*

இன்றும் கண்டனூரில் அமைந்திருக்கும் கண்கவரும் வையைக் கரைச் சோலை இவ்வரலாற்றுக்குக் கண்கண்ட சான்றாகும்.

சுகுணபாண்டியன் என்னும் வையைக் கரை காட்டை ஆண்ட பாண்டிய மன்னன் இராமேசுவரம் சென்று திரும்பிய சோழன் கண்டனை எதிர்கொண்டு வரவேற்று கானச் சோலையில் விருந்தளித்தான். பொன்னிக் கரையானை வைகைக் கரையான் வரவேற்று விருந்து அளித்ததால்தான் கண்டனூரில் அமைந்த கானகச் சோலைக்கு 'வைகைக் கரை' எனப் பெயர் வந்தது.

கண்டனூரில் ஓர் ஊருக்கு வேண்டிய எல்லாத் தொழிலாளர்களும் அத்தொழிலை வழிவழியாகச் செய்யும் இனத்தாரும் வாழ்ந்து வருகின்றனர். கண்டனூரில் எல்லா இனத்தாரும் சேர்ந்து ஏறத்தாழ 12000 பேர் உள்ளனர்.

கண்டனூர், நெடுஞ்சாலையின் கரையாக அமைந்திருப்பதால், காலை, மாலை எந்நேரமும் ஓயாத சாலைப் போக்குவரத்து அதற்கு இயற்கையாகவே வந்துள்ளது. இருப்புத் தடத்தைப் புதுவயல் எல்லையிலும், நிலையத்தைக் கண்டனூரிலும் பெற்றிருக்கும் புகைவண்டி நிலையம் காரைக்குடியையும், சென்னையையும் அறந்தாங்கி வழியாக இணைக்கிறது.

## *கோவில்கள் :*

சிவன் கோவில், பெருமாள் கோவில், செல்லாயி அம்பாள் கோவில், பிள்ளையார் கோவில், முருகன் கோவில், முத்திருச்சந்திக் கருப்பர் கோவில், வையைக் கருப்பர் கோவில், இத்தியடிக் காளியம்மன் கோவில், மருதமரத்து முனியய்யா, ஆரியக் கிழவன் ஊருணிக் கோவில் சேர்வைக்காரர் ஊருணிப் பிள்ளையார் கோவில், பழையூர் மாரியம்மன் கோவில், தெற்குத் தெருவிற்கு அருகிலுள்ள ஐயனார் கோவில், குட்டை அய்யா கோவில், பரநாச்சி அம்மன் கோவில், முத்தரையர் கோவில் ஆகியன கண்டனூரில் உள்ள குறிப்பிடத்தக்க கோயில்கள்.

**செல்லாயி அம்பாள் கோவில் :**

'செல்லாயி' என்றும் 'செல்லாத்தாள்' என்றும் செல்லமாக அழைக்கப்படும் செல்வநாயகி கைமேல் பலன் கொடுக்கும் ஊர்க்காவல் தெய்வம்; மழைவளம் தந்து மக்களைக் காப்பவள். இந்த அம்மனை வையைக்கரையில் மரப்பாவை உருவில் 200 ஆண்டுகளுக்கு முன்னர் நாட்டார்கள் கண்டு எடுத்ததாகவும், 170 ஆண்டு களுக்கு முன்னர் நகரத்தார் இப்போதிருக்கும் திருக்கோவிலை எழுப்பியதாகவும் கருதுவர்.

சிவன் கோவிலுக்கு வலப்புறத்தில் பழைய ஊருக்கும், புதிய ஊருக்கும் பாலமாகச் செல்லாயி கோவில் அமைந்துள்ளது. ஊரார்களும், நகரத்தார் களும் சேர்ந்து கோவிலில் பல சிறப்புகளையும், விழாக்களையும் நிகழ்த்திவருகின்றனர்.

சித்திரை மாதந்தோறும் அம்மனுக்குச் செவ்வாய்த் திருவிழாத் தேரோட்டம் 10 நாள் விழாவாக மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. செவ்வாய்த் திருவிழாவின்போது செல்வநாயகி, ஊரின் எல்லாத் திசையிலும் எழுந்தருளி அருள்பாலிப்பது புல்லரிக்கும் காட்சியாகும் ஒவ்வோர் ஆண்டும் சித்திரை மாதம் கடைசிச் செவ்வாய்க் கிழமை அன்று தேர்த்திருவிழா நடைபெறும். செல்லாயி அம்பாள் திருவிழாவின் போது நடைபெறும் பிரார்த்தனை மண்டகப்படி குறிப்பிடத் தக்க சிறப்புடையது.

செல்லாயி அம்மனின் அருளை ஏற்று நல்வாக்குக் கூறும் சாமியாடியும் நாட்டார் இனத்தில் உண்டு. நாட்டார்கள் நகரத்தார் கூட்டுறவோடு செல்லாயி அம்மன் கோவில் விழாக்கள், நிர்வாகம் ஆகியவற்றை நடத்துவர். செல்லாயி அம்பாளுக்கு அருளாடி இருப்பதுபோல வையைக் கருப்பர், இத்தியடிக் காளி, முத்திருச் சந்திக் கருப்பர், ஆலமரத்து ஐயா ஆகிய தெய்வங்களுக்கும் நாட்டார் அருளாடிகள் உள்ளனர். ஆடல், பாடல்களும் நிகழும்.

நகரத்தார் தங்கள் சிவன்கோவிலை 14 கரையால் பிரிந்து தேர்ந்தெடுக்கும் முறையில் நிர்வகிப்பதுபோல நாட்டார்களும் தங்களுக்குரிய கோவில்களை 4 கரைகளிலிருந்து தேர்ந்தெடுத்த சார்பாளிகளின் மூலம் நிர்வகிப்பர். நாட்டார்களின்

கரைகள் வருமாறு : 1. ஆரியான்கரை 2. தாண்டான்கரை 3. ஆண்டிகரை 4. கேசவன் கரை இந்த 4 கரைகளும் கூடிப்பேசித்தான் சமுதாய நிர்வாகம் நடக்கும். 4 கரைகளுக்கும் சேர்ந்து மொத்தக் காரியக்காரர்கள் ஏழுபேர். இவர்களில் 'அம்பலம்' என்பவர் ஐந்துபேர். 'சேர்வை' என்பவர் இரண்டுபேர். அண்மையில் முக்கியமான கிராம தேவதைகளில் ஒன்றான மாரியம்மனுக்குப் பழைய கோவிலை மாற்றி அதே இடத்தில் புதிய முறையில் கோவிலை எழுப்பி நல்லமுறையில் குடமுழுக்கும் நடைபெற்றிருக்கிறது.

இரண்டு ஆண்டுக்கு ஒருமுறை கரைக்கு ஒருவராக இருவர் தேர்ந்தெடுக்கப்படுவர். கரைக்கு ஒருவரை அந்தந்தக் கரையினர் தேர்ந்தெடுப்பர். முதல் வருடம் ஆரியான் கரைக்கு ஒருவரும், ஆண்டி கரைக்கு ஒருவரும் இணைந்து காரியம் பார்ப்பர். இரண்டாம் ஆண்டின் முடிவில் தயாராக வைத்திருக்கும் வரவு - செலவுக் கணக்கை ஊரார் கூடிச் சரிபார்ப்பர். ஒரு நல்ல நாளில் 'பிள்ளையார் கூடத்தில்' நாட்டார் கூட்டம் கூடும். அடுத்த விசாரணைக்கு வரக்கூடிய மற்ற இரு கரைச் சார்பாளிகளிடம் (தாண்டான் கரை, கேசவன் கரை) முதலில் பார்த்த இருவரிடமிருந்து கணக்கை ஊரார் வாங்கிச் சரிபார்த்து ஒப்படைப்பர். இத்தகைய கரை நிர்வாகம் ஊரின் ஒத்துழைப்புக்கும், ஒற்றுமைக்கும் அடிப்படையாகவும், வருங்கால இளைஞர்களில் வாழ்வுக்குப் பயிற்சியாகவும் அமைவது குறிப்பிடத்தக்கது.

நிறைவாக நாட்டார்களையும், நகரத்தார் களையும் இணைத்துப் பிணைக்கும் செல்லாயி அம்பாளைப் போற்றிப் பாடும் எங்களூர்க் கவிஞர் மகாகவி 'அரசி' அவர்களின் பாடல்களோடு கட்டுரை நிறைவெய்துகிறது.

*நாட்டார்கள் நட்டார் நகரத்தார் பேணுகிறார்*
*கூட்டாய் இருவர் குலம்காப்பாய்! – காட்டுமலர்*
*போல மலர்ந்தவளே! பொற்கோவில் கொண்டவளே!*
*காலமெல்லாம் எம்மூரைக் கா.*

*சித்திரைத் திங்கள் செவ்வாய்த் திருநாள்*
*மைத்தடங் கண்ணி வாகனம் ஊர்வாள்*
*வண்டார் சோலை வளம்கெழு பதியாம்*
*கண்ட னூரைக் கண்பார்த் தருளத்*
*தெருத்தொறும் அம்பாள் திருவுலா வருவாள்*
*வருத்தம் நீங்கும் மங்கலம் பொங்கும்*
*கொட்டி முழக்குவர் கோலம் போடுவர்*
*பட்டுச் சார்த்துவர் பண்ணியம் வழங்குவர்*
*நினைதொறும் அருளும் நிர்மலத் தேவி*
*மனைதொறும் வந்து வாழ்த்துக் கூறுவாள்*
*இவ்வூர்த் தெய்வம் இவளே என்பதைச்*
*செவ்வாய்த் திருநாள் திருவுலாக் காட்டும்*
*கோயில் வந்து கும்பிடார் வீட்டு*
*வாயில் வந்து வரங்கள் அருள்வாள்*
*கன்று மறக்கும் கற்றா மறக்குமா?*
*முன்றில் வந்து முத்தம் கொடுப்பாள்*
*எவர்க்கும் அருளும் செல்லாயி!*
*தவறுகள் நீக்கித் தாங்கிடு வாயே!*

# பாலையூர்

பாலையநாடு என்ற குடும்பத்திலே நான்காவது மகளாகப் பிறந்து பாலையூர் என்ற பெயர் கொண்டவள் நான். மண்ணுக்கும், நதிக்கும் பெண் பெயர் சூட்டப்படுவதால் என்னையும் ஒரு பெண்ணாகவே நான் பாவித்துக் கொண்டேன்.

பாலையநாடு - தமிழர்களின் ஐவகை நிலப்பிரிவுகளைக் கொண்டதாலோ அல்லது பாலை மரங்கள் நிறைந்து காணப்பட்டதாலோ மேற்படி பெயர் சூட்டப்பட்டிருக்கிறதோ என்ற எண்ணம் மேலோங்கி நிற்கிறது. எது எப்படியிருப்பினும் நாம் அனைவரும் பாலை நிலத்திற்குரிய தெய்வமாகக் கருதப்படும் அன்னை கொற்றவையை (காளியை) விருப்ப தெய்வமாக வழிபடுகிறோம்.

என்னிடத்தில் பிறந்த மக்கள் எனக்கு பல்வேறு வழிகளிலே பெருமை சேர்த்துத் தந்திருக்கிறார்கள் என்பதை எண்ணும்போது நான் பூரிப்பு அடைகின்றேன்.

மனிதர்கள் மட்டும் குடும்பங்களாக வாழவில்லை - என்னிடத்திலே தெய்வங்களும் குடும்பங்களாக வாழ்கின்றார்கள் என்பதை நினைக்கும்போது எனக்குப் பெருமையாக இருக்கிறது.

எனது நடுநாயகமாக, குளக்கரை அமைந்திருக்கின்றது. அதன் மேல் கரையிலே அருள்மிகு கற்பக விநாயகப் பெருமான். அவரை அடுத்து அருள்மிகு முருகப்பெருமான், அடுத்தாற்

போல் அருள்மிகு மகாலெட்சுமித் தாயார், அடுத்து அருள்மிகு செல்வமுத்து மாரியம்மன் என்ற வரிசையிலே அமைந்து வழிபடும் அனைவருக்கும் கல்வி, செல்வம், வீரம், சந்தோஷம் போன்ற அனைத்து நலன்களையும் வாரி வாரி வழங்கும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாக கண்டவர் உள்ளங்களை கொள்ளைகொள்ளச் செய்கிறது. குறிப்பாக பம்பாய், பெங்களூர் நகரங்களுக்கு அடுத்தபடியாக அருள்மிகு மகாலெட்சுமித் தாயார் தனிக்கோயில் கொண்டு என்னிடத்தில்தான் குடி கொண்டுள்ளாள் என்பது எண்ணும்போது நான் உண்மையிலே பெரும்பேறு பெற்றதாகவே எண்ணுகிறேன்.

1984-ஆம் ஆண்டிலே தாய்லாந்தின் தலைநகர் பாங்காங்கிலே நடைபெற்ற ஆசிய விளையாட்டுப் போட்டியிலே ஓட்டப்பந்தயத்திலே வெற்றிவாகை சூடி, தங்கம், வெள்ளி பதக்கங்களைப் பரிசாகப் பெற்றுத் தந்த எனது அருமை மகன் 'அர்ஜுனா' விருதுபெற்ற ஞானசேகரனைப் பெற்றதால் நான் பெருமைப்படுகிறேன். நான் மட்டுமா பெருமை அடைகிறேன்? இந்தப் பாலைய நாடே பெருமையடைகிறது.

என்னிடத்திலே பிறந்த என் அருமை மக்கள்-திரைப்படத்துறையிலே - நகைச்சுவை யோடு, நல் அறிவுக்கும் விருந்து கொடுத்ததோடு, தன்னிடம் உள்ள செல்வத்தை எல்லாம் ஏழை எளிய மக்களுக்கு அள்ளித்தந்த வள்ளல் அமரர் கலைவாணர் அவர்களது பெயரால் 'கால்பந்து கழகத்தினை'த் தொடங்கியதோடு, சென்ற இடங்களிலெல்லாம் வெற்றியை நாட்டி எனக்குப் பெருமை சேர்த்துத் தந்து கொண்டிருக்கிறார்கள்.

அதுமட்டுமின்றி ஆண்டுதோறும் பங்குனித் திங்கள் 3ம் (மூன்றாம்) வாரத்தில் நடைபெறும் அருள்மிகு செல்வ முத்துமாரியம்மன் பூச்சொரிதல் விழாவுக்கு பூப்பல்லக்கு செலுத்துவதைக்கண்டு உள்ளம் பூரித்துப் போகிறேன். ஆண்டுதோறும் தைப்பூசத்துக்கு எனது மைந்தர் கால்பந்தாட்டத் திடலிலிருந்து காவடிகள் கட்டி, பழனிக்குப் பாதயாத்திரை செல்வதைக் காணும்போது என் செல்வங்கள் ஆன்மீகத்திலே எவ்வளவுதூரம் ஈடுபாடு கொண்டிருக்கிறார்கள் என்பதை நினைத்துப் பெருமைப்படுகிறேன். கலைவாணர் கால்பந்தாட்ட திடலில் அருள்மிகு விநாயகர் கோவில் எழுப்பி, அதற்கு கூடிய விரைவில் திருக்குடமுழுக்கு நன்னீராட்டு விழா நடத்தவிருக்கின்றார். இக்கால்பந்தாட்ட வீரர்கள்.

விளையாட்டுத்துறை, ஆன்மீகத்துறையில் மட்டுமின்றி என்னுடைய செல்வக்குழந்தைகள் கலைத்துறையிலும் சளைத்தவர்கள் அல்ல என்பதற்கு அடையாளமாக கடந்த 25 ஆண்டுகளாக 'இளைஞர் நாடகமன்றம்' என்ற ஒரு அமைப்பை ஏற்படுத்தி ஒவ்வொரு ஆண்டும் தைத்திங்கள் இரண்டாம் நாள் (மாட்டுப்பொங்கலன்று) அருள்மிகு செல்வமுத்து மாரியம்மன் கோயில் முன்பாக அமைந்திருக்கின்ற நாடக மேடையிலே பல்வேறு நாடகங்களை நடத்தி எனக்குப் பெருமை சேர்த்திருக்கின்றார்கள்.

பின்னர் ஆடிப்பெருக்கன்று - இளைஞர் நாடகமன்றம் என்ற பெயரால் மண்டகப்படி நடத்தி அதில் என் பெண்மக்களுக்கும் கலை ஆர்வத்தை ஏற்படுத்த வேண்டும் என்ற உயரிய நோக்கத்தோடு 'கோலப்போட்டி' ஒன்றினை நடத்தி அதில் வெற்றி பெற்றவர்களுக்கு பரிசுகள் வழங்குவது மட்டு மல்லாமல் கலந்துகொண்ட அனைவருக்குமே பரிசுகள் வழங்கிச் சிறப்பித்து வருகின்றனர்.

'திரைகடல் ஓடியும் திரவியம் தேடு' என்ற ஆன்றோர் மொழிக்கிணங்க சிங்கப்பூரிலே வேலை செய்யும் எனது அருமை செல்வங்கள், என் அன்னை முத்துமாரிக்கு கடந்த 23-1-2005 அன்று தோரணவாயில் அமைத்துப் பெருமை சேர்த்திருக்கின்றனர்.

நான் முற்பிறப்பில் செய்த அருந்தவப் பயனாய் என்னிடத்திலே குடிகொண்டுள்ள அன்னை அருள்மிகு செல்வமுத்துமாரிக்கு சித்திரைத் திங்கள் முதல் நாள் (வருடப்பிறப்பன்று) திருவீதி உலா வருகின்றாள். அடுத்து சித்ரா-பௌர்ணமியை முன்னிட்டு அன்னதான நிகழ்ச்சியும், திருவீதி உலா நிகழ்ச்சியும் நடைபெறுகிறது. வைகாசி மாதத்திலே வைகாசி விசாகம், ஆடியிலே ஆடிப்பெருக்கு, ஆடி கடைசி வெள்ளி புறப்பாடு, புரட்டாசியிலே நவராத்திரித் திருவிழா நிகழ்ச்சியும் பத்தாம்நாள் விசயதசமி அன்று அம்பு போடும் நிகழ்ச்சியும், மார்கழியிலே திருப்பள்ளி எழுச்சியும், தை மாதத்திலே திருவிளக்கு வழிபாடும், மாசி மாதத்திலே மகாசிவராத்திரி

முன்னிட்டு அன்னதான நிகழ்ச்சியும், அருள்மிகு அன்னை புறப்பாட்டு நிகழ்ச்சியும், பங்குனி மாதத்தில் 3வது வாரத்திலே அம்பாளுக்கு பூச்சொரிதல் விழாவும், பின் காப்புக்கட்டி பத்துநாள் திருவிழா நிகழ்ச்சி என்றும் மனதைவிட்டு நீங்காத நிகழ்ச்சிகளாக அமைந்துவிட்டன. சுருங்கச் சொன்னால் காரைக்குடி அருள்மிகு முத்துமாரி அம்மனுக்கு அடுத்தாற்போல வருடம் முழுவதும் திருவிழா நடைபெறுவது என் செல்வமுத்து மாரியம்மனுக்குத்தான் என்பதை நினைக்கும் போது நான் மிகவும் பெருமைப்படுகிறேன்.

என்னிடத்தில் பிறந்த கோயிலைச் சேர்ந்த என்னுடைய நாட்டார் பெருமக்களால் நடத்தப் படுகின்ற அனைத்து நிகழ்ச்சிகளும் சிறப்பாக நடைபெறுவதில் எனக்கு என்றென்றும் மகிழ்ச்சியே.

என்னுடன் பிறந்த மற்ற 15 சகோதரிகளும் நலமோடும், வளமோடும் வாழ வேண்டும் என்பதே என் விருப்பம்.

நாடகமன்றம் அமைத்து, பல நாடகங் களை நடத்தி, வானொலி நாடகத்திலும் பங்குபெற்று, நமது பாலையநாட்டின் பெருமையை பாரதம் முழுவதும் பரவச்செய்ய வேண்டும் என்ற உயரிய லட்சியத்துக்காக திரைப்படத்துறையை நோக்கி அடி எடுத்து வைக்கவிருக்கும் என் அருமை மக்களுக்கு நல் வழிகாட்டி பெரும்புகழ் பெற்றுத்தர வேண்டும் என்பதே என் விருப்பம். அதற்கு அன்னை அருள்மிகு பெரியநாயகி பெருந் துணையாக இருப்பாள் என்பதில் எள்ளளவும் சந்தேகம் இல்லை.

'இப்பாலையநாட்டு 16 பெண் மக்களுக்கும் நல்ல வாழ்வையும் வளத்தையும் கொடுத்து அவர்கள் என்றென்றும் இப்பூவுலகில் பேரோடும், புகழோடும் வாழ வழிவகுப்பாள் அன்னை அருள்மிகு பெரியநாயகி' என்று எண்ணி, அவள் பொற்பாதங்களைக் கண்களில் ஒற்றி, இவ்விழா மலரில் இனிதே பங்கேற்கிறேன்.

**பெரு. பெரியகருப்பன்**

ஓய்வுபெற்ற உதவித் தலைமையாசிரியர்

நாடக இயக்குநர்.

## கருவியப்பட்டி

எங்கள் எல்கைக்குப் பெரியவராம் ஸ்ரீ கருவியாண்டவர் திருப்பெயரால் கருவியப்பட்டி என்று அழைக்கப்படுகிறது. ஸ்ரீ கருவியாண்டவர், மருதுடைய அய்யனார், பன்னோடி அய்யனார் 3 அய்யனார்கள் குடிகொண்டது சிறப்பானது.

பள்ளத்தூர், கருவியப்பட்டி, பாலையூர் மூன்று ஊர்களில் உள்ள நாட்டார்கள்

1. நாடு மதித்தான்கரை 2. அன்னங் கோட்டைகரை 3. திப்பங்கிக்கரை 4. கோடியான் கரை 5. ராயவு கரை 6. ஆவாங்கிகரை என வரிசைப்படி ஆறுகரை நாட்டார்கள் வாழ்கிறார்கள்.

கருவியப்பட்டியில் மட்டும் 4வது கரையைச் சேர்ந்த கோடியான் கரையைச் சேர்ந்த நாட்டார்களும், 5வது கரையைச் சேர்ந்த ராயவுகரை நாட்டார்களும் வாழ்ந்துவருகிறார்கள்.

கருவியாண்டவர் திருக்கோவில் 3 ஊர் நாட்டார்களுக்கு சொந்தமானது. இந்த கோவிலின் நிர்வாகப் பொறுப்பினை பள்ளத்தூர் நாட்டார்கள் நடத்தி வருகிறார்கள். நேமக் கோவிலைச் சேர்ந்த நகரத்தார்கள் இக்கோவிலுக்கு வழிபாடு செய்ய வருகை தருவார்கள்.

பாலையநாட்டில் பலவிதமாக காட்சிதந்த ஐயனார் எழுவரில் 2வது 3வது அய்யனார் குடிகொண்டது கருவியப்பட்டி ஆகும்.

*ஓடக்கரை ஓரத்திலே ஓய்வெடுத்த அய்யனார்*
*ஓர் நொடியில் வெள்ளையனை வணங்கவைத்த அய்யனார்*
*கார்பெருக நீர்சிறக்கும் கருவியாண்ட அய்யனார்*
*பார்பெருக்க பயிர்வளர்க்கும் கருவியப்பட்டி அய்யனார்*
*வேழமீது ஏறிவந்து வீறுகொண்ட அய்யனார்*
*தாழை மரத்து நிழலிலே தங்கிவிட்ட அய்யனார்*
*சொன்னபடி செய்பவர்க்கு சுகமளித்துக் காத்திடும்*
*பன்னோடி கல்லாங்குடி பார்த்திருக்கும் அய்யனார்*

-சண்முகக் கவிமணி சோலை இராமச்சந்திரன்

கலியுகத்தில் கண்கண்ட தெய்வமாக, காவல் தெய்வமாக விளங்குபவர் 'தர்மசாஸ்தா' எனப்படும் ஐயனார். கிராமங்கள்தோறும் ஊர் எல்லையில் அருளாட்சி செய்து தன்னைத் துதித்து நிற்போருக்கு அருஞ்செல்வம், மக்கட்பேறு, நோயின்மை இவற்றை தந்தருளுபவர் ஐயனார். இயற்கை வளமிகு கருவியப்பட்டியில் நாற்புறமும் கண்மாய் சூழ்ந்து, தீவு போல் நடுவே அமைந்துள்ள

அமைதி நிறைந்த அழகான குளிர்ச்சி பொருந்திய இடத்தில் அருள்தரும் கற்பகமாய் ஸ்ரீ கருவி ஜயனார் கோவில் அமைந்துள்ளது. மிகப் பழமையான பிரசித்தமான ஆலயம் இது.

இந்த ஆலயத்தில் மூன்று விநாயகர், முருகன், கருவி ஜயனார், மருதுடைய ஜயனார், சன்னாசி, பதினெட்டாம்படி கருப்பர், காளியம்மன், பெரிய கருப்பர், சின்னக்கருப்பர் ஆகிய சக்தி வாய்ந்த தெய்வங்கள் அனைத்துக்கும் தனித் தனியாக சன்னதிகள் அமைந்துள்ளது.

மூலவரான கருவி ஜயனார் கலியுக வரதனாக காட்சிதந்து பக்திமிகு மனிதருடன் நேருக்கு நேர் பேசியிருக்கிறார். இக்கோவிலில் அமைந்துள்ள மண்புரவி (குதிரை) புல்தின்ற அற்புதமும் உலக பிரசித்திபெற்றது. வெள்ளை யர்கள் இக்கோவிலுக்கு வந்திருந்தபோது மண் குதிரையைப் பார்த்து 'புல் தின்னுமா?' என்று வேளாரிடம் கேட்டனர். அதற்கு 'தின்னும்' என்று வேளார் பதில் சொன்னார். 'அவ்வாறு தின்றால் எங்களுடைய கழுத்தை வெட்டிக்கொள்கிறோம். புல் தின்னாவிடில் உன் கழுத்தை வெட்டிவிடுவோம்' என்றனர். அன்றுதினம் முழுவதும் வேளார் ஜயனாரிடம் முறையிட்டுப் புலம்பிய சமயம் 'பயப்படாதே! புல் தின்னும்' என்று உறுதியாக கனவில் வந்து சொல்லி சென்றதின்பேரில் மறுநாள் புல்தின்றதும் வெள்ளையர்கள் தாங்களாகவே கழுத்தை வெட்டிக்கொண்டனர். அதற்கு அடையாளமாக இன்றும் கோவிலின் வடபுறம் பலிபீடங்கள் வரிசையாக வைத்து பூஜைசெய்து வருவது பிரசித்தமானது.

இந்த புனிதமான புராதன ஆலயத்தில் மிகவும் வியக்கத்தக்கவும், தொன்று தொட்டு இன்றையதினம்வரை நடந்துவந்துகொண்டிருக்கிற நிகழ்ச்சி கிடாய் பலிகொடுப்பது. மருதுடைய ஜயனார் சன்னதியில் கஜபீடத்தின் அருகே கிடாய் மீது அபிஷேகம் செய்து கருவி ஜயனார் சன்னதி கஜ (யானை) பீடத்தின் அருகில் நின்று முதல் பலி கொடுத்து, இரண்டாவதாக தண்ணீர் ஊற்றாது பதினெட்டாம்படி கருப்பர் சன்னதியில் பலிகொடுத்து பக்தர்கள் வேண்டுதலை நிறைவேற்றி வருவது ஸ்ரீ கருவி ஆண்டவரின் திருவிளையாடலில் ஒன்றாகும்.

இத்தகைய சிறப்பு அம்சங்கள் நிறைந்த இத் திருத்தலம் கருவியப்பட்டியில் அமைந்துள்ளது.

**கல்லாங்குடி கிராமம் (கருவியப்பட்டி உட்பிரிவு) :**

1. அகஸ்தியர் 2. சிவ வாக்கியர் 3. திருமூலர் 4. கோரக்கர் 5. போகர் 6.இராமதேவர் 7. பதஞ்சலி 8. சட்டைநாதர் 9. கமலமுனி 10. மச்சமுனி 11. சுந்தரானந்தர் 12. கொங்கணர் 13. பாம்பாட்டி சித்தர் 14. வான்மீகர் 15. இடைக்காடர் 16. கருவூரார் 17. குதம்பை சித்தர் 18. தன்வந்திரி ஆகிய பதினெட்டு சித்தர்களில் முதன்மையானவர் அகஸ்தியர், அகஸ்தியரால் பூஜிக்கப்பட்ட திருத்தலம் கல்லாங்குடி. திருப்பாகதீஸ்வரர் சிவாலயம் சுயம்பு வடிவில் எழுந்தருளி அருளாசி வழங்கும் புராண கால வரலாற்று சிறப்புமிக்க திருத்தலம் ஆகும்.

கல்லாங்குடி முதல் கருவியப்பட்டிவரை சுமார் 800 மீட்டர் தூரம்வரை நடைவரப்பாக இருந்ததை 15 அடி அகலத்திற்குச் சாலை வசதிகள் (2000ஆம் ஆண்டு) செய்யப்பட்டுள்ளது. இந்த சாலையை அமைப்பதற்கு சொந்த நிலங்களை இருபுறமும் 5 அடி இலவசமாக விட்டுக்கொடுத்த நில சொந்தக்காரர்களுக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். இயற்கைச் சூழலில் வயல்களின் மத்தியில் இத்திருத்தலம் அமைந்திருக்கிறது. வடபுறம் தெப்பகுளமும் தாழை மரங்களோடு கூடிய தாமரைத் தடாகமும், சுற்றிலும் தென்னை மரங்களும் சூழ இனிய இடத்தில் அமைந்துள்ளது. வருடதிருவிழா 10 தினங்கள் திருவிழா நடைபெறும். 5ம் திருநாள் உற்சவத்தைத் தொன்று தொட்டு சீரோடும் சிறப்போடும் கருவியப்பட்டி நாட்டார்கள் நடத்திவருகிறார்கள்.

இல்லை என்று வந்தவர்க்கு இல்லை என்று சொல்லாமல், நல் இதயத்துடன் உள்ளதெல்லாம் கொடுத்த வள்ளல் மகாபாரத காலத்து கர்ணன் வேட்டையாடிவந்து களைப்பில் தாமரைத் தடாகக் கரைத் தாழைமரத்து நிழலில் தங்கி ஓய்வெடுத்தபோது தடாகத்தின் உள்ளிருந்து மேலேவந்த சிவலிங்கம் ஒரு பூவில் தங்கியது. பாரதக் கர்ணன் எழுந்து பார்த்தபோது லிங்கம் மீண்டும் தண்ணீருக்குள் போய்விட்டது. கர்ணன் பிரார்த்தனை செய்து கண்மூடி வேண்டிக்கொள்ள இறைவன் மீண்டும் பிரசன்னமானார். கர்ணன் தன் படைகளை வைத்து சிறு மண்டபம் அமைத்து லிங்கப் பிரதிஷ்டை செய்து உருவாக்கியதுதான் அருள்மிகு திருப்பாகத்தீஸ்வரர் திருக்கோயில். ஆதிகாலத்தில் கர்ணன்குடி என்று இருந்த பெயர் மருவி கல்லாங்குடியாகியது.

**வேலங்குடி ஸ்ரீ பெரியநாயகி அம்மன் :-**

பாலைய நாட்டார்களின் நாட்டுத் தெய்வமான ஸ்ரீ பெரியநாயகி அம்மன் திருக்கோயில் திருவிழா 10 தினங்கள் திருவிழா நடைபெறும். மூன்றாம் நாள் உற்சவத்தை கருவியப்பட்டி நாட்டார்கள் சிறப்போடு நடத்தி வருகிறார்கள்.

**கருவியப்பட்டி அருள்மிகு முத்துமாரியம்மன் திருக்கோயில் :-**

அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகி அண்டச் சராச் சரங்களை அடக்கி ஆளக் கூடிய சர்வலோக மாதா ஆதி பராசக்தி ஸ்ரீ முத்துமாரியம்மனை சுமார் 6 தலைமுறைகளாக கோவில் வீடு அமைத்து முன்னோர்கள் வழிபட்டுவந்தனர். பின்னர் 50 ஆண்டுகளுக்கு முன்னதாக பாரி எடுப்பு விழா நடத்திவந்தனர். சித்ரபானு வருடம் வைகாசி மாதம் 30ம் தேதி (13-6-2002) வியாழக்கிழமை கருவியப்பட்டி நாட்டார்களின் பெரும் முயற்சியால் அருள்மிகு முத்துமாரியம்மன் திருக்கோவில் புதியதாக நிர்மாணிக்கப்பட்டு திருக்குட நன்னீராட்டு விழா நடைபெற்றது.

காலை, மாலை 2 நேர பூஜை வழிபாடு நடைபெற்று வருகிறது. இதன் நிர்வாகப் பொறுப்பினை கருவியப்பட்டி நாட்டார்கள் செய்து வருகிறார்கள். இக்கோயிலின் சிறப்பு அம்சம், யார் கோவிலுக்கு உபயம் செய்தாலும் உபயம் செய்தவர்கள் பெயர் பொறித்து எந்த ஒரு கல்வெட்டும் அமைக்கவில்லை.

சிறந்த கைவினைக்கு எடுத்துக்காட்டாக குலாலப் பெருமக்கள் அற்புதமான மண் குதிரைகளை நிஜங்களாக மாற்றி வண்ணங்கள் தீட்டி அழகுபடுத்துகிறார்கள்.

கொத்தரி, வடகுடி, கல்லாங்குடி, கோட்டையூர், வேலங்குடி, கண்டனூர், ஊரவயல் மற்றும் இன்னும் பல ஊர்களுக்கும் கருவியப்பட்டியிலிருந்து புரவி எடுப்பு விழா நடத்துகிறார்கள். பல ஊர்களிலிருந்து நாட்டார் பெருமக்கள் இங்குவந்து குதிரை தூக்கும் நிகழ்ச்சி சிறப்பானது.

**இராம. அருணாசலம் அம்பலம்**
நாட்டார் டிரஸ்டி

## வடகுடி

ஆழிசூழ் உலகின் ஒரு சிறு புள்ளியாம் வடகுடி நாற்புறமும் தடாகங்களால் சூழப் பெற்றது. விவசாயம் ஊரின் ஜீவியப் பொருளாதாரம்.

வடகுடி, மணச்சை, கருவியப்பட்டி ஆகிய மூன்று ஊர்களையும் உள்ளிட்டு தலைமையகத்தை வடகுடியில் கொண்டி லங்கும் ஊராட்சித் தகுதியுடையது வடகுடியாகும். பக்கத்துக் கிராமங்களுக் கும் வடகுடிக்கும் என்றென்றும் உள்ளார்ந்த இணக்கமும் பிணைப்பும் சால்புடையது.

**கோயில்களும் வழிபாடும் :** ஊரின் பிரதான தெய்வம் பூரணி, பொற்கொடி சமேத ஸ்ரீ நெல்லியாண்டவர். ஏழு ஐயனார்களில் ஒருவர். நெல்லியாண்டவர் கோயிலில் அருள் தரும் ஓசைமணிகாளி அம்மன், அழகிய நாச்சியம்மன், பெரியகருப்பர், சின்ன கருப்பர், பேச்சியம்மன், தட்சிணாமூர்த்தி, முனீஸ்வரர், பைரவர் ஆகிய்வை முக்கிய பரிவார தெய்வங்கள் ஆகும். கோயில் பராமரிப்பு பரம்பரையாக வடகுடி நாட்டார்களால் செய்யப்படுகிறது.

கண்டனூர் சி.கு. உள்ளிட்ட நகரத்தார் பெருமக்கள் கோயிலின் நித்திய காலை பூஜை உபயத்தை சமீப காலந்தொட்டு மேற்கொண்டுள்ளனர்.

கோயிலின் ஸ்தல விருட்சம் மகிழமரமும் ஓசைமணிக்கு உகந்த பின்னை மரமும், சமீபத்தில், தாரண வருடம் (2004) பிரதிஷ்டை செய்யப்பெற்ற பிரபஞ்ச விநாயகருக்கு உகந்த நெல்லிமரமும் புனித உணர்வுடன் நன்கு பராமரிக்கப்படுகின்றன.

**வருடம் முழுவதும் வழிபாடு :** ராங்கியன்கரை, மாசியான்கரை, பாக்கன்கரை ஆகிய மூன்றுகரை

நாட்டார்கள் முக்கியப்பொறுப்பேற்று ஊர் மக்களின் ஒத்துழைப்புடன் எல்லா தெய்வகாரியங்களையும் இனிதே வருடம் முழுவதும் நடத்துகின்றனர். மாத வாரியாக விவரம் பின் வருமாறு : சித்திரை : 1) முதல் தேதி ஊர் நடுவில் பிள்ளையார் கூடத்தில் வீற்றிருக்கும் வெற்றி விநாயகருக்கு பொங்கலிட்டு புரோகிதரால் பஞ்சாங்கம் வாசிக்கப்பெற்று வழிபாடு நடத்திய பின் கரை வாரியாக ஊர் டிரஸ்டி, கோயில் டிரஸ்டி, திரு ஆபரணக்குழு என பொறுப்புகள் ஒரு ஆண்டு காலத்திற்கு ஒப்படைக்கப்படும்.

2) பாலைய நாட்டார்கள் கூடி, நாட்டு மஞ்சு விரட்டு நடத்தி, அன்று ஆண்டவர் கோயிலில் சிறப்பு பூஜையுடன் வழிபாடு நிகழ்த்தி பதினாறு பாலைய நாடுகளுக்கான மரியாதை காளாஞ்சிகள் வழங்கப்படும். அவ்வமயம் நாட்டு அம்பலம், நாட்டுச்சேர்வை ஆகியோர் முன்னிலை வகிப்பர்.

3) வேலங்குடி பெரியநாயகி அம்மன் கோயில் பத்துநாள் உற்சவத்தில் ஏழாம் மண்டகப்படியன்று வடகுடி நாட்டார்கள் காலையிலும் இரவிலும் சுவாமிகள் தூக்கும் சேவைக்குச் செல்வர்

4) ஏழூர்ச்செவ்வாயை முன்னிட்டு பெரியநாயகி அம்பாளுக்கு பெண்கள் பாளையிட்டு மதுக்குடம் தூக்கிச்சென்று தேரில் வீற்றிருக்கும் அம்மனை வலம் வந்து நலம் நாடுவார்கள். அங்ஙனம் மதுக்குடம் தூக்கிச் செல்லும் கன்னியர். விரைவிலேயே அம்பாளின் அருளாசியால் மணநலம் பெற்று இல்லற சுகமடைவர் என்பது நிதர்சனம்.

வைகாசி : இம்மாதத்தில் நெல்லியாண்டவர் புரவியெடுப்புத் திருவிழா இரண்டாண்டுகளுக்கு ஒருமுறை வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டு மூன்று நாட்கள், சனிக்கிழமை அல்லது புதன்கிழமை ஆரம்பித்து, முழுமுதற் கடவுள் விநாயகர், நெல்லி ஆண்டவர், அழகிய நாச்சியம்மன், கருப்பர், உலகநாயகி அம்மன் ஆகிய ஐந்து உற்சவமூர்த்திகளை ஊருக்குள் கொணர்ந்து பிள்ளையார் கூடத்தில் அமரச்செய்து உலாக்கள் நடத்தப் பெறுவதுடன் கலை நிகழ்ச்சிகளும் நடைபெறும்.

கருவியப்பட்டி வேளார்கள் செய்து தரும் புரவிகள் மீது சுவாமியாடிகள் நின்று அருள, பக்த கோடிகள் தோளில் தூக்கி வரும் போது பெண்களின் குலவைச் சத்தம் மெய் சிலிர்க்க வைக்கும். சுவாமி அழைப்பும் சுவாமியாடிகளின் அருள் கூற்றும் புரவியெடுப்புத் திருவிழாவின் முக்கிய அம்சமாகும்.

ஆனி : ஊர்ப்பொதுப்பணிகளில் குறிப்பாக சுகாதாரப்பணிகளில் ஊர் மக்கள் அனைவரும் ஒருங்கிணைவர்.

ஆடி :

1) உலக நாயகி அம்மனுக்குப் பொங்கல்
2) ஓசைமணிகாளிக்கு ஆலயத்தில் ஒரு வருடம் விட்டு ஒரு வருடம் (புரவியெடுப்பு நடைபெறும் வருடத்தை விட்டு) கிடாய் வெட்டுப் பூஜை
3) ஆண்டவர் கோயிலில் சங்காபிஷேகம்
4) கண்டனூர் சி.கு. உள்ளிட்ட நகரத்தார் பெருமக்களுடன் கூடி ஓசை மணிகாளி அம்மனுக்கு லட்ச்சார்ச்சனை
5) அழகிய நாச்சியம்மனுக்கு விளக்கு பூஜை
6) ஊர் காவலன் தெய்வத்திற்கு பொங்கலிட்டு கிடாய் வெட்டுப் பூஜை
7) அடைக்கலம் காத்தாருக்கு கிடாய் வெட்டுப் பூஜை
8) கருப்பர் - காமாட்சிக்கு மஞ்சள் நீராட்டும், கிடாய் வெட்டுப் பூஜையும்
9) சண்டீஸ்வரர், காமாட்சிக்கு சிறப்புப் பூஜை
10) சின்னக்கருப்பர், பேச்சி அம்மனுக்கு கிடாய் வெட்டுப் பூஜை

ஆவணி : மழை வளம் தந்து மக்கள் நலம் காக்கும் பாவடிக்கம்மாள், சப்த கன்னியருக்கு பொங்கல்.

புரட்டாசி:ஆண்டவர் கோயிலிலும், உலக நாயகி அம்மன் கோயிலிலும், சரஸ்வதி பூஜை. இங்கு பெருமாள் கோயில் ஒன்று உள்ளது. அங்கு புரட்டாசி சனிக் கிழமையில் அன்னதான வழிபாடு நடக்கிறது.

ஐப்பசி : அனைத்து ஆலயங்களிலும் தீபாவளியன்று சிறப்பு வழிபாடு

கார்த்திகை: 1) அழகிய நாச்சியம்மனுக்கு கிடாய் வெட்டுப் பூஜை 2) திருக்கார்த்திகையன்று சொக்கப்பான் ஜோதி தரிசனம்

மார்கழி : திருப்பள்ளி எழுச்சியை முன்னிட்டு ஆண்டவர் கோயிலில் விடியற் காலத்தில் சிறப்பு பூஜை

தை : மாதப்பிறப்பு நாளில் எல்லா ஆலயங்களிலும் புதுப்பானை பொங்கல். மறுநாள் மாட்டுப்பொங்கல். "பொங்கலோ பொங்கலோ" கொண்டாடி உத்தராயண சங்கர வழிபாடு.

மாசி : 1) சிவன் ராத்திரியன்று ஆண்டவர் கோயிலில் ஆறுகால பூஜை, காவடிகட்டி ஆண்டவர் கோயிலுக்கு வந்து வழிபாடு. மதியம் ஆன்மீகப் பணியாளர்களின் உதவியால் அன்ன தானம் 2) நிலாவிற்கு விழா எடுப்பது (தேய்பிறைக் காலத்தில்)

பங்குனி : உத்தர நட்சத்திரத்தில் மூன்று கரை நாட்டார்கள் சார்பில் சர்க்கரைக் காவடிகள் கட்டி குன்றக்குடி சென்று சண்முக நாதனை வழிபட்டு "அரோகரா" சொல்லி அன்னதானமிடுதல் இடையறாது நடைபெற்று வருகிறது.

கல்வி நலம் : பழனியப்பா தொடக்கப்பள்ளி (அரசு உதவிபெறும் பள்ளி ) பொன்விழா கண்டுள்ளது.

ஊருணி : கண்டனூர் சி.கு. உள்ளிட்ட நகரத்தாரின் அறச்செயல் பிள்ளையார் கோயிலுடன் ஊருணி மற்றும் தங்கும் மடம் அமைத்துக் கொடுத்துள்ளதாகும்.

நற்பணி மன்றம் : விவேகானந்தர் இளைஞர் நற்பணி மன்றம் தொண்டு மனப்பான்மையுடன் செவ்வனே செயல்படுகிறது.

விளையாட்டுக் கழகம் : ஆண்டவர் கால்பந்தாட்டக் கழகம் வெள்ளிவிழா கண்டுள்ளது. உற்சாகத் துடன் இயங்கி வருகிறது. போதிய அளவில் ஊரக விளையாட்டு மைதானம் அமைந்துள்ளது.

மகளிர் மன்றம் : பெண்கள் சுய உதவி குழுக்கள் ஆர்வமுள்ள உறுப்பினர்களுடன் நல்ல விதமாக இயங்கி வருகிறது. ஊர் நலப்பணிகளில் உறுப்பினர்கள் தாங்களே விரும்பி வந்து பங்குகொள்வது குறிப்பிடத்தக்கது.

சமுதாயக்கூடம் : M.L.A. தொகுதி மேம்பாட்டுத் திட்டத்தின் கீழ் பொது மக்கள் திருமணம் மற்றும் விசேட நிகழ்ச்சிகள் நடத்திக் கொள்ள அரசு கட்டி தந்துள்ளது.

காப்புத்தடைகள் : சாக்கோட்டை உமையாண்டவர் கோயில் திருவிழா, குன்றக்குடி பங்குனி உத்தர திருவிழா, அழகாபுரி அழகிய நாச்சியம்மன் திருவிழா, கல்லாங்குடி திருவிழா, வேலங்குடி ஏழூர்ச் செவ்வாய் திருவிழா ஆகிய திருவிழாக் காலங்கள் வடகுடிக்கு காப்பு தடையாகும். அந்தந்த திருவிழா பற்றிய திருமுகத் தகவல் முன் கூட்டியே வடகுடி நாட்டாருக்கு வந்து சேரும்.

ஊர் ஒற்றுமை : சுமார் நூறு குடும்பங்கள் உள்ள இவ்வூரில் அனைவரும் ஒருவருக்கொருவர் நேச உணர்வுடன் இன்ப துன்பங்களில் ஈடுபாடுடன் பங்கு கொள்கின்றனர்.

கோயில் மணிஓசை : அந்தந்த ஜாமங்களில் உள்ளூர் மற்றும் அடுத்துள்ள ஊர்களின் - கல்லாங்குடி, கோட்டையூர், பள்ளத்தூர், சிவாலயங்களின் மணி ஓசை கேட்டு வடகுடி மக்கள். உலகின் எல்லா நாடுகளிலும் பிழைக்கச் சென்றுள்ள தங்கள், தங்கள் குடும்பத்தினர் சார்பாகவும் தங்கள் நினைவுகளை இறையுணர்வுடன் புனிதமாக்கிக் கொள்ளும் பேறு பெற்றவர்கள்.

தொகுப்பு :

**இராம. நெல்லியான்** (ஆசிரியர்)

**அ. ரவிச்சந்திரன்**

(ஸ்ரீ நெல்லியாண்டவர் கோயில் அறங்காவலர்)

**நெ. சிதம்பரம் சேர்வை**

(ஸ்ரீ பெரியநாயகி அம்மன் கோயில் திருக்குட நீராட்டு விழாக்குழு உறுப்பினர்)

# பள்ளத்தூர்

பாலைய நாட்டின் ஒப்பற்ற பெரும் தெய்வமாம் அருள்மிகு பெரியநாயகி அம்பாள் கோவில் திருக்குட நன்னீராட்டு விழாவை முன்னிட்டு பாலைய நாட்டின் தாய்க் கிராமம் பள்ளத்தூரின் சிறப்பு அம்சங்களை இம்மலர் வாயிலாக பள்ளத்தூர் நாட்டார் சார்பாக வெளியிடு வதில் பெரும் மகிழ்ச்சி அடைகிறோம்.

ஆதிசிவன் தனிப்பெரும் சக்தியில் அவதரித்த ஆறுமுகனின் திருவுருவ தத்துவத்தை விளக்கும் வகையில் பள்ளத்தூர் ஆறுகரை முறையே நாடுமதித்தான் கரை-1, அன்னங் கோட்டக்கரை-2, திப்பங்கி கரை-3, கோடியான் கரை-4, ராயவுக கரை-5, ஆவாங்கி கரை-6, என ஆறு கரைகளும் முருகப் பெருமானின் ஆறுமுகம் போன்றும், ஒவ்வொரு கரைக்கும் உள்ள காரியக்காரர், அம்பலகாரர் ஆக பன்னிரெண்டு பேரும் அந்த ஆண்டவனின் பன்னிரண்டு விழிகளைப் போன்றும், பன்னிரண்டு கரங்களாகவும் இருந்து இணைந்து செயல்பட்டு வருகின்ற தத்துவார்த்தம் கொண்ட ஊராகும்.

ஒவ்வொரு வருடமும் வருடப் பிறப்பு அன்று கரை வரிசைப்படி டிரஸ்ட்டி ஒருவரை நியமனம் செய்தும், அவருக்கு உதவியாக ஏனைய ஐந்து கரைகளில் கரைக்கு ஒருவராக உதவி டிரஸ்ட்டிகள் நியமனம் செய்தும், பள்ளத்தூர் நாட்டார் பொது வரவு செலவுக் கணக்கு மற்றும் கோவில்களின் நிர்வாகங்கள் அனைத்தும் அந்த வருடம் பங்குனி மாதம் முடியும் வரை மேற்படி நிர்வாகஸ்தர்களால் நிர்வகிக்கப்பட்டு வருகின்றன.

நாட்டார் கூட்டத்தைக் கூட்டுவதாக இருந்தால் தண்டோரா மூலம் அறிவித்தும், அறிக்கை மூலம் காரியக்காரர், அம்பல காரருக்கும் தெரியப்படுத்தி கையொப்பம் வாங்கி நடப்பு டிரஸ்ட்டி கூட்டத்தைக் கூட்ட வேண்டும். அப்படிக் கூடிய பின்பு ஆறு காரியக்காரர்கள், ஆறு அம்பல காரர்கள் வந்திருக்கிறார்களா என்று சரிபார்த்து கூட்டத்தைத் துவங்குவார்கள். அதன் பின்பு அன்றைய கூட்டத்தின் பொருள் பற்றி விவாதித்து ஏகோபித்த முடிவுக்கு வந்த பின்னர் ஊர் வைராவி மூலமாக மேற்படி தீர்மானம் நாட்டார் அனைவருக்கும் சம்மதம்தானா? என்று மூன்று முறை கேட்ட பின்னரே தீர்மானம் நிறைவேறியதாகக் கருதப்படும். இது மரபாகும். கூட்டத்தில் வயதில் குறைவானவராக இருந்தாலும் மரியாதை கொடுத்துப் பேசவேண்டும் என்பதும், 'நீ, நான்' என்று ஒருமையில் பேசாதிருப்பதும் விதியாகும்.

அப்படி பள்ளத்தூர் நாட்டார் கூடும் இடமான பிள்ளையார் கூடம் தெய்வத்திரு. ஆவுடையான் பெரிய கருப்பன் அம்பலம் மேற்பார்வையில் கட்டப்பட்டு, இப்பகுதியில் சிறந்த கட்டிடக்கலை நுணுக்கத்துடன் அமைந் திருப்பது ஒரு தனிச் சிறப்பாகும். அதே போல் பாடுவார் முத்தப்பச் செட்டியார் இந்த பிள்ளையார் கூடத்தையும், அதிலுள்ள ஸ்ரீ மனமகிழ்ந்து கண்ட விநாயகரையும், இந்த ஊருக்கு எந்தக் காலத்திலும் தண்ணீர் பஞ்சம் வராம லிருக்க போற்றி அறம் பாடியிருப்பதும் சிறப்பு அம்சத்தில் ஒன்றாகும்.

இந்த ஊருக்கு ஸ்ரீ பெரியநாயகி அம்பாள் தேரோட்டம் உள்பட பத்து நாள் திருவிழாவும் ஒவ்வொரு ஆண்டும் வைகாசி மாதத்தில் முதல் திங்கட்கிழமை காப்புக்கட்டுவது என்றும், அதற்கு முந்தின வெள்ளிக்கிழமையில் திருமுகம் எழுதுவது என்றும் முன்னோர்களால் தீர்மானம் செய்யப்பட்டு எழுதிக் கட்டியிருப்பதும் சிறப்பாகும். அதே போல் பங்குனித்திருவிழா அந்த மாதம் முதல்

வெள்ளிக்கிழமையில் காய்வெட்டிப் போட்டு, அடுத்து வரும் செவ்வாய்க் கிழமையில் கும்பம் வைத்து ஒன்பது நாட்கள் திருவிழா நடத்துவது என முன்னோர்களால் தீர்மானம் செய்யப்பட்டு எழுதிக் கட்டியிருப்பதும் சிறப்பாகும்.

பெரியநாயகி அம்பாள் திருவிழா வில் அனைத்துப் பிரிவினருக்கும் முக்கியத்துவம் கொடுக்கும் வகையில், பிராமணாள் மண்டகப்படி, கொத்தனார் மண்டகப்படி, ஆசாரி மண்டகப்படி, நகரத்தார் உ.அ. வீட்டு மண்டகப்படி மற்றும் வர்த்தகர் & தொழிலாளர்கள் சார்பில் நடத்தும் மண்டகப்படி அமைப்பு உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. அதற்கென பிள்ளையார் கூடத்திற்கு முன்பாக அமைக்கப்படும் திருவிழா கொட்டகையும் இப்பகுதியில் தனிச் சிறப்பாகும்.

ஸ்ரீ மாரியம்மனுக்கு பங்குனியில் நடைபெறும் ஒன்பது நாள் திருவிழாவில் பூச்சொரிதல், பால்குடம், காவடி எடுத்தல், அன்னதானம், காலில் சிலம்பு அணிந்து நாட்டுப்புற பாடல் பாடி விளந்தானை ஆடி வருவதும் சிறப்பு நிகழ்ச்சிகளாகும்.

ஆண்டுதோறும் சித்திரை மாத்தில் நாடுமதித்தான் கரையைச் சேர்ந்த ஆரன் வகையறாவைக் கொண்டு வயலில் பொன்னேர் கட்டுகின்ற நிகழ்ச்சி இன்றும் நடைமுறையில் இருந்து வருகிறது. அதன் பிறகு விவசாயப் பணிகள் தொடங்குவது வழக்கத்தில் இருந்து வருகிறது. அதே போல் பாலைய நாட்டின் ஒப்பற்ற பெரும் தெய்வம் அருள்மிகு பெரியநாயகி அம்பாளுக்கு ஆண்டுதோறும் ஏழூர்ச் செவ்வாய்க்கு காப்புக்கட்டுகின்ற திங்கட்கிழமைக்கு முந்தின வெள்ளிக் கிழமையில் மதுவெடுப்பு திருவிழாவிற்கு உபயோகப்படுத்துகின்ற மது தயாரிப்பதற் குரிய முளை காப்பு நெல்லும், மேற்படி ஆரன் வகையறா குடும்பங்களிலிருந்து தான் கொண்டு சென்று முளைப்பாரி போடுவது சிறப்பாகும்.

பள்ளத்தூர் பாலைய நாட்டின் தாய்க்கிராமம் என்பதற்கு அடையாளமாக இந்த ஊருக்கு பிரத்தியேகமாக பன்னிரண்டு விலாசதாரர்களும் நாட்டுச் சேர்வை, நாட்டு அம்பலம், நாட்டு கணக்கு, நாட்டு தண்டல் ஆக அனைவரும் இணைந்து இருப்பது காரண காரியச் சிறப்பாகும்.

## மணச்சை

அருள்மிகு ஸ்ரீபெரியநாயகி அம்பாள் பிறந்த இடம் மணச்சை என்பதும், மணச்சைக்கு மேலும் பெருமை சேர்ப்பது அய்யா வீட்டு ஊர் என்ற சிறப்புப் பெற்றது. நாட்டு வேட்டையில் மணச்சை காட்டில் பாலை மரப் பொந்தில் இருந்து அவதரித்ததால் இந்த சிறப்பு. மேலும் மணச்சை கிராமத்து தெய்வமாகிய ஸ்ரீ திருமாருடைய அய்யனார் சுவாமி மிகவும் சக்தி வாய்ந்த தெய்வம். அதை முன்னவர்கள் ஏரிக்கரையில் செந்நெல் பார்க்க அமைந்திருந்த ஆலயத்தை ஊர் அருகில் நிறுவியதால், ஊரின் தெய்வக் குற்றத்தின் காரணமாக ஊரின் பொருளாதார வளர்ச்சியும் குன்றி, ஊர் புள்ளியும் குறைந்து கொண்டே வந்தது. உயர்திரு. அழ. பெரியய்யா அம்பலம் டிரஸ்டி, அவர்கள் காலத்தில் ஸ்ரீ திருமாருடைய அய்யனார் கோவில் திருப்பணி செய்வது என முடிவு செய்யப்பட்டு பல காரணங்களால் தடைபட்டுவிட்டது. பிறகு உயர்திரு. கொ.ராம. அரசப்பன் அம்பலம் (டிரஸ்டி) அவர்கள் ஊர் டிரஸ்டியாக இருந்த காலத்தில் கோவில் திருப்பணி நடைபெற பூமி பூசை செய்து துவங்கி வைக்கப்பட்டது. அடுத்து அதன் தொடர்ச்சியாக உயர்திரு. கி. முருகேசன்

அம்பலம் அவர்கள் ஊர் டிரஸ்டியாகவும், திருப்பணிக்குழுத் தலைவராகவும் இருந்து திருப்பணி நிறைவு பெற்றது. பிறகு உயர்திரு மு. ராமச்சந்திரன் அம்பலம் அவர்கள் ஊர் டிரஸ்டியாக நியமிக்கப்பட்டு ஸ்ரீ தாரண வருடம் ஆவணி மாதம் 11 (27-8-2004) அன்று கும்பாபிஷேகத் திருப்பணிக்குழுத் தலைவர் உயர்திரு. கி. முருகேசன் அம்பலம், ஊரார் டிரஸ்டி உயர்திரு. மு. ராமச்சந்திரன் அம்பலம் ஆகிய இருவர் தலைமையில் இனிதே நடைபெற்றது.

இந்த நன்னாளில் ஸ்ரீ திருமாருடைய அய்யனார் திருப்பணி நடைபெற்று, திருக்குட நன்னீராட்டு விழா நடைபெற நன்கொடை நல்கியவர்களுக்கும், ஒத்துழைப்புக் கொடுத்து உதவிகள் பல செய்தவர்களுக்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். அடுத்து வருகின்ற திருக்குட நன்னீராட்டு விழாவின் போது, மணச்சை நாட்டாரின் பங்கு அதிகமாக இருக்க ஸ்ரீ திருமாருடைய அய்யனாரும், அருள்மிகு ஸ்ரீ பெரிய நாயகித் தாயும் அருள்பாலிக்க வேண்டு மாய் அடிபணிந்து வணங்குகிறோம்.

மேலும் மணச்சையில் இருந்து பழனிக்கு பாதயாத்திரையாக காவடி எடுத்து முதன்முதலாக அருள் அடியார் திரு. முருகேசனார் அவர்கள் தலைமை யில் நாட்டார் காவடிகள் என்றும், சீர்மிகு பழனியில் நாட்டார் சண்முகசேவா அறக்கட்டளை மடம் அமையவும் வித்திட்டவர் என்ற மணச்சைக்கு மேலும் பெருமை சேர்த்த திரு. கி. முருகேசனார் அவர்களையும் மணச்சை ஊருக்கு சேரும் என்பதை பெருமகிழ்ச்சியுடன் கூறிக் கொள்கிறோம்.

**மு. ராமச்சந்திரன் அம்பலம்**
மணச்சை ஊர் டிரஸ்டி.

# கொத்தரி

அதிசயம் தந்திடும் அற்புதத் திருக்கோயில்
அகிலம் தழைக்க அவதரித்த திருக்கோயில்
அய்யனார் கோவிலென அழைக்கும் திருக்கோயில்
அன்பர்க்கு நலமென அளிக்கும் திருக்கோயில்

இத்திருக்கோயில் சோலை வளர்த்து சுகம் தரும் வசந்தத்தை ஆக்கியதால் ஸ்ரீ சோலை வளர்த்த அய்யனார் என்ற பெயர் பெற்றது.

தொன்மை மிக்க இத்திருக்கோயில் நிர்வாகம் கொத்தரி நான்கு கரை பரம்பரை வல்லம்பர்கள் ஆவார்கள். நரியன் கரை, புளியன் கரை, பாண்டியன் கரை, சோழான் கரை, ஆகிய நான்கு கரைகளில் நிர்வாகம் உள்ளது.

ஏறத்தாழ பல ஆண்டுகளுக்கு முன் மகராஜ ஸ்ரீ திரிபுவன சக்கரவர்த்தி காலத்தில் சிவகெங்கை சமஸ்தானம் மூலம் இனாம் சாஸனம் வழங்கப்பட்டது. மன்னர்களுக்கு மக்கள் சேனாதிபதி யாகவும், சேர்வை, அம்பலமாகவும் சிறப்பாக சேவை செய்த காரணத்தால் மேற்படியார் கேட்டு கொண்டதற்கு இணங்க இவர்களால் நிர்மாணிக்கப் பெற்ற இக்கோவிலுக்கு, கோவிலை சுற்றியுள்ள நன்செய், புன்செய் நிலங்களையும் ராமநாதபுரம் ராஜா சிவகெங்கை சமஸ்தானம் மூலம் 11ம் பசலி முதல் 1413ம் ஆண்டுகளுக்கு முன்பு மகா ஸ்ரீ திரிபுவன சக்கரவர்த்தி காலத்தில் கொத்தரிக் கிராமத்தின் உட்கடையாக குரும்பியேந்தல் என்ற இனாம் கிராமமாக மேலே கண்ட அருள்மிகு சோலை வளர்த்த அய்யனார் கோவில் நிர்வாகத்திற்கு வழங்கப்பட்டது. பின்னர் இந்திய ஜனநாயக குடியரசும் சென்னை உயர்நீதி மன்றமும் மேற்படி சமுதாய நிர்வாகத்திடம் இனாம் சாஸனத்தை உறுதிப்படுத்தியது.

நான்கு கரை கூடி கரைக்கு ஒருவர் தேர்ந்தெடுத்து 4 பேரில் ஒருவர் நிர்வாக அறங்காவலர் ஆகவும் மூன்றுபேர் அறங்காவலராகவும் செயல்படுவார்கள். மகா சபை விரும்பினால் மாற்றி அமைத்துக் கொள்ளலாம். மேற்படி நடைமுறை அரசு அறநிலையத்துறை நிர்வாகத்தை உறுதிபடுத்தி ஆணை வழங்கி உள்ளது.

*தனிப்பெரும் சிறப்பு :* இக்கோயில் மூலவர் வலது காலை மட்டும் வைத்திருக்கும் மாற்றம் தவிர அனைத்திலும் ஐயப்பன் போலவே காட்சி தருகிறார். இக்கோயில் ஏறத்தாழ 200 ஏக்கரிலிருந்து பலவகை மூலிகை சோலை காடுகளுக்கு மையமாக சோலை சூழ்ந்த அமைப்பின் காரணமாக கொத்தரி சோலையாண்டவர் கோவில் என்று அழைத்து வருகிறார்கள்.

*புண்ணிய தீர்த்தம் :* இக்கோயில் வலது பக்கம் தெற்கில் சிவகெங்கை என்னும் புண்ணியத் தீர்த்தகுளம் உள்ளது. அதை சேங்கை என்று அழைக்கிறார்கள். மூலிகைகளை தாங்கிவரும் நீரைத் தன்னகத்தே கொண்டிருப்பதால் இக்குளத்திற்கு நோய் தீர்க்கும் தகுதி உள்ளது. பக்தர்கள் இக்கோயில் 11 நாள், 21 நாள், 31, நாள் என்று இங்கே உள்ள மடத்தில் தங்கி தினமும் நீராடி அய்யனை பிரார்த்தித்து அருள் பெறுகிறார்கள்.

*தலவிருட்சமும் தண்ணருள் காட்சியும்:* இக்கோவில் தலவிருட்சம் பாலமரம் ஆகும். பல ஆண்டுகளுக்கு முன் தோன்றி ஆலமரம் போல் பரந்து அருள் நிழல் தந்து கொண்டிருக்கிறது. எல்லா மரமும் பூத்துக் காய்த்துக்கனி கொடுக்கும். ஆனால் இந்த மரம் பூக்கும். காய்க்காது பூ கொட்டிவிடும். இன்று வரை இப்படியே நடக்கிறது. ஆண்டவரைத் தரிசித்த பின் வேண்டுவோர் வேண்டியாங்கு எய்த வேண்டுமெனில் அம்மரத்து நிழலில் அமர்ந்து மனதில் நினைத்தால் எண்ணிய வண்ணம் முடியும்.

*பரிவாரதேவதைகள் :* மூலவரின் முதல் சன்னதி, பரிவார தேவதையாக பதினெட்டாம்படி கருப்பரும், ஆண்டவருக்கு அடுத்தது பெரிய கருப்பர் சன்னதி, அடுத்து சன்னாசி, களிக்காரி, தட்சணாமூர்த்தி, அகோர வீரபத்திரர், பெரிய கருப்பர், சின்னக்கருப்பர், பட்டவர், என எழுவர் களும் அடுத்து பிரம்ம சுவாமிகளும் சேங்கை கரை அமர்ந்த சித்தி விநாயகர், சக்தி மரம் வில்வமேடை நாகராஜாக்களும், அருள்மிகு முனீஸ்வரரும் தஞ்சமென்று வந்தர்க்கு தவறாமல் காத்திடும் அடைக்கலம் காத்த அய்யனார் சப்தகன்னியர் சுவாமிகளும், காவல் தெய்வம் ஸ்ரீ காளியம்மனும், அடைக்கலம் புகுந்த சாத்தப்பையாவும், வழிவிடும் கஜேந்திரரும், பாவம் தீர்க்கும் பலி பீடமும் பரிவார தேவதைகளாகவும், சுற்றுபிர காரத்தில் ஒரத்தில் வரிசையாக அமைந் துள்ள பிராத்தனைக் கல், மனதில் நினைத்ததை கை வைத்தால் கைவிரல் சுற்றிவரும். நிறைவேறவில்லையென்றால் கைவிரல் அப்படியே இருக்கும். இது போன்று நிறைய சம்பவங்கள் நடந்து உள்ளது.

*பூஜையும் பூஜகர்களும் :* இறைவன் திருமேனி தொட்டு இன்னருள் பாலிக்க பூஜை செய்பவர்கள் குலாளர் (வேளார்), உதவியாளர்களாக இருப்பவர்கள் பரிசாரகர்கள் (வயிராவி) ஊதியம் பெற்று உன்னதமாகப் பணியாற்றுகிறார்கள். முறைப்படி செய்யும் இரு காலபூஜை (உச்சிக்காலம், சாயங்காலம்) அபிஷேகங் களை படித்தர நிவேத்தியங்களும், அலங்கார தீப ஆராதனைகளும் செய்து பக்தர்களின் மனமகிழ வழிபாட்டிற்கு துணை செய்கிறார்கள்.

மார்கழி மாதம் மூன்று கால பூஜையும், மகா சிவன்ராத்திரிக்கு 6 கால பூஜையும் நடைபெறுகிறது.

*விழாக்கள் :* சித்திரை மாதம் வளர்பிறை அஷ்டமியில் சுவாமிக்கு காப்புக்கட்டி

நான்கு கரை சமுதாயக் கூடத்தில் சித்ரா பௌர்ணமியை எட்டாம் திருவிழாவாக வைத்து 10 நாள் திருவிழா கொண்டாடு கிறார்கள். அதற்கு புரவி எடுப்பு என்று பெயர். பௌர்ணமி அன்று மண்ணாலான குதிரை, காளை, பதுமை இவைகளை பிராத்தனையாகச் செலுத்தி பக்தர்கள் நோய் நொடிகள் இல்லாது சந்தான விருத்தியுடன் சகலமும் பெற்று வாழ்ந்திட வேண்டிக் கொள்வார்கள்.

சித்திரை வருடப்பிறப்பு, சித்ரா பவுர்ணமி, சிவன் ராத்திரி ஆகிய முப்பெரும் விழாவும், புரட்டாசி மாதம் லெட்ச அர்ச்சனை விழாவும், தை மாதம் சங்கராந்தி பொங்கல் விழாவும் சிறப்பாக நடைபெறுகிறது.

கொத்தரியில் வெற்றி விநாயகர் கோவில் கும்பாபிஷேகம் 28-11-2004 காலை 10-15 - 11-45 ஞாயிற்றுக்கிழமை சிறப்பாக நடைபெற்றது.

ஸ்ரீ அழகிய நாச்சி அம்மனுக்கு குடமுழுக்கு நாள் 8-12-2004 புதன்கிழமை நடைபெற்றது. ஸ்ரீ சோலையாண்டவருக்கு தாரண ஆண்டு பங்குனி திங்கள் 10ம் நாள் 23-3-2005 புதன்கிழமை குடமுழுக்கு விழா சிறப்பாக நடைபெற்றது.

பார்போற்றும் கொத்தரியில் அ.மி, சோலையாண்டவர் வித்தியாசாலை 1946ல் தொடங்கப்பட்டு அரசு நிதிபெறும் பள்ளியாக செயல்பட்டு வருகிறது. 1996ல் பொன்விழா கண்டு எதிர்வரும் 2006 வைரவிழாக் காண உள்ளது.

நாட்டார் பெரு முயற்சியால் சுமார் பத்துலட்சம் மதிப்பில் புதிய பள்ளிக்கூடம் கட்டப்பட்டு ஊரின் பெருமைக்கு அழகு சேர்க்கும் இப்பள்ளியில் மாணவர் சீருடை, புரவலர் திட்டம். பெற்றோர் சங்கம், மாணவர் மன்றம், ஆண்டு விழா போன்ற சிறப்பான திட்டங்கள் பள்ளி நடைமுறையில் உள்ளது. 2002ல் இந்த பள்ளி சிவகெங்கை மாவட்டத்தில் சிறந்த பள்ளியாக தேர்ந்தெடுக்கப்பட்டு கேடயம் பரிசு பெற்றது. 2004ம் ஆண்டு முதல், நடு நிலைப்பள்ளியாக தரம் உயர்த்தப் பட்டது. "காலம் பொன் போன்றது, கல்வி கண் போன்றது" என்ற கோட்பாட்டில் இதன் தலைமை ஆசிரியர் சி. காந்தி எம்.ஏ. எம்.பில். பி.எட் அவர்கள் உயரிய கல்வித்தரம் என்றும் சிறந்து விளங்க பாடுபட்டு வருகிறார். எல்லாம் வல்ல ஸ்ரீ சோலையாண்டவர் அருள் புரிய கொத்தரி நாட்டார்கள் வேண்டுகிறோம்.

*- கொத்தரி நாட்டார் டிரஸ்டி*

## கானாடுகாத்தான்

1. முன்னவனும், யானை முகத்தவனும், முக்தி நலம் சொன்னவனும் ஐங்கரனு மாகிய அருள்மிகு தேவேந்திர விநாயகப் பெருமான் எங்கள் ஊரின் கிழக்குத் திசையில் கோடைக்காலத்திலும் வற்றாது குடி தண்ணீர் வழங்கிக் கொண்டிருக்கும் செட்டியார் ஊருணி, மேற்குக் கரையில் எழுந்தருளியுள்ளார். இவ்விநாயகப் பெருமானுக்கு 18-09-2004 ஆம் நாள் விநாயகர் சதுர்த்தியன்று திருக்குடமுழுக்கு விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. அரச மரத்தடியில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ தேவேந்திர விநாயகருக்கு சுமார் நான்கு லட்சத்து இருபத்தைந்தாயிரம் ரூபாய் செலவில் மணிமண்டபம் கட்டப்பட்டுள்ளது. கானாடுகாத்தான் நாட்டார், மெய்யன் பர்கள், ஆன்மீகச் சிந்தனையாளர்கள் ஆகியோரின் பொருளுதவியாலும், உடல் உழைப்பாலும் மிகச்சிறப்பான முறையில் திருப்பணி நிறைவுற்றுள்ளது. தேவேந்திர னுக்கு மழை வேண்டி ஒவ்வொரு ஆண்டும் கடைசி ஆடி வெள்ளியில் செட்டியார் ஊரணி மேல்கரையில் இப்பிள்ளையார் கோவில் வளாகத்தில் பொங்கல் வைப்பதும், அதன் பலனாக அன்றைய தினம் 'வருண பகவான்' மழை

பெய்விப்பதும் வழக்கமான நிகழ்வு களாகும். எனவே தான் இப் பிள்ளையாருக்கு ஸ்ரீ தேவேந்திர விநாயகர் என பெயர் விளங்குகிறது. இக்கோவில் அமைந்துள்ள அரச மரத்துடன் ஐந்து மரங்கள் உள்ளடக்கியுள்ளது. அவை வேம்பு, மஞ்சனத்தி, வக்னா, கூகமுட்டி மற்றும் அரசு என ஐந்து மரங்களின் சங்கமம் ஆகும். ஒவ்வொரு ஆண்டும் பிள்ளையார் சதுர்த்தியன்று கடந்த 25 ஆண்டுகளாக பூச்சொரிதல் விழா வெகு சிறப்பாக இத்தேவேந்திர வினாயகருக்கு ஆன்மீக பெருமக்களால் கொண்டாடப் பட்டுவருகிறது. கடந்த 24 ஆண்டு களுக்கு முன்பே இத்தேவேந்திர வினாயகருக்கு சுமார் 5 கிலோ எடையில் *'வெள்ளி அங்கி'* திருப்பணி பக்தகோடி பெருமக்களால் செய்யப்பட்டுள்ளது.

2. ***அருள்மிகு பொன்னழகி அம்மன் திருக்கோயில்*** இவ்வூருக்கு மிகவும் பழம் பெருமையுடையது. இக்கோயிலை கானாடுகாத்தான், நேமத்தான்பட்டி, நாட்டார்களும், சிவகங்கை சமஸ்தானத் தாரும் இணைந்து உருவாக்கியுள்ளனர். ஆண்டுதோறும் வைகாசித் திங்கள் பதினோரு நாட்கள் கானாடுகாத்தான் திருவிழா நடைபெறும். திருவிழா தொடங்குவதற்கு முன் முளைப்பாரி போடப்படும். எட்டாம் திருநாளன்று **புரவி எடுப்பும்** ஒன்பதாம் திருநாளன்று **மது எடுப்பும்** சிறப்பான முறையில் அம்மன் திருவருளால் நிகழ்ந்து வருகிறது. திருவிழா முடிந்து மறு ஏழு நாட்கள் மறு செவ்வாய் நடைபெறும். இக்கோயில் விழாக்களில் அரண்மனை நாட்டார், நகரத்தார், பெரியகருப்பன் சேர்வை, சின்னக்கருப்பன் சேர்வை, ஆறுகரை அம்பலகாரர்களுக்கு நாள் தோறும் காளாஞ்சி மரியாதை வழங்கப்படும்.

கானாடுகாத்தான் - நேமத்தான் பட்டி நாட்டார், நகரத்தார் பெருமக்களின் பேருதவியாலும், பொருளுதவியாலும் ஸ்ரீ பொன்னழகிய தேவி அம்மன் திருக் கோயில் *திருப்பணி* செய்யப்பட்டு 12-05-1995ம் நாளன்று திருக்குட நீராட்டு விழா இப்பகுதி வாழ் மக்கள் போற்றும் வகையில் சீரும் சிறப்புமாக நடைபெற்றது. மேலும் இக்கோவில் மூலஸ்தான அம்பாளுக்கு கானாடுகாத்தான் நாட்டார் களின் பெரு முயற்சியில் சுமார் 12 கிலோ எடையில் ***புதிய வெள்ளி அங்கி*** திருப்பணி செய்யப்பட்டுள்ளது. மேற்படி அங்கியும் கானாடுகாத்தான் நாட்டார் பொறுப்பில் உள்ளது.

இக்கோயிலை அமைக்கும் காலத்தில் சிவகங்கை சமஸ்தானத்திற்கு பல்லாற்றானும் உறுதுணையாக இருந்தவர் மெய்யன்பராகிய கானாடுகாத்தான் அருள்திரு. ***பெரிய கருப்பன் சேர்வை*** யாவார். இத்திருக்கோயிலில் பெரிய கருப்பன் சேர்வைக்கு திருஉருவ கற்சிலை ஒன்று வடிவமைத்து வழிபாடும் நடந்து வருகிறது.

ஒவ்வொரு ஆண்டும் எங்கள் ஊரில் ஸ்ரீ பொன்னழகி அம்மனுக்கு திருவிழா நடைபெறுவதற்கு முன்னதாக சித்திரைத் திங்கள் கடைசி சனிக்கிழமை யன்று பிள்ளையார் கூடத்தில் குடிகொண் டிருக்கும் பெருமாளுக்கு **ஹரி பூஜை** நடத்தப்பெற்று ஆயிரக்கணக்கானோருக்கு அன்னதானம் வழங்கப்படும்.

3. கானாடுகாத்தான் நாட்டார் களுக்குரிய பழைய பிள்ளையார் கூடம் பதிமூன்று லட்சம் ரூபாய் செலவில் புதிய முறையில் திருப்பணி செய்யப்பட்டு திருக்குடமுழுக்கு விழா 11-05-2001 ஆம் நாளன்று சிறப்பாக நடைபெற்றது. இம்மணி மண்டபம் கானாடுகாத்தான் நாட்டார் பெருமக்களின் கொடை உள்ளத்துடன் வழங்கிய பொருள் உதவி கொண்டு தீர்மானிக்கப்பட்டுள்ளது.

4. இவ்வூரின் மேற்குப் பகுதியில் உலகலாம் உணர்ந்து ஓதற்கரியவனாகிய சிவபெருமான் ***சிவலோக நாத சுவாமி கோயில்*** அமைந்துள்ளது. இக்கோயில் சிற்பக் கலையுடன் கூடிய கற்கோயில்

ஆகும். இக்கோயிலின் அமைப்பு காண்போரை வியக்க வைக்கும் தன்மையுடையது. இதனைப் *பெரிய கோயில்* என்றும் அழைப்பர். சுயம்புலிங்கமாக சிவலோக நாதசுவாமி இங்கு எழுந்தருளியுள்ளார். அம்பாளுக்கு *சௌந்திரநாயகி* என்ற ஒப்பில்லாதவள் என்ற பெயருடன் இக்கோவிலில் அருள்புரிந்து வருகிறார். இங்கு ஆனி அஸ்தத்தில் காப்புக்கட்டி பதினோரு நாட்கள் திருவிழா நடைபெறும். தேர்த்திருநாளன்று சுவாமியும், அம்மனும் தனித்தனியாக இரண்டு தேர்களில் கோயிலைச் சுற்றி திரு வீதி உலா வருவார்கள்.

அருள்மிகு சிவலோக நாதரும், அருள்மிகு சௌந்தரநாயகி அம்மனும், தேர்த்திருவிழாவன்று கானாடுகாத்தான் செட்டியார் ஊருணி மேற்குக் கரையில் அமைந்துள்ள மண்டபத்திற்கு எழுந்தருளி அபிஷேக, ஆராதனைகள் முடித்து பழையூரில் திருவீதி உலா வந்து மக்களுக்கு அருள்பாலிப்பர். இச் சிவன்கோயிலில் திருவிழா நாட்களில் அரண்மனை, நாட்டார், நகரத்தார், கானாடுகாத்தான் பெரியகருப்பன் சேர்வை, சின்னக்கருப்பன் சேர்வை, ஆறுகரை அம்பலம் என்ற மரியாதைகளும், நேமத்தான்பட்டிக்கு சேர்வை, அம்பலம் என்ற இரு மரியாதைகளும் வழங்கப்படும். இச்சிவன்கோயில் திருவிழாவில் ஆறாம் திருநாளன்று பாலைய நாட்டார் சார்பாக கானாடுகாத்தான்-நேமத்தான்பட்டி நாட்டார்களால் *'நாட்டார் மண்டகப்படியை'* நடத்துகின்றனர்.

கானாடுகாத்தான் -நேமத்தான்பட்டி நாட்டார்களும் & நகரத்தார்களும் வழங்கிய பெரும் கொடையால் இக்கோயில் திருப்பணி நடைபெற்று குடமுழுக்கு விழா அனைவரும் பாராட்டும் வகையில் 13-06-2003 நிகழ்ந்தது. கானாடுகாத்தான் நாட்டார்களின் அரும் முயற்சியால் *அலங்கார மண்டபத்தில்* மேல் சிற்ப வேலைப்பாடுகள் திருப்பணி செய்யப்பட்டுள்ளது. மேலும் குடமுழுக்கு விழா அன்னதானத்திற்காக ரொக்க அன்பளிப்பும் வழங்கப்பட்டுள்ளது. இங்குள்ள திருத்தேர்களை கானாடு காத்தான்-நேமத்தான்பட்டி நாட்டார்கள் பராமரிப்பில் புதுப்பிக்கப்பட்டு வருகிறது. இக்கோவில் தினசரி படித்தளத்திற்காக அரிசியும், சுவாமிகளுக்கு மலர்மாலைகளும் கானாடுகாத்தான் நாட்டார்களால் வழங்கப்பட்டுவருகிறது.

5. கானாடுகாத்தானில் "பெரியகோயில்" என்று அழைக்கப்படும் திருத்தலத்தில் அருள்மிகு பொன்னழகிய தேவி அம்மன் கோயில், அருள்மிகு சிவலோக நாத சுவாமி சிவன் கோயில், அருள்மிகு முனீஸ்வரர் கோயில், அருள்மிகு கரைமேல் அழகர் அய்யனார் கோயில், அருள்மிகு வரதராஜபெருமாள் கோயில் ஆகிய ஐந்தும் ஒரே பகுதியில் அமைந்திப்பது மிகச்சிறப்பான அம்சமாகும்.

இயற்கையாகவே இவ்வூரிலே பெய்யும் மழைநீர் கிழக்குத் திசையிலிருந்து மேற்குத் திசை நோக்கிச் சென்று மேற்சொன்ன ஐந்து கோயில்களையும் வலம் வந்து திரும்பவும் கீழ்திசை நோக்கி திரும்பிச் செல்வது திருவரங்கத்தின் அமைப்பை நமக்கு நினைவூட்டுகிறது.

6. எமது ஊரின் வடக்கே வயல் வெளியில் அமைந்துள்ள ***ஸ்ரீ அங்காள பரமேஸ்வரி அம்மன்*** திருக்கோவிலில் மூல அம்மன் சிலை தவிர ஏனைய பரிவார தெய்வங்களான கருப்பர், காளி, முதலான தெய்வங்கள் மூலஸ்தானத்தில் "சுட்டமண் சிலைகளாகவே" இருந்து வந்ததை நாட்டார் செலவில் கற்சிலைகளால் புதுப்பிக்கப்பட்டு, புதிய திருக்கோவில் திருப்பணியினை நிறைவு செய்து கடந்த 14-11-95ல் கானாடுகாத்தான் நாட்டார்கள் & பொது மக்களால் இத்திருக்கோவில் திருக்குட நீராட்டு விழா செய்யப்பட்டது.

7.கானாடுகாத்தான் புதுக்கண் மாய்க்கு வடக்கே வயல் வெளிகளுக்கு

மத்தியில் அமைந்துள்ள *ஸ்ரீ பெரிய கருப்பர் - சின்னக்கருப்பர்* ஆலயம் நாட்டார்களால் திருப்பணி செய்து புதுப்பிக்கப்பட்டு 17-09-2004ல் திருக்குட நீராட்டு விழா செய்யப்பட்டுள்ளது. ஒவ்வொரு ஆண்டும் வைகாசி மாதம் திருவிழா முடிந்து முளைப்பாரி எடுத்த வெள்ளிக்கிழமை மாலை கானாடுகாத் தான் நாட்டார்களால் இக்கருப்பர் கோவில் மஞ்சு விரட்டு வெகு சிறப்பாக நடைபெற்று வருகிறது.

கானாடுகாத்தான் ஆதியில் **கானாட்டில்** 108 கிராமங்களில் சேர்ந்தது; புதுக்கோட்டை தொண்டைமான் சீமையுடன் நேமத்தான்பட்டி-கானாடுகாத்தான் ஆகிய ஊர்கள் சேர்ந்திருந்தன. எனவே தான் நேமநாட்டு எல்கையில் எமது ஊர் இருந்து வருகிறது. எங்கள் ஊரின் வடக்கே அமையப்பெற்றுள்ள கானாட்டை "காத்தவர்கள்"என்பதால் கானாடுகாத்தான் என்ற காரணப்பெயரும் விளங்கி வருகிறது.

எங்கள் கானாடுகாத்தானில் 6 கரை வல்லம்பர் இன மக்கள் வாழ்ந்து வருகின்றனர். எங்கள் 6 கரைகளிலும் மொத்தம் சுமார் 325 புள்ளிகள் (திருமணமானவர்) உள்ளனர். நமது வல்லம்பர் இன மக்கள் வாழும் பழையூர் பகுதியில் பெருவாரியான வீடுகள் நமது சமுதாய மக்களும், நமது ஊருக்கு தேவையான தொழிலாளிகள் குடும்பங் களும் மட்டுமே வாழ்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

மேலும் கடந்த 18-09-1892ல் கானாடுகாத்தானில் சுமார் 114 குருக்கம் குடிவார பாத்தியப்பட்ட புஞ்சை இடங்களை கானாடுகாத்தான் நாட்டார் களால் திரு. சா. அண்ணாமலை செட்டியாருக்கு கானாடுகாத்தான் நகரத்தார்களுக்காக கிரயம் கொடுக்கப் பட்டு அதில் தான் தற்போது கானாடுகாத்தான் நகரத்தார்களின் மனைக்கட்டு வீடுகள் "**புதூர்**" என்ற புனைப்பெயரில் உள்ளது. மேலும் எங்களது குடிவார பாத்தியப்பட்ட உரிமையுள்ள நிலங்களான சுமார் 338 ஏக்கர் புஞ்சை நிலங்களையும், பள்ளத்தூர், கொத்தரி, கொத்தமங்கலம் நாட்டார் களுக்கு பாத்தியமான புன்செய் தோட்டங்கள் மொத்தம் சுமார் 1600 ஏக்கர் நிலங்களை உலகப்போரின் போது அன்றைய இந்திய அரசு, "*விமான தள ஓடுதள பாதைக்காக*" "நில ஆர்ஜிதம்" செய்து 1939ம் வருட வாக்கில் எடுத்துக் கொண்டது. உலகப் போருக்குப்பின்னர் மேற்படி சுமார் 1600 ஏக்கர் நிலங்களை சம்பந்தப்பட்ட நான்கு ஊர் நாட்டார்களிடம் (வல்லம்பர்களிடம்) திரும்ப ஒப்படைக்க அரசு உத்திரவிடப்பட்டும், அன்றைய சூழ்நிலையில் மாவட்ட நிர்வாகம் மேற்படி இடங்களை தொடர்ந்து தங்கள் கட்டுப்பாட்டிலேயே வைத்திருந்ததால் எங்கள் புஞ்சை இடங்களில் அரசு மாவட்ட கால்நடை பண்ணையை துவக்கி நடத்தி வருகின்றனர். பல்வேறு தொடர் நடவடிக்கைகளை இந்த 4 ஊர் நாட்டார்களும் மாவட்ட நிர்வாகத்திற்கு எதிராக தமது குடிவார பாத்தியத்தை நிலை நிறுத்த நீதிமன்ற நடவடிக்கைகளும் நடத்தியதன் பலனாக மேற்படி கால்நடை பண்ணை உள்ள இடத்தில் சுமார் 338 ஏக்கர் புன்செய் நிலத்திற்கு கானாடுகாத்தான் 6 கரை வல்லம்பர்கள் (நாட்டார்களுக்காக) மேற்படி நாட்டார் டிரஸ்டி என்ற முறையில் அமரர் V.PR. **சோலைமலை *அம்பலம்*** பெயரில் பட்டா பெறப்பட்டும், மேற்படி இடம் சம்பந்தமான பட்டா கோரும் வழக்கு கைக்கு எட்டியும் வாய்க்கு எட்டாத நிலையில் மேல் முறையீட்டு வழக்கு நடவடிக்கையில் நிலுவையில் உள்ளது என்பதையும் தெரிவித்துக்கொள்கிறோம்.

கானாடுகாத்தானில் 9 கிராம தெய்வங்கள் உள்ளடக்கிய முக்கிய திருக்கோயில்கள் உள்ளன.

அவையாவன :

1. ஸ்ரீ சீகுருனிப் பிள்ளையார், அழகுள்ள வினாயகர் (கண்மாய் பிள்ளையார்) ஸ்ரீ தேவேந்திர விநா்யகர் ஆலங்கள்
2. ஸ்ரீ சிவலோக நாதர் - சௌந்தரநாயகி அம்பாள் ஆலயம் (சிவன் கோயில்)
3. ஸ்ரீ அழகிய நாச்சியம்மன் (என்ற) பொன்னழகிய தேவி ஆலயம்
4. ஸ்ரீ கரைமேல் அழகர் ஐயனார் கோவில்
5. ஸ்ரீ வரதராஜ பெருமாள் கோவில்
6. ஸ்ரீ பெரிய கருப்பர் சின்னக்கருப்பர் ஆலயம் மற்றும் கண்மாய் கருப்பர் ஆலயம்
7. ஸ்ரீ பரம்பனூர் காளி கோவில்
8. ஸ்ரீ பாந்தராங்ககாட்டு காளி & ஸ்ரீ அங்காள பரமேஸ்வரி அம்மாள் கோவில்
9. ஸ்ரீ ஆயிச்சியம்மன் கோவில் (என்ற சப்த கன்னிமார்) முனீஸ்வரர் கோவில் ஆகியவை உள்ளன.

முன்பு சிவகங்கை "கௌரி மகாராஜாவும்" அவர்தம் குடும்பத்தவர்களுக்கும் குறுநில மன்னர்களால் பகைமை ஏற்பட்டு உயிருக்கு ஆபத்து ஏற்பட்டபோது, மேற்படி கௌரி மகாராஜாவையும், அவர்தம் குழந்தைகளையும் கானாடுகாத் தான் பெரிய கண்மாயில் இருந்த சித்தகத்தி மரங்களில் பரண் அமைத்து மறைவாக தங்க வைத்து மேற்படி மன்னர் குடும்பத்தை கானாடுகாத்தான் நாட்டார் சொந்த பொறுப்பில் பாதுகாத்ததால் நன்றி கடனாக நாட்டார்களுக்கு மேற்படி மன்னரால் மானியமாக நிலங்கள் பட்டயம் மூலம் வழங்கப்பட்ட சம்பவங்களும் உண்டு.

மேலும் கானாடுகாத்தான் நாட்டார்களை பொறுத்தவரை இறை வழிபாட்டில் நாட்டம் உடையவர்கள் என்பதால் நமது சமுதாய பொதுவில் பழனியில் அமைக்கப்பட்டுள்ள ஸ்ரீ சண்முக சேவா நாட்டார் அறக்கட்டளை திருமண்டப திருப்பணிக்கும், ராமேஸ்வரம் பாலைய நாட்டார் விடுதி மண்டப திருப்பணிக்கும் பெரும் நிதி உதவி வழங்கி முன்னிலை வகிக்கின்றனர். கொத்தரி **ஸ்ரீ சோலைவளர் ஐயனார் என்ற ஸ்ரீ சோலையாண்டவருக்கு** உற்சவ காலங் களில் உபயோகப்படும் வகையில் பெரிய வெள்ளி ரிஷப வாகனத்தை எங்கள் ஊரைச் சேர்ந்த ஆடுமேக்கி வீட்டு அமரர் **ஆ. விளத்தப்பன் அம்பலம்** குடும்பத்தார் நன்கொடையாக செய்து கொடுத்துள்ள பெருமை மிக்க பூமியாகும். இதுபோலவே கல்விப் பணிகளிலும் கானாடுகாத்தான் நாட்டார்கள் முக்கிய பங்கு வகிக்கும் வகையில் "பாலைய நாட்டார் கல்வி அறக்கட்டளை"க்கு நன்கொடை வழங்கிய புரவலர்களில் முன்னிலை வகிப்பது எங்கள் கானாடுகாத்தானை சொந்த ஊராக கொண்ட நன்கொடையாளர்களேயாவர். செல்வச் சிறப்பிலும், கல்விச் சிறப்பிலும் சிறந்து விளங்குவது எங்கள் கானாடு காத்தான் நாட்டார் பெருமக்களாவர். அந்த வகையில் எங்கள் கானாடுகாத்தானில் தற்போதைய கணக்கெடுப்பின்படி படித்த பட்டதாரி ஆண் பெண் விபரங்களை இத்துடன் பார்வைக்கு சமர்ப்பிக்கிறோம். ஆண்கள் பெண்கள் மொத்த எண்ணிக்கை

1. டிப்ளமோ (Diploma) ஆண்கள் 55, பெண்கள் 11, மொத்தம் 66
2. இளங்கலை பட்டம் (B.A., B.Sc., B.B.A.,) ஆண்கள் 30, பெண்கள் 43, மொத்தம் 73
3. முதுகலைப்பட்டம் (M.A., M.Sc., M.B.A.) ஆண்கள் 13, பெண்கள் 17, மொத்தம் 30
4. இஞ்சினியரிங் இளங்கலை பொறியியல் பட்டதாரிகள் (B.E., B.Tech) ஆண்கள் 29, பெண்கள் 4, மொத்தம் 33.
5. முதுகலை பொறியியல் பட்டதாரிகள் (M.E., M.Tech) ஆண்கள் 5, மொத்தம் 5.
6. முனைவர்-டாக்டர் Dr.(Ph.D) PR. ராமநாதன் ஆண் 1 - மொத்தம் - 1

மொத்தம் ஆண்கள் 133 பெண்கள் 75 மொத்தம் 208

தொகுப்பு

**RM. பெருமாள்** M.A., M.Ed.,

**C. துரைசிங்கம்** B.A.

**VE. அருணாச்சலம்**

# நேமத்தான்பட்டி

இவ்வூர் காரைக்குடி-திருச்சி பேருந்து வழித்தடத்தில் அமைந்துள்ளதால் போக்குவரத்து வசதிமிக்கதாக உள்ளது. நான்குபுறமும் ஏரிகள் உள்ளன. நேமத்தான்பட்டி, காயாம்பட்டி, தேத்தாம் பட்டி, காரிபட்டி, வடகுடிப்பட்டி, அரண்மனைப்பட்டி, ஆதனூர், நைனாபட்டி, ஆகிய பல ஊர்களுக்குத் தாய்க்கிராமமாக உள்ளது. இவ்வூரைச் சுற்றியுள்ள ஊர்களில் பயிரிடப்படும் காய்கறிகள் தினமும் காலையில் விற்பனைக்கு வருவதால், தினமும் பச்சைக் காய்கறிகள் கிடைக்கின்றது. இவ்வூரில் குடிப்பதற்கென இரு ஊருணிகளும், குளிப்பதற்கென மூன்று குளங்களும் உள்ளன. ஒன்று முதல் எட்டாம் வகுப்பு வரை கல்வி பயில "திருநாவுக்கரசு வித்தியாசாலை" என்ற பள்ளி சிறப்பாக செயல்படுகிறது.

இவ்வூரில் முன்நின்றான் கரை, நரியன்கரை, கதவாடிகரை, காயாம்பட்டி யான்கரை-என்ற நான்கு கரைகள் நிர்வாகம் செய்துவருகிறது. முன்நின்றான் கரையினர் அருள்மிகு பொன்னடிச்செல்வி அம்மனைக் குலதெய்வமாக வழிபடு கின்றனர். நரியன்கரையினர் அருள்மிகு ஸ்ரீ சோலைவளர்த்த ஐயனாரை (சோலையாண்டவரை)க் குலதெய்வமாகப் போற்றி வழிபடுகின்றனர். கதவாடி கரையினர் அருள்மிகு சந்நாசித் தெய்வத்தையும், காயாம்பட்டியான் கரையினர் அருள்மிகு ஸ்ரீ முனீஸ்வரனை யும் குலதெய்வமாக வழிபடுகின்றனர்.

நாட்டார்களின் அமைப்பில் ஒரு அம்பலகாரரும் ஒரு சேர்வைகாரரும் உண்டு. ஊர் நிர்வாகத்திற்கென ஒவ்வொரு கரையிலிருந்தும் ஒருவர் "டிரஸ்டியாக" ஓராண்டு காலத்திற்கு அந்தந்தக் கரையினரால் நியமிக்கப்படுவர். ஒவ்வொரு ஆண்டும் தை மாதம் 30ம் தேதி மேலே கண்ட கரை வரிசைப்படி டிரஸ்டி மாற்றி நியமனம் செய்யப்படுவர். ஒவ்வொரு ஆண்டும் "ஊர்க்கணக்கு ஒப்படைக்கும் கூட்டத்தில்" புள்ளிப்படி கூடி, எல்லோர் முன்னிலையிலும் முந்தைய ஆண்டுக் கணக்கை வாசித்து, சரிபார்த்து, ஒப்புதல் அளித்தபின், புதிய டிரஸ்டியிடம் கணக்கு ஒப்படைக்கப் படுகிறது.

இவ்வூர் பொதுத் தெய்வம் அருள்மிகு பொன்னழகியதேவி, ஊருக்கு கிழக்கே, ஏரிக்கரையில் வடக்கு நோக்கி இத்தெய்வம் எழுந்தருளியிருப்பது சிறப்பு. சித்திரை மாதம் சேங்கை கரை பூஜை முடித்து, இரண்டாவது திங்கள் காப்புக்கட்டி மறு செவ்வாய் புதன் முடிய 10 நாட்கள் திருவிழா சிறப்பாக ஆண்டுதோறும் நடைபெற்று வருகிறது. இத்திருவிழாவினை நாட்டாரும் நகரத்தாரும் இணைந்து நடத்தி வருவது இவ்வூரின் சிறப்பு. 11ம் நாள் நிகழ்ச்சியினை இவ்வூர் இளைஞர்களின் நற்பணி மன்றம் சிறப்பாக நடத்தி வருகிறது. உற்சவ காலத்தில் ஒவ்வொரு நாளும் காலை இரவு என இருமுறை சுவாமி பல்வேறு அலங்காரத்துடன் திருவீதி உலா வருவது கண்கொள்ளாக் காட்சியாகும். மேலும் சுவாமி திருவீதி உலா வரும் வழித்தடம் ஓம்கார வடிவில் இயற்கையாகவே அமைந்திருப்பது இவ்வூரின் சிறப்பு எனலாம். ஓம்கார வடிவின் மகரத்தில் கார்கூத்தன் ஊருணியும், மகரத்தின் புள்ளியாக வள்ளல் KR. சடையப்ப செட்டியார் குடும்பத்தார் ஊருக்கென உவந்து கட்டித்தந்துள்ள கலைக்கூடம் அமைந்து சிறப்பிக்கின்றனது. உற்சவ காலத்தில் நாட்டார் நகரத்தார் ஆகிய இரு சமூகத்தாருக்கு மட்டும் பரிவட்டம் மரியாதை உண்டு. வேறு யாருக்கும் பரிவட்டம் கட்டுவது வழக்கத்திலில்லை.

சிவராத்திரிக்கு அருள்மிகு **சோலைவளர் ஐயனார் (எ) ஸ்ரீ சோலை ஆண்டவர்** ஆலயத்திற்கு நேமத்தான் பட்டியிலிருந்து சிறப்பான முறையில் காவடி எடுப்பது வழக்கம். இத்திருக் கோவில் உற்சவ காலங்களில் **பெரிய கருப்பர்** பவனிவர பயன்படுத்தப்பட்டு வரும், **வெள்ளிச் சுற்றுக் குதிரை வாகனத்தை** எங்கள் ஊரைச் சேர்ந்த **தர்ம தேவதை இல்ல** தெய்வத்திரு **தர.கா.சித ஆண்டியப்பன்** அம்பலம் குடும்பத்தாரால் 11-03-1937ல் உபயமாக செய்து வழங்கப்பட்டது என்பது எங்கள் ஊருக்கு ஆன்மீக பணியில் பெருமை சேர்க்கும் நிகழ்வுகளாகும்.

இவ்வூரில் ஆனி மாதத்தில் மழை வேண்டி தேவேந்திரன் பொங்கலும், ஆடி மாதத்தில் கருப்பர் கோவில் மற்றும் மடை நாச்சியார் பொங்கலும் வைத்து வழிபடுவது வழக்கமாக உள்ளது.

ஆனி மாதம் நடைபெறும் பெரிய கோவில் திருவிழாவில் தேர்த் திருநாளன்று அம்மன் தேரை இழுக்கும் உரிமை இவ்வூர்நாட்டார் பெற்றுள்ளனர். 10 நாளும் சுவாமியை தூக்குபவர்களுக்கு சாதம் கொடுக்கும் பொறுப்பை இவ்வூர் நாட்டாரும் ஏற்றுக்கொண்டுள்ளனர்.

மாசி மாதம் மகாசிவராத்திரியன்று இவ்வூரிலிருந்து காவடி எடுத்து கொத்தரி சோலையாண்டவர் கோவிலில் செலுத்து வது வழக்கமாக உள்ளது.

பங்குனி மாதம் மாரியம்மன் கோவில் திருவிழாவன்று முளைப்பாரி, மதுப்போட்டு, கரகம் எடுத்து வழிபடு கிறார்கள். இத்திருநாளன்று ஊருக்கு வடகிழக்கே உள்ள மிகப்பழமையான - காட்டில் அமைந்துள்ள ஆய்மார் ஆலயத்தில் சப்தகன்னிமார்களுக்கும் அடைக்கலம் காத்தவருக்கும் சந்தனக் காப்பு அலங்காரம் செய்து மக்கள் மாவிளக்கு ஏற்றி வழிபடுவது வழக்கமாக உள்ளது. பொதுவாக முனீஸ்வரன் ஆலயம் ஊரின் எல்லையில் காவல் தெய்வமாக அமைந்திருக்கும். ஆனால் இவ்வூரில் 'குழந்தை முனீஸ்வரர் ஆலயம்' ஊர் நடுவே ஆலமரமும், அரச மரமும் இணைந்து வளர்ந்துள்ள அதிசய தளத்தின் அடியில் அமைந்து அருள்பாலிப்பது எங்கும் காணமுடியாத அற்புதமாகும். ஆடி மாதம் கடைசி வெள்ளியன்று காப்புக்கட்டி விரதம் இருந்து பக்தர்கள் ஸ்ரீ பொன்னழகியதேவி அம்மனுக்கு பால்குடம் எடுப்பது வழக்கமாக உள்ளது. அன்று சிறப்பு அபிஷேக ஆராதனை களும் அன்னதானமும் நடைபெறுகிறது. மாதந்தோறும் பௌர்ணமி அன்று ஸ்ரீ பொன்னழகியதேவி அம்மன் கோவிலில் ஊர் மகளிர் ஒத்துழைப்பில் பௌர்ணமி பூஜை நடந்து வருவது சிறப்பு.

இவ்வூரில் தேவி பூப்பந்தாட்ட கழகம் என்ற அமைப்பு சிறப்பாக செயல்பட்டு வருகிறது. இக்கழகத்தினர் பொங்கல் தின விளையாட்டுப் போட்டிகள் நடத்தி மக்களை உற்சாகப்படுத்தி வருகிறார்கள். வேறு எந்த ஊரிலும் இல்லாத ஒரு பொங்கல் இவ்வூரில் வைக்கப்படுகிறது. அது ஊர்க்காவல் தெய்வங்களுக்காக இடப்படும் தெருப் பொங்கலாகும். அம்மை காலரா பிளேக் போன்ற கொடிய நோய்கள் ஊர்மக்களை தாக்காமல் காக்க, ஊர்க்காவல் தெய்வங் களின் கட்டளைப்படி பல்லாண்டு காலமாக இப்பொங்கல் இடப்பட்டு வருகிறது.

வேறு ஊர்களில் இல்லாத திருமுருகன் வழிபாடு இவ்வூரில் சிறப்பாக நடைபெறுகிறது. இவ்வூரில் எழுந்தருளியுள்ள வள்ளி தேவசேனா உடனுறை முருகப் பெருமானுக்கு பங்குனி உத்திரத்திருவிழா மிகச்சிறப்பாக நடைபெற்று வருகிறது. குன்றக்குடியில் நடப்பதுபோலவே இங்கு சுவாமிக்கு காப்புக்கட்டி காலை மாலை

இருவேளைகளிலும் சிறப்பு அபிஷேக ஆராதனைகளும் பிரசாத வினியோகமும் நடைபெறுகிறது. இதற்கான செலவினை பொதுமக்களே மனமுவந்து பகிர்ந்து கொள்கின்றனர். பங்குனி உத்திரத்தன்று காப்புக்கட்டி விரதமிருந்த பக்தகோடிகள் பால்குடம் எடுத்தல், காவடி எடுத்தல், அக்கினிக்காவடி, இளநீர் காவடி, வேல் குத்துதல், பூக்குழி இறக்குதல், போன்ற பல நிகழ்ச்சிகளில் பக்தி சிரத்தையுடன் ஈடுபட்டு வருகிறார்கள். தானத்தில் சிறந்தது அன்னதானம் என்பதற்கிணங்க பங்குனி உத்தரத்தன்று மதியம் 1000 பேருக்கு மேலாக வருகின்ற எல்லோருக்கும் அன்னதானம் அளிக்கப்படுகிறது.

இதற்குத் தேவையான பொருட்கள் மற்றும் உடலுழைப்பு அனைத்தையும் இவ்வூர் மக்கள் மனமுவந்து கொடுத்து வருவது சிறப்பு. முருகன் கோவில் வரவு செலவு கணக்கு நாட்டாரால் தனியாக பராமரிக்கப்பட்டு வருகிறது. இக் கணக்கினை அந்தந்த ஆண்டின் டிரஸ்டியே கவனித்து வருகிறார். பங்குனி உத்திரத்திருவிழா, கார்த்திகை சோமவாரம் வைகாசி விசாகம், ஐப்பசி சூரசம்காரம், திருக்கல்யாணம் போன்ற நிகழ்ச்சிகளும் சிறப்பாக நடைபெற்று வருகிறது. இக்கோவிலில் எளிய முறையில் திருமணங்களும் நடத்தி வைக்கப்படுகிறது என்பது மிக்க மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும்.

**கா.சோ. காசி அம்பலம்**
நடப்பு டிரஸ்டி

## பலவான்குடி

புத்திமான் பலவான் ஆவான் என்பது பழமொழி. ஆன்றோர்களும் சான்றோர்களும், அறிஞர்களும், ஞானிகளும் வாழ்ந்த, வாழ்கின்ற ஊர் பலவான்குடியாகும். இந்த ஊரில் பழங்காலத்தில, திருவாசக சபை நடந்துள்ளது. உ.வே. சா., பண்டிதமணி, கி.வா.ஜ., நாவலர் சோமசுந்தர பாரதியார் போன்ற அறிஞர் பெருமக்கள் இங்கு வருகை தந்து பேருரை ஆற்றி உள்ளனர். தமிழ் இலக்கண வகுப்பு, திருவாசக மடத்தில் நடந்துள்ளது. தமிழ் இலக்கண வகுப்பினை, சைவ சிந்தாந்த நூற்பதிப்புக் கழகத்தில் இருந்து வெளிவந்துள்ள நூல்கள் பலவற்றை இயற்றிய, உயர்திரு, சு. அ. இராமசாமிப்புலவர் அவர்கள் நடத்தி, மாபெரும் அறிஞர் பெருமக்கள் பலரை இங்கிருந்து உருவாக்கி உள்ளார்கள். இந்த ஊரில் உள்ள ஆன்மீகச் செல்வங்களில் முதன்மையானது, அருள்தரு செங்கமல நாயகி அம்மன் கோயில் ஆகும். வீரம் விளைக்கும் பூமியான பலவான்குடியின் குலதெய்வம் அருள்தரு செங்கமலநாயகி அம்மன் கோயிலாகும். இந்தக் கோயிலில் நடைபெறும் சித்திரைத்திருவிழா, மிகவும் புகழ் வாய்ந்ததாகும். நாட்டார், நகரத்தார் ஆகியோர் இணைந்து நடத்தும் மாபெரும் விழா இதுவாகும். இந்தப் பழம் பெரும் ஊரின் காவல் தெய்வங்களாக, அருள்நிறை ஊர்காவல சுவாமி, மதுரை வீரப்ப சுவாமி, அஞ்சாத பெருமாள் ஐயனார் சுவாமி, பெரிய கருப்பண்ண சுவாமி, சின்னக் கருப்பண்ண சுவாமி, முனீஸ்வர சுவாமி, ஆகியோர் விளங்கி வருகின்றனர். அருள்தரு குமாரகணபதி, மதுநதி விநாயகர், குமரவிநாயகர், மூர்க்க விநாயகர் ஆகியோரும் ஆதி விநாயகரும், அருள் தந்து காத்து நிற்கின்றனர். அருள்தரு காளியம்மனும் பரநாச்சி அம்மனும் ஊரின் எல்லையில் நின்று காத்து வருகின்றனர். அனைத்துக்கும்

மேலாக சிவ பெருமான் நின்று அருள் மழை பொழிந்து வருகிறார். ஊரின் நடுநாயகமாக நகரச்சிவன் கோயில் அமைந்து ஊருக்கு அழகு சேர்க்கிறது.

பலவான்குடி - செங்கனி ஊரில் எட்டுக்கரை நாட்டார்கள் மரியாதை விபரம்

1. சோலைவளர்த்தான் அம்பலம் கரை
   சே. லெ. சோலைமலை சேர்வை - தேர்பரி வட்டம்
   சோ.சித. சுப்பிரமணியன் சேர்வை - தேருக்கு மது எடுத்து வருதல்
2. சித. ராமசாமி அம்பலம் கரை
   சித. ராமசாமி அம்பலம் 2ம் மண்டகப்படி நாட்டார் பரிவட்டம்
3. தம்மேனி பெரியணன் அம்பலம் கரை
   த.ர.ம. சோமசுந்தரம் அம்பலம் கூத்தாடிக்கு துப்பட்டா போடுதல்
4. வீரதேவன் அம்பலம் கரை
   அழ. குமரப்பன் அம்பலம்
   ஸ்ரீ செங்கமல நாயகி அம்மன் கோயிலில் கிடாய் வெட்டுதல்
5. குப்பையன் அம்பலம் கரை
   கரு. பெரியணன் அம்பலம்
   கரைமேல் அழகர் ஐயனார் கோயிலில் மதுரைவீரப்ப சுவாமிக்கு கிடாய் வெட்டுதல் மற்றும் பரிவட்டம்
6. முருகப்பன் அம்பலம் கரை
   ராம. கருப்பையா அம்பலம் கரைமேல் அழகர் ஐயனார் கோயிலில் கொடி வனைதல் கொடி வெட்டுதல் மற்றும் பரிவட்டம்
7. கட்டையன் அம்பலம் கரை
   வெ.லெ. பெரியகருப்பன் அம்பலம் தேருக்கு முதல் அர்ச்சனை - பட்டு சாத்துதல்
8. ஆதப்பன் அம்பலம் கரை
   பழ. சாமிநாதன் அம்பலம்
   திருவிழாவிற்கு குதிரைகள் செய்வ தற்கு பிடிமண் கொடுத்தல்.

**பழ. பெரியய்யா சோலைமலை**
**முரு. பெரியசாமி**

## காரைக்குடி

தேனாறுபாயும் ஊர்களுள் காரைக்குடி முதன்மையானது. சிவகங்கை மாவட்டத்திலேயே பெரிய நகர். நாளும் பல்லாற்றாலும் வளர்ந்து வரும் இனிய நகரம். குடிநீர் பஞ்சமே அறியாத கோ நகர். அதனால் இங்கு வாழ்க்கை நடத்தவரும் எவரும் இந்த ஊரைவிட்டு மீண்டும் தங்கள் ஊர் செல்வதைத் தவிர்க்கின்றனர்.

**காரைக்குடி பெயர்க்காரணம் :** ஒரு காலத்தில் மூன்றரைப் பக்கங்களிலும் சூழ்ந்த மேட்டு நிலப்பகுதியின் இடையே ஒரு பள்ளத்தாக்காய், காரைச் செடிகளும், பாலை மரங்களும், நிறைந்த காடாக இருந்ததுதான் இவ்வூர். இவ்வழகிய நில அமைப்பைக் கண்டு இம்மண்ணின் மீது ஆசை கொண்டு காடு திருத்திக் கழனிகளும், ஊரையும் உண்டாக்கி யவர்கள், பாலைய நாட்டு வல்லம்பர் இனத்தவர். இவ்வினத்தவர் பூர்வீகமாக, வாழ்ந்தது பள்ளத்தூர், கொத்தரி, மணச்சை, வேலங்குடி, கோட்டையூர், வடகுடி, கண்டனூர், ஆகிய ஏழு ஊர்களாகும், ஊருக்குச் சிலராக இவ்வேழு ஊர்களிலிருந்து வந்தவர்கள்தான் இத்திருப்பணியைச் செய்தவர்கள். எல்லா ஊர்களும் பிரதிநிதியாய் உள்ளவர்கள் இங்கு குடியேறியதால்தான் காரைக்குடியில் வாழும் வல்லம்பர்களுக்கு மற்ற ஊர்களைப்போல ஊரார் என்றில்லாமல் "காரைக்குடி நாட்டார்" என்பது வழக்காயிற்று. ஊருக்குள் விழும் மழை நீர் கிழக்கிலிருந்து மேற்காகச் செல்வது இவ்வூரின் தனிச்சிறப்பு.

இவ்வாறு குடியேற்றம் ஏற்பட்டபின் கிராம தெய்வம் ஒன்று வேண்டும் என்ற பிரச்சினை எழுந்தது. பலவாறு வருந்திப் பாடுபட்டபின் இம்மக்களின், துயர் துடைத்தவர் இங்கு தங்கியிருந்த மகான் ஒருவர். இவரை எல்லோரும் "பெரியவர்" என்றே அழைத்தனர். அவர் கட்டளைப்படி நாட்டார் பெருமக்கள் ஒரு ஐம்பொன் விக்கிரகம் செய்வித்தனர். அவ்உருவத்தை பெரியவர் முறைப்படி பூஜையில் வைத்து காரை நகரின் ஊர் நடுவில் பிரதிஷ்டை செய்தார். அதுதான் இன்று காரைநகர் ஊர் நடுவில் கொலுவிருக்கும் அருள்மிகு கொப்புடையநாயகி அம்மன் திருக்கோயிலாகும்.

அன்னை தெய்வம் உயிர்கள் உய்யும் பொருட்டு அருவுருவத்திருமேனி தாங்கி அருள் பாலிக்கும் திருத்தலங்கள் சிவவற்றுள் காரைக்குடியும் ஒன்று. இங்கு மூல விக்ரகம் இல்லை. அக்கினி நட்சத்திரத்தில் விழா எடுக்க வேண்டும் என்ற பெரியவரின் உத்திரவுப்படி சித்திரை மாதம் கடைசிச்செவ்வாய் கிழமைக்கு முந்தைப் பன்னிரெண்டாவது நாளில் வரும் வெள்ளிக்கிழமையன்று பெரியவர் சமாதியில் தண்ணீர் வைத்து அதற்கடுத்த வெள்ளியன்று பெரியவருக்குப் பொங்கல் வைத்து அதற்கு அடுத்து வரும் செவ்வாய்கிழமை அதாவது சித்திரை மாதம் கடைசிச் செவ்வாய்க்கிழமை காப்புக்கட்டபெறும். எட்டாம் திருநாளான செவ்வாய்க்கிழமை தேரோட்டம். தேர் ஊருக்கு வெளியே யுள்ள காட்டம்மன் கோவில் சென்று மறுநாள் புதன் கிழமை திரும்ப கோவில் வந்தடையும், அதன் மறுநாள் வியாழனன்று நடக்கும் தெப்பம் பூப்பல்லாக்குடன் திருவிழா இனிது நிறைவேறும்.

இந்திய "பெடரல் நீதிமன்றத்தின்" C.A. 7/48 தீர்ப்பின்படி ஏற்பட்ட சென்னை உயர்நீதிமன்றத்தினால் ஏற்படுத்தப்பட்ட ஸ்கீமின் படி காரைக்குடி நாட்டார் ஒருவரும், அரு.அ. குடும்பத்தைச் சேர்ந்த ஒருவரும், பொதுமக்களில் ஒருவருமாக மூன்று பேர் கொண்ட அறங்காவலர் குழவினால் இக்கோவில் நிர்வகிக்கப் படுகிறது. தமிழ் நாடு அறநிலையத் துறையினரால் நியமிக்கப்படும் செயல் அலுவலர் ஒருவரும் அவருக்கு உதவியாளர்களும் இருக்கிறார்கள்.

ஓங்கார வடிவத்துள் ளிருந்து
உலகீன்ற உமையவள் ஆதிசக்தி
பாங்காக மறைநான்கும் பரிமளித்துப்
பல்லுயிர்கள் வாழப் பராமரித்து
ஆங்காங்கே அறம் உயர நெறிவளர
அருள் சுரந்து ரட்சிக்கும் கொப்புடையாளை
நீங்காதே நெஞ்சத்தே வணங்கிடுவோர்
நிகரில்லாச் செல்வத்தைப் பெறுவர்தாமே!

*நம்மில் உயர்பொறுப்பில் இருந்தவர்கள் :* காரைக்குடி, தெற்குத் தெரு திரு. இராம. *லெட்சுமணன் அம்பலம்* 1947-1949 ஆண்டுகளில் காரைக்குடி நகராட்சி துணைத்தலைவராகப் பொறுப்பு வகித்தார். தெற்குத் தெரு நகராட்சிப் பூங்கா இவரால் புதுப்பிக்கப்பட்டது. திரு. KR. *சுப்பையா அம்பலம்* : இவர் வல்லம்பர் சமுதாயத்தின் தலைவராக இருந்தார். 1954-1956 ஆண்டுகளில் காரைக்குடி நகராட்சித் தலைவராகப் பதவியேற்றார்.

திரு. AL. *சுப்பையா அம்பலம்* : இவர் வல்லம்பர் சமுதாயச் சங்கத்தின் துணைத்தலைவராக இருந்தார். 1957-59 ஆண்டுகளில் காரைக்குடி நகராட்சி துணைத்தலைவராகவும், தலைவர் பொறுப்பிலும் பணியாற்றியவர். மாவட்ட இந்திய சோவியத் கலாச்சாரக் கழகத்தின் தலைவராகவும், தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டி உறுப்பினராகவும், தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் நூற்றாண்டு விழா நினைவுச் சின்னங்கள் குழுவின் அமைப்பாளராகவும் பணியாற்றியுள்ளார்.

திரு. *ஆ. காசி அம்பலம்* : இவர் 1959-62ம் ஆண்டுகளில் காரைக்குடி நகராட்சி துணைத்தலைவராகவும், தலைவர் பொறுப்பிலும் பணியாற்றினார். தெய்வத்திரு. *சி. பெரி.சி.மெ. மணிராஜன் அம்பலம்* : இவர் ஒரு சிறந்த கர்நாடக இசை மேதை. சிங்கப்பூர், மலேசியா, சிலோன் ஆகிய நாடுகளுக்குச் சென்று கர்நாடக இசை நிகழ்ச்சி நடத்தி பெயர் பெற்றவர். குன்றக்குடி ஆஸ்தான வித்வானாக சில காலம் இருந்தவர். மேற்கண்ட இவரின் தங்கை "M. *கிளிமொழி*" அவர்கள் 1955-56ல் ஜில்லா போர்டின் முதல் பெண் மெம்பராக இருந்தவர். இவர் மூலம் காரைக்குடி அய்யனார் கோவில் அருகில் ஏழைக் குழந்தைகளும் கல்வி பெற வேண்டும். என்ற உயரிய நோக்கோடு "ஓர் ஆசிரியர்" (SINGLE TEACHER) பள்ளி நிறுவப்பட்டு அப்பள்ளி இன்னும் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

திரு. *A. பொசலான்* : இவர் காரைக்குடி கீழத்தெரு கெங்காடி வயி. அய்யாச்சாமி அம்பலம் மகன். இவர் ஒரு சிறந்த கால்பந்தாட்ட வீரர். அத்துடன் மற்ற விளையாட்டுகளிலும் சிறப்பானவர். வெளிநாடுகளில் நடந்த 50 முதல் 54 வயதுவரை உள்ளவர்களுக்கான டிரிபிள் ஜம்ப் போட்டியில் கலந்துகொண்டு வெண்கலம் முதல் தங்கப்பதக்கம் வரை வென்றவர். இதுபோல் 55வயது உள்ளோர்களுக்காக நடத்தப்படும் போட்டிகளிலும் கலந்து தங்கம், வெள்ளி, வெண்கலம் பரிசுபெற்றவர். விவரம் கீழே:

**50 வயது** : 1989ல் நேஷனல் சாம்பியன் அமெரிக்கா வேல்டு மீட் டிரிபிள் ஜம்ப் - நான்காம் இடம்
1990ல் மலேசியா ஏசியாட் டிரிபிள் ஜம்ப் -வெள்ளி பதக்கம், லாங்ஜம்ப்-வெண்கலப் பதக்கம்.
1994ல் இந்தோனேசியா ஏசியாட் டிரிபிள் ஜம்ப்-தங்கப்பதக்கம், லாங் ஜம்ப்-தங்கப் பதக்கம்
**55 வயது** : 1996ல் சியோல் ஏசியாட் டிரிபிள் ஜம்ப்-தங்கப் பதக்கம்
400 ஹர்டில்ஸ்-வெண்கலப் பதக்கம்
2000ல் இந்தியா ஏசியாட் டிரிபிள் ஜம்ப்-தங்கப் பதக்கம்
400 ஹர்டில்ஸ்-தங்கப் பதக்கம்
லாங் ஜம்ப், 200 மீட்டர் ஓட்டம்-வெண்கலப் பதக்கம்
**60 வயது** : 2004ல் தாய்லாந்து பேங்காக் ஏசியாட் டிரிபிள் ஜம்ப் - வெள்ளிப் பதக்கம்
4X400 ரிலே-வெள்ளிப் பதக்கம்
லாங்ஜம்ப் - வெண்கலப் பதக்கம், 300 மீட்டர் ஹர்டில்ஸ் - வெண்கலப்பதக்கம்
4X400 மீட்டர் ரிலே - வெண்கலப்பதக்கம்
இவர் மேலும் பல விளையாட்டுகளில் கலந்து கொண்டு சிறப்படைய எல்லாம் வல்ல இறைவனை வேண்டுவோம்

***சி.பெரி.சி.மெ. நடராஜன் அம்பலம்,***
தெற்குத் தெரு.

## கழனிவாசல்

நீர் வளமும், நிலவளமும் நிறைந்து காணப்படும் பகுதியைக் கழனி என்றழைப்போம். அப்பெயருக்கு மிகவும் பொருத்தமுடைய காரணப் பெயர்கொண்ட எங்கள் ஊர் கழனிவாசல். இதற்கு "திருவுடையார் பட்டி" என்ற சிறப்புப் பெயரும் உண்டு. எங்கள் வழிபாட்டுத் தெய்வம் அய்மொழி அம்மன். இதனது மூலஸ்தானம் கோணேரிக்கண்மாய்க் கரையின் மேற்குப் பகுதியில் அமைந்துள்ளது. அம்மனின் உற்சவ விக்கிரகம், சிவகெங்கை சமஸ்தானத்தால் நிர்வகிக்கப்படும் கோவிலூர் கொற்றவாளீஸ்வரர் கோவிலில் பாதுகாப்புக்காக கொடுத்து வைக்கப்பட்டுள்ளது. இந்த அம்மனுக்கு அன்றாடம் நைவேத்தியம்,

பூசைகள், நடத்தப்படுகின்றன. அதற்காகும் செலவை, சிவகெங்கை சமஸ்தானத்தால் மானியமாக விடப்பட்டுள்ள "சன்னதிச்செய்" என்றும் நிலத்திலிருந்து வரும் வருவாயைக் கொண்டு செய்யப்பட்டு வருகிறது. இந்நிலத்தை உழுது, பயிரிட்டு, பராமரித்து அதன்மூலம் கிடைக்கும் வருவாயை கழனிவாசல் நாட்டார் தேவஸ் தானத்தில் ஒப்படைத்து வருகிறார்கள்.

கோவிலூரில் ஆண்டுதோறும் திருநெல்லை அம்மனுக்கு திருவிழா நடைபெறுகிறது. அத்திருவிழாவில், முதல் நாளன்று கழனிவாசல் நாட்டார் அய்மொழி அம்மனுக்கு முதன் முதலில் காப்புக் கட்டி விழாக் கொண்டாடுவார்கள். அதன் மறுநாள் தான், திருநெல்லை அம்மனுக்குக் காப்பு கட்டி திருவிழா நடைபெறும். அந்த திருநெல்லை அம்மன் திருவிழாவின் மூன்றாவது மண்டகப்படியை பாலைய நாட்டார் நடத்துகிறார்கள். கோவிலின் ஊரணியின் கீழவீதியில் பாலைய நாட்டாரின் எழில்மிகு ம்ண்டபம் ஒன்றும் இருக்கிறது.

ஆண்டுதோறும் கழனிவாசல் நாட்டார் அய்மொழி அம்மனை கழனிவாசலுக்குக் கொண்டுவந்து திருவிழா நடத்துவார்கள். அத்திருவிழா நிறைவுறும் நாளில், முத்துப்பட்டணத்திலுள்ள நகரத்தார், கழனிவாசல் நாட்டாரிடம் அம்மனுக்காக பாதகாணிக்கை செலுத்தி, அம்மனைப் பெற்றுச் சென்று முத்துப் பட்டணத்தில் முக்கிய விதிகளில் உலாவரச் செய்து பின்னர் உற்சவ விக்கிரகத்தை கழனிவாசல் நாட்டார் வசம் திரும்ப ஒப்படைப்பார்கள். இறுதியாக, கழனிவாசல் நாட்டார் அம்மனின் உற்சவ விக்கிரகத்தை கோவிலூர் கொற்றவாளீஸ்வரர் கோவிலில் கொண்டு சேர்ப்பார்கள். இவ்வாறாக கோயில் தொடர்புள்ள நிகழ்ச்சிகளை திறம்பட ஏற்று நடத்துவதற்காக கழனிவாசல் வயலில் எட்டுக்கரை வல்லம்பர்களுக்கு "அம்பல மானிபங்கள்" அல்லது "உம்பளங்கள்" என்ற பெயரில் நிலங்களை சிவகெங்கை சமஸ்தானத்தார் வழங்கியுள்ளனர்.

இங்கு நடைபெறும் திருவிழாக் களில், அரண்மனை, நாட்டார், நகரத்தார், ஊரார் என்ற வரிசைப்படி மரியாதைகள் வழங்கப்படுகின்றன. இவற்றில் நாட்டார் என்ற மரியாதை பாலையநாட்டுக்கு உரியதாகும். இதனைப் பெற்றுக்கொள்ள பாலைய நாட்டார் அண்மையிலுள்ள கழனிவாசல் நாட்டாரை நியமித்துள்ளனர். ஊரார் என்ற மரியாதை கழனிவாசல் வல்லம்பர்களாகிய கழனிவாசல் நாட்டா ருக்கு உரியது. அம்மரியாதை கழனிவாசல் நாட்டாருக்கு வழங்கப்பட்டு வருகிறது.

இங்கு அடைக்கலம் காத்த அய்யனார் என்ற கிராமக்காவல் தெய்வமும் உண்டு. இதனது மூலஸ்தானம் கோனேரிக்கண்மாய் கரையிலுள்ள கலுங்குக்கரை அய்யனார் ஆகும்.

பாலையநாட்டின் எல்லா ஊர் களிலும் வல்லம்பர்கள் சமுதாயக் கூட்டம் கூடுவதற்காக பிள்ளையார் கூடங்கள் அமைத்துள்ளனர். கழனிவாசலில் வல்லம் பர்கள் அமைந்துள்ள பிள்ளையார் கூடம் மிகவும் பழைமையானது. வல்லம்பர் சமூகத்தினரால் அப் பிள்ளையார் கூடம் மராமத்துப் பார்த்து, புதுப்பிக்கப்பட்டது. அப்பெரும் பணிக்கு, பொருளுதவி மற்றும் பல்லாற்றானும் உறுதுணையாக இருந்த வெ. பொ. சுப்பையா அம்பலம் அவர்கள் மகனார் திரு. சுப. தமிழ்மணி அவர்களின் அரியபணி மிகவும் போற்றத்தக்கது. இவரைப் போன்ற வள்ளண்மைத் தன்மையுடைய பலர் நம் இனத்தவரில் தோன்றிட வேண்டுகிறோம்.

இங்கு நாட்டார் இளைஞர் சங்கம் கடந்த ஆண்டில் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. இதன் மூலம் நம் இளைஞர்கள் கல்வி, வேலை வாய்ப்பு, தொழில் முதலான துறைகளில் மேம்பாடு அடைய முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன.

# சுட்டி நெல்லிபட்டி

இந்தக் கிராமத்தில் நெல்லியான் என்பவர் புகழோடும் சுட்டித்தனம் மிக்கவராகவும் வசித்து வந்தாராம் ஆகையால் இந்த ஊர்க்கு சுட்டி நெல்லி பட்டி எனப் பெயர் ஏற்பட்டதாம்.

இங்கு வசித்துவரும் நம் சமுதாயத்தில் ஒரு பிரிவினர் கண்டனூரி லிருந்து சுட்டி நெல்லி பட்டிக்குக் குடியேறினர். இவர்கள் கண்டனூர் செல்லாயி அம்மன் கோவிலிலுள்ள பதினெட்டாம்படி கருப்பரை வணங்கு பவர்கள். சுட்டி நெல்லி பட்டிக்கு குடியேறிய பிறகு அங்கு ஒரு சிறிய கருப்பர் கோவில் கட்டி கருப்பரையும், அங்குள்ள பட்டமரத்து முனீஸ்வரரையும் குல தெய்வமாக வணங்கி வருகின்றனர். மற்றொரு பிரிவினர் காரைக்குடியிலிருந்து சுட்டி நெல்லிபட்டிக்குக் குடியேறினார்கள். அவர்கள் தக்கான் கரையில் உள்ள ஸ்ரீ ஊமைக்குல வட அய்யனாரையும் கோட்டையூரிலுள்ள கொன்னக் கருப்ப ரையும் குலதெய்வமாக வணங்கி வருகின்றனர்.

இன்றைய காலத்தில் வசிப்பதற்கு வசதியாக உள்ள கண்டனூரிலிருந்தும், காரைக்குடியிலிருந்தும், வசதி பற்றாக் குறையாக உள்ள இந்த கிராமத்திற்கு ஏன் வந்தார்கள் என்ற கேள்வி இன்றைய சமுதாயத்தினரிடம் எழுந்துள்ளது. அந்தக் காலத்தில் நம் குலத்தொழிலாகிய உழவுத்தொழிலுக்கு ஏற்ற ஊராக சுட்டிநெல்லிபட்டி இருந்ததால் கண்டனூரி லிருந்தும், காரைக்குடியிலிருந்தும் இங்கு வந்து சேர்ந்தனர். கண்டனூரிலிருந்து வந்தவர்களை சோடியான் கரை என்றும், காரைக்குடியிலிருந்து வந்தவர்களை அடியக்கலங்கரை என்றும் அழைப்பது வழக்கம். இந்த இரு பிரிவினரும் ஒருவர்க்கு ஒருவர் பெண் எடுக்கவும், பெண் கொடுக்கவும் சம்மந்தி என்கின்ற முறையில் வாழ்ந்து வருகின்றனர்.

***இந்த ஊரின் முக்கிய சிறப்பு*** : இந்த ஊரின் மேற்கில் முனீஸ்வரர் ஆலயம் உள்ளது. மிகவும் வரதையான தெய்வம். ஆபத்திலிருந்து ஊரைக்காக்கும் தெய்வம். அந்தக் காலத்தில் காரைக்குடியிலிருந்து அடியக்கலங்கரை வகையரா சுட்டி நெல்லிபட்டிக்கு வருவதற்கு முன்பு பஞ்சம் ஏற்பட்டு சுட்டி நெல்லிபட்டியில் பிழைப்புக்கு வழியில்லாததால் வேறு இடத்திற்குச் சென்று பிழைக்கலாம் என்ற எண்ணத்தோடு சோடியான்கரையை சேர்ந்தவர்கள் சுட்டிநெல்லிபட்டியை விட்டு, வெளியேறி முனீஸ்வரர் ஆலயத்தின் வழியாக செல்லும்போது ஆலயத்திலிருந்து ஒரு ஆண் பேசுவதைப்போல் சப்தம் கேட்டதாம். அதாவது "நீங்கள் இந்த ஊரை விட்டு வெளியே போக வேண்டாம். இங்கேயே இருங்கள் உங்களை நான் காப்பாற்றுகிறேன்" என்று கூறியதாம். உடனே சோடியான் கரையைச் சேர்ந்தவர் கள் சுட்டிநெல்லிபட்டிக்கே திரும்பி வந்து வசித்தனராம். முனீஸ்வர் கூறியபடி விவசாய வேலை வாய்ப்பு, பொன், பொருள், உதவி கிடைத்ததாம், அப்பொழுதுதான் சாமிக்கு சிறிதளவு தங்க நகை செய்து வைத்திருக்கின்றார்கள். இந்த விபரங்கள் முன்னோர்கள் வாழையடி வாழையாக சொல்லிய விபரங்கள்

நான்கு கிராமங்களுக்குச் சொந்த மான சாயக்கண்மாய் என்ற ஏரி உள்ளது. சுட்டிநெல்லிபட்டி விவசாயத்திற்கும் இந்த

ஏரியிலிருந்துதான் தண்ணீர் பாய்ச்ச வேண்டும். இந்த ஏரிக்கரையின் அருகில் உள்ளது சுட்டிநெல்லிபட்டி கிராமம். இந்த வட்டாரத்தில் உள்ள பெரிய ஏரிகளில் இதுவும் ஒன்று. 1955ம் ஆண்டில் ஏற்பட்ட பெரிய புயலில் அதிக வெள்ளம் ஏற்பட்டு ஏரிக்கரை உடையக்கூடிய நிலமை ஏற்பட்டது. அப்படி கரை உடைந்தால் ஊரையே வெள்ளம் அடித்துச் சென்று விடும். ஊர் மக்கள் கண்ணீர் விடும் நிலமை ஏற்பட்டது. அந்தச் சமயத்தில் சோடியான் கரையைச் சேர்ந்த சுப்பையா அம்பலம் என்ற சாமியாடி மீது அருள் வந்து ஏரிக்குச் சென்றது. ஏரி கலுங்கில் உள்ள குத்துக் கல்லுக்கு மேல் தண்ணீர் வெள்ளமாய்ச் சென்றதால் ஊர் மக்கள் யாரும் குத்துக்கல் மீது கால் வைத்து கலங்கின் மறு பக்கம் செல்ல இயலவில்லை. சாமியாடி மட்டும் முனீஸ்வரர் அருளோடு கலுங்கின் மறு பக்கம் சென்று சப்தம் போட்டு காலால் ஒரு கோடு கிழித்துவிட்டு மறுபடியும் ஊர் மக்கள் நிற்கும் பக்கம் வந்துவிட்டார். சிறிது நேரத்தில் முனீஸ்வரர் கோடு கிழித்த இடத்தில் ஏரிக்கரை உடைந்து ஊர்க்கு எந்த பாதிப்பும் இல்லாத நிலையில் தண்ணீர் வெளியேறியது. அதன் பிறகுதான் ஊர் மக்கள் "உயிர் பிழைத்தோம், முனீஸ்வரர் நம்மைக் காப்பாற்றினார்". என்ற மன நிம்மதியோடு இருந்தனர். இப்படி ஆபத்தான நிலையில் ஊரைக் காப்பாற்றிய முனீஸ்வரர் உள்ள தெய்வம் சுட்டிநெல்லிபட்டி இங்கு வருடா வருடம் மாரியம்மன் திருவிழா நடத்துவது வழக்கம்.

***பெ.க. முத்துச்சாமி அம்பலம்.***

## முள்ளாம்பட்டி

செய்யோடு காற்று விளையாடி வரும் சீரான கிராமம். இரண்டு போக விவசாயம் நிறைந்த ஊர் என்று எல்லோராலும் வர்ணிக்கப்படும் கிராமம். இந்த ஊரை சுமார் முந்நூறு ஆண்டு களாகக் கட்டிக் காத்துவரும் காவல் தெய்வம் கூடைய கருப்பர். காட்டுப் பத்தைக்குள் பால மரத்தடியில் கூடப் பிட்டுப் பேசக்கூடிய தெய்வமாக ஸ்ரீ விடத் துடைய ஐயனார், பொற்கொடியான், பூரணத்தாள், வெள்ளி விநாயகர், ஸ்ரீ மடையடிக் கருப்பர், ஸ்ரீ கொண்டி கருப்பர், ஸ்ரீ முத்துமாரி, தாமணி செல்லையா, பனிரண்டு அய்யா முதலான தெய்வங்கள் இங்கு குடிகொண்டு அருள்பாலிக்கின்றன. பெரிய கோட்டை நாட்டார்கள் நடத்தும் பனிரண்டு அய்யனார் திருவிழா நிகழ்ச்சியின்போது, பாலைய நாட்டார்க்கு என்று தளிகையும் காளாஞ்சி மரியாதையும் வழங்கப் பெறுகிறது.

முள்ளாம்பட்டியில் நடக்கும் எல்லாக் கோவில் நிகழ்ச்சிகளிலும் பாலைய நாட்டார்க்குக் காளாஞ்சி வழங்கப்பெறுவது முக்கிய அம்சமாகும். முப்பெரும் தேவியரும் போற்றுகின்ற முள்ளாம்பட்டி, மூவேந்தர் வாழ்ந்த வரலாறாய், முக்கனியும் கனிந்து வரும் வரலாறாம். நிழல் தரும் ஆலமரம் ஆழ்ந்த சிந்தனையைத் தூண்டும்.

கரைகொண்ட கண்மாயில் நிறை கொண்ட நீர் நித்தமும் பாய்ந்து நிலம் கொழிக்கும். பங்குனி மாதம் (முளைப்) பாரி போடும் திருவிழா நடைபெறும்.

**நா. அரு. முத்து அம்பலம் &**
**ம.செ. சுப்பிரமணியன் அம்பலம்**

# உலுப்பகுடி

சுமார் 150 அல்லது 200 வருடங்களுக்கு முன்பாக எம் மூதாதையர்கள் கண்டனூரிலிருந்து கிளம்பிவந்து, எங்களது கிராமத்தைச் சார்ந்த "காரக்குண்டு" என்ற ஊரில் குடிகொண்டிருந்தனர். இதை அறிந்த ஸ்ரீ பம்பரபொம்மி நாயக்கர் என்று அழைக்கப்படுபவரும், எங்கள் ஊருக்கு மிகவும் முக்கிய தெய்வ சக்தியாக விளங்குபவருமான ஸ்ரீ நாயக்கர் "காரக்குண்டு" சென்று அங்கிருந்த எமது மூதாதையர்களை அழைத்து வந்து, குடியேற்றி வைத்து, 'கரந்தமலை அசைந்தாலும் கண்டனூரான் குடி அசையக்கூடாது' என்று சொல்லி, "பாலைக்கம்பு" ஊன்றி, குடி அமைத்து தந்ததாகவும் கூறுகின்றனர். அதன் பிறகு பக்கத்து ஊர்களிலிருந்து மூக்கன் வீட்டு வகையறா பேர்களையும் கழனியார் வீட்டு, மாயாண்டி, வீட்டு வகையறா பேர்களையும் கூட்டி வந்து, இந்த உலுப்பகுடியை உண்டாக்கியதாக வரலாறு. அதன்பின் ஒவ்வொருத்தராக வந்து இந்த ஊர் உண்டாகியதாகக் கூறுகின்றனர்.

உலுப்பகுடி ஊரார் இரண்டு பகுதியாக செயல்படுகின்றனர். ஒரு பகுதி வடக்கு ஊரார் என்றும் இன்னொரு பகுதி "தெற்கு ஊரார்" என்றும் அழைக்கப் படுகின்றனர். வடக்கு ஊரார்களே இவ்வூர் திருவிழா போன்ற விசேஷங்களுக்குப் பொறுப்பு வகிக்கின்றனர். வடக்கு ஊருக்கு முதல் காரணக்காரராக 'கண்டனூரார் வீட்டுக்காரரில்' ஒருத்தரும் இரண்டாவது காரணக்காரராக 'மூக்கன் வீட்டுக்காரர் களின்' பங்காளிகளில் ஒருவரும் மூன்றாவது காரணக்காரராக கழனியார் வீட்டுக்காரர்களின் பங்காளிகளில் ஒருத்தரும் பொறுப்பு வகிக்கின்றனர். மேற்படியார்களின் தலைமையிலேயே ஊரின் முக்கிய காரியங்கள் எல்லாம் நடைபெறுகின்றன.

**திருவிழாக்கள் :** வருடா வருடம் ஸ்ரீ முத்தாலம்மன் திருவிழாவும் மூன்று வருடங்களுக்கு ஒருமுறை ஸ்ரீ வல்லடிய காரர், ஸ்ரீ கரந்தமலை, ஸ்ரீ கன்னிமார், ஸ்ரீ கரகக்காரி, ஸ்ரீ நாகர், ஸ்ரீ விநாயகர், முன்னோடி ஸ்ரீ கருப்பருக்கும் புரவி எடுப்பு நடைபெறுகிறது.

ஸ்ரீ வல்லடியார், அரண்மனைக் குதிரை மற்றும் நேர்த்திகடன்காரர்களின் விருப்பத்திற் கேற்ப குதிரைகள், மாடுகள், நாய்கள் முதலியவைகள் வேளார்களால் செய்யப் பட்டு, சூளை வைக்கப்பட்டு, வர்ணம் வைத்து, ஸ்ரீ கரந்தமலையிலுள்ள கோயில்களுக்கு ஊர் மக்களால் "கா" கட்டிகொண்டு செல்லப்படுவது ஒரு கண் கொள்ளா காட்சியாம்.

கோவில்களுக்கு சுவாமி, புரவிகள் முதலானவை கொண்டு செல்லப் பட்டவுடன் அர்ச்சனை முதலான வழிபாடுகள் செய்து, பாலைய நாடு முதல் பக்கத்திலுள்ள ஊர்களெல்லாம் வழக்கப் படி கூவி, அழைத்து, விபூதி பிரசாதம் வழங்கியபின் வடக்கு ஊர் காரணக் காரர்களையும் கூவி அழைத்து விபூதி பிரசாதம் வழங்குவது இன்றும் வழக்கத்திலிருந்து வருகிறது.

எந்தவொரு முக்கிய காரியம் செய்யுமுன் ஊரார் முக்கியமாக காரணக் காரர்கள் கூடி ஸ்ரீ பம்பர பொம்மிநாயக்கர் கோயில் வீட்டில் அர்ச்சனை முதலான வழபாடு நடத்திய பின்தான் காரியங்களில் ஈடுபடுவது இன்னும் வழக்கத்தில் இருந்து வருகிறது.

"தைப்பொங்கல்" விழா மிகச் சிறப்பாக கொண்டாடப்படுகிறது. மாட்டுப்

பொங்கலன்று காலையில் தொழுவங் களில் அடைத்து, வைப்பர். மாடு மேய்ப்பவர்கள் விரதமிருந்து, ஊரணியில் நீராடி, தீர்த்தம் கொண்டு வருவர். பெண்கள், மாடுகள் அடைக்கப்பட்டுள்ள தொழுவங்களின் முன் சாணத்தால் மெழுகி, கோலங்கள் போட்டு, புதுப்பானைகள் வைத்து, "மாட்டுப் பொங்கல்" வைப்பார்கள்.

பிற்பகல் கிராம தெய்வங்களுக்கு "கனி" வைத்தல் நிகழ்ச்சி நடைபெறும். அதன்பின் ஸ்ரீ நாயக்கர் மண்டபம் ஊரார் சென்று, "புன்னப்பட்டி நாயக்கர், கிராம அதிகாரி", ஆகியோருக்கு மரியாதை செய்வர். பிறகு தெற்கு ஊர் சென்று ஸ்ரீ வேட்டகார சுவாமி கோயில் காளையை வேட்டி, துண்டு முதலானவை கட்டி அழைத்து வருவர். வடக்கு மந்தை வந்து, ஸ்ரீ வேட்டகார சுவாமி காளைக்கு முதல் காரணக்காரர் வேட்டி கட்டுவார். ஸ்ரீ வல்லடியார், ஸ்ரீ காக்கரங்கருப்ப கோயில் காளைக்கு வேட்டிகள் கட்டுவர். நேர்த்தி கடன் வேட்டி, துண்டுகளும் ஏராளமாக கட்டி, மஞ்சி விரட்டு நடைபெறும்.

வெளியூரிலிருந்து வந்துள்ள முளையூர், காரக்குண்டு, சேர்வீடு, வீரப்பநாயக்கன்பட்டி முதலிய கோயில் காளைகளுக்கும் வேட்டி கொடுப்பர். அதன்பின் வெளியூர்களிலிருந்து வந்துள்ள சகல மாடுகளுக்கும் வேட்டி, துண்டு கொடுக்கப்பட்டு, எல்லா மாடுகளையும் வடக்கு மந்தை கொண்டு வந்து "மஞ்சி விரட்டு" நடைபெறும்.

இது முடிந்த பின் தெற்கு ஊர் சென்று அங்கு இதே மாதிரி தொழு மாடுகளை அவிழ்த்து, "மஞ்சி விரட்டு" நடைபெறும்.

அதன்பின் கன்னிப் பெண்கள் "கொப்பி சட்டி" எடுத்து, ஊரணி சென்று தொழிலாளிகளுக்கு (வண்ணார், நாவிதர், கொம்புக்காரர், கிடுமுட்டிக்காரர், தப்புக்காரர்) பொங்கல் படைப்பர். இரவு நாடகம் அதிவிமரிசையாக நடைபெறும்.

ஆடி மாதம் "ஆடிச்சிறப்பு" கனி வைத்தல், நடத்தி வந்திருப்போர்களுக் கெல்லாம் கனி பிரசாதம் வழங்கப்படும். புரட்டாசி, ஐப்பசி மாதங்களில் "மா" படைத்தல் நடைபெறும். அரிசி, தினை மாவுகளை, தேன், வெல்லப்பாகுகளால், பிசைந்து, சுவாமிக்கு படைத்து, பிரசாதம் அனைவருக்கும் வழங்குவர்.

ஸ்ரீ வேட்டகார சுவாமிகள் கிடாய் வெட்டு பூஜை நடைபெறும். ஊர் பொதுமக்களிடம் வசூலித்த எல்லா வகை அரிசிகளையும் சுமார் 6 அல்லது 7 மூடைகள், சமைத்து, உருண்டையாக உருட்டுவர். கிடாய் கறிகளையும், எல்லா கறிகளையும் சமைத்து, வைத்துக் கொள்வர். காலையில் வீட்டுக்கு ஒருத்தரை கோயிலுக்கு வரச் செய்து, வீட்டிலுள்ளோர். எண்ணிக்கைக்கு ஏற்ப சாதம், கறிகள், குழம்பு கொடுப்பர்,

இதுதவிர பெரிய கார்த்திகைக்கு "சொக்கப்பான்" கொளுத்தல் விநாயகர் சதுர்த்தி முதலான விழாக்களும் சிறப்பாக நடைபெறும்.

**அரசியல்**: உலுப்பகுடியை சேர்ந்த மாண்புமிகு. R. விஸ்வநாதன் அவர்கள் தமிழக போக்குவரத்துத் துறை, மற்றும் மின்துறை அமைச்சராகப் பொறுப்பு வகித்து சிறப்பாக செயல்படுகின்றார். திரு. R. ஜெயராஜ் அவர்கள் ஒன்றிய பெருந்தலைவராக இரண்டாவது முறையாக சிறப்பாக செயல்படுகின்றார். திரு. N.A.அழகப்பன் அவர்கள் பஞ்சாயத்து தலைவராக மூன்றாவது தடவையாக பொறுப்பு ஏற்று, சிறப்பாக செயல்படுகின்றார். இது தவிர ஒன்றிய கவுன்சிலர் R. சந்திரன் அவர்களும் பஞ்சாயத்து கவுன்சிலர்களாக திரு. A. ரகுபதி அவர்களும் திருமதி. கலாவதி அவர்களும் சிறப்பாக செயல்படு கின்றார்கள்.

**கல்வி** : PR. Group of Colleges என்ற பெயரில் Arts & Science கல்லூரியும் Teacher Training, B.Ed., Polytechnic ஆகியவையும் சிறப்பாக இயங்குகின்றன.

**பாலைய நாட்டுப் பதினாறு ஊர்களுக்குக் குலமுதற்தெய்வம்**
**அருள்மிகு பெரியநாயகியம்மன் கோயில்**
**திருக்குட நன்னீராட்டு விழா**
**பாலைய நாட்டார் அலுவலகக் கட்டடம்**
**பாலைய நாட்டார் டிரஸ்ட் வணிக வளாகம் ஆகிய**
**முத்திருப்பணிகளுக்குக் கோயில் குடிகள் வழங்கிய**
**நன்கொடைப் பட்டியல்**

## கோட்டையூர்

| | |
|---|---|
| **கோட்டையூர் நாட்டார் எட்டுக்கரை வல்லம்பர்கள்** | **ரூ. 1,16,116** |
| திரு. சி. சுப. சுப்பையா அம்பலம் குடும்பத்தார் | ரூ. 25,001 |
| திரு. வயி. பி. பொன்னம்பலம் அம்பலம் - பொன். பாஸ்கர் | ரூ. 25,000 |
| திரு. சா. கி. அ. சோமசுந்தரம் அம்பலம் | ரூ. 21,000 |
| திரு. சித. அரு. கயி. அருணாசலம் அம்பலம் | ரூ. 10,001 |
| திரு. சி. ராம. சித. அருணாசலம் (எ) அய்யாக்கண்ணு அம்பலம் | ரூ. 10,001 |
| திரு. ந. சுந்தரம், Ex. M.L.A., | ரூ. 10,001 |
| திரு. அழ. பெரி. சித. பெரி. முத்து அம்பலம் | ரூ. 6,001 |
| வயி. ராம. அரு. சுப்புராமன் அம்பலம் - மகாலட்சுமி | ரூ. 5,555 |
| திரு. ப. கா. கரு. லெ. கருப்பையா அம்பலம் | ரூ. 5,005 |
| திரு. சி. குள. சி. கருப்பையா அம்பலம் | ரூ. 5,001 |
| திரு. கரு. செல்வம் அம்பலம் | ரூ. 5,001 |
| திரு. வயி. ராம. கும. ராமசாமி அம்பலம் | ரூ. 5,001 |
| திரு. சி. குள. கரு. சோலைமலை அம்பலம் | ரூ. 5,001 |
| திரு. ப. மு. ராம. சுப. வைரவன் அம்பலம் | ரூ. 5,001 |
| திரு. பூ. அழ. பெரி. அழ. ராமநாதன் அம்பலம் | ரூ. 5,001 |
| திரு. கயி. அரு. அரு. கயி. ராமசாமி அம்பலம் | ரூ. 5,001 |
| திரு. பூ. அழ. பெரி. விசுவநாதன் அம்பலம் | ரூ. 5,001 |
| திரு. சோ. ராமகிருஷ்ணன் அம்பலம் | ரூ. 1,001 |
| | மொத்தம் ரூ. **2,74,690** |

## வேலங்குடி

| | |
|---|---|
| **வேலங்குடி நாட்டார்கள்** | **ரூ. 1,11,111** |
| திரு. வெ. கரு. கிருஷ்ணன் அம்பலம், KR. சோலைமுத்து & KR. கண்ணன் | ரூ. 1,65,007 |
| திரு. சி. ஆ. பெரி. சுப்பையா அம்பலம் | ரூ. 1,00,001 |
| (அடுத்த திருக்குடநீராட்டு விழாவிற்கான இசைவு (ரூ. 1,00,001) | |
| டாக்டர். கா. சேதுராமன், (கனடா) | ரூ. 1,00,001 |
| திரு. சோ. கரு. துரைராஜ் அம்பலம் | ரூ. 51,001 |
| திரு. சி. ஆ. சுப. பெரியணன் அம்பலம் | ரூ. 50,001 |
| திரு. பூ. கரு. கா. பெரியணன் அம்பலம் | ரூ. 25,001 |
| திரு. சி. ஆ. பெரி. சுப. துரைராஜ், EX. M.L.A., | ரூ. 25,000 |
| திரு. சித. ராஜேந்திரன் குடும்பத்தார் | ரூ. 19,000 |
| திரு. சித. சேகர் பிள்ளை | ரூ. 16,001 |
| திரு. சித. சந்திரன் பிள்ளை | ரூ. 16,000 |
| திரு. பூ. கரு. கா. சுப்பையா (எ) வடிவேலு அம்பலம் | ரூ. 15,001 |

| | | |
|---|---|---|
| திரு. ம. ஆ. சோலைமலை அம்பலம் | ரூ. | 15,001 |
| திரு. சி. ஆ. பெரி. கணபதி அம்பலம் | ரூ. | 10,001 |
| திரு. சி.வ. துரைராஜ் அம்பலம் | ரூ. | 10,001 |
| திரு. சி. ஆ. சுப. சொக்கலிங்கம் அம்பலம் | ரூ. | 10,001 |
| திரு. சி. ஆ. பெரி. சுப. குமார் அம்பலம் | ரூ. | 10,001 |
| திரு. சி. ஆ. பெரி. சுப. ஜெகதீஷ் அம்பலம் | ரூ. | 10,001 |
| திரு. சி. ஆ. பெரி. சுப. ராம. பாலசுப்பிரமணியன் | ரூ. | 10,001 |
| திரு. பெரி. அ. பெரியசாமி அம்பலம் | ரூ. | 5,252 |
| திருமதி. மேனகா பெரியசாமி | ரூ. | 5,251 |
| திரு. நெ. பொ. சந்திரன் அம்பலம் | ரூ. | 5,100 |
| திரு. பெ. ராமகிருஷ்ணன் பிள்ளை | ரூ. | 5,001 |
| திரு. ஆ. சித. பெரி. சிதம்பரம் அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. சி. ஆ. பெரி. வெ. கணபதி அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. லெ. சி. பெரி. சுப. மணியன் - இந்திரா | ரூ. | 5,001 |
| திரு. சி. ஆ. பெரி. வெ. திருநாவுக்கரசு அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. லெ. சி. பெரி. சுப. சோலைமலை அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. பெ. ராம. சித. சிங்கமுத்துப்பிள்ளை | ரூ. | 5,001 |
| திரு. ஆ. சித. கரு. பெரி. கருப்பையா அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. லெ. சி. பெரி. லெட்சுமணன் - விசாலாட்சி | ரூ. | 5,001 |
| திரு. லெ. கரு. பெரி. சொக்கலிங்கம் அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. பழ. சோ. கரு. சோலையன் அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. வயி. ராம. கணபதி அம்பலம் நினைவாக | ரூ. | 5,001 |
| திரு. அ. பெரி. சிதம்பரம் அம்பலம் - விசாலாட்சி | ரூ. | 5,001 |
| டாக்டர் துரை. கார்த்திகேயன் - சுதா | ரூ. | 5,001 |
| திரு. ஆர். சுப்பிரமணியன் (பெங்களூர்) | ரூ. | 2,001 |
| திரு. பழ. மு. வெ. சா. கருப்பையா அம்பலம் | ரூ. | 1,001 |
| திரு. வெ. க. சபாரெத்தினம் அம்பலம் | ரூ. | 1,001 |
| திரு. ந. சி. ஆ. கண. ராமகிருஷ்ணன் | ரூ. | 501 |
| திரு. அ.பெரி. ராமசாமி அம்பலம் | ரூ. | 501 |
| | மொத்தம் ரூ. | **8,48,754** |

## கண்டனூர்

| | | |
|---|---|---|
| **கண்டனூர் நாட்டார்கள்** | ரூ. | **10,001** |
| திரு. ராம. சின்னையா அம்பலம் | ரூ. | 25,000 |
| பேராசிரியர் டாக்டர் அய்க்கண் - வசந்தா | ரூ. | 10,125 |
| திரு. கு. சி. கு. நெ. சுப்பிமணியன் அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. இராம. கருப்பையா சேர்வை | ரூ. | 1,001 |
| திரு. வெள்ளையன் - ராஜாத்தி (பெங்களூர்) | ரூ. | 201 |
| | மொத்தம் ரூ. | **51,329** |

## பாலையூர்

| | | |
|---|---|---|
| **பாலையூர் நாட்டார்கள்** | ரூ. | **10,001** |
| திரு. கொ.ஆ.லெ. சோலைமலை அம்பலம் | ரூ. | 5,101 |
| திரு. ராம.வெ.சி.ராம. சோலைச்சி குடும்பத்தார் | ரூ. | 5,001 |
| திரு. அ.கா. ஆண்டியப்பன் அம்பலம் | ரூ. | 5,001 |

| | | |
|---|---|---|
| திரு. சா.ராம. வெ. நெல்லியான் அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. அண. காளீஸ்வரன் அம்பலம் | ரூ. | 5,001 |
| டாக்டர் ஆறு. நெல்லியான் அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. ஆ.மு. சுப்பையா அம்பலம் | ரூ. | 2,001 |
| திரு. வி. கண்ணன் (பெங்களூர்) | ரூ. | 1,001 |
| திரு. சித. சந்திரன் (பெங்களூர்) | ரூ. | 1,001 |
| திரு. சேது. குமரப்பன் | ரூ. | 1,001 |
| திரு. சித. அழகப்பன் (பெங்களூர்) | ரூ. | 501 |
| திரு. முத்தையா | ரூ. | 501 |
| | மொத்தம் ரூ. | **46,113** |

## கருவியப்பட்டி

| | | |
|---|---|---|
| **கருவியப்பட்டி நாட்டார்கள்** | ரூ. | **10,001** |
| திரு. கு.நெ. சேதுராமன் குடும்பத்தார் | ரூ. | 51,000 |
| திரு. பெரி. ராம. காளிமுத்து - பத்மாவதி | ரூ. | 10,001 |
| திரு. கு.சி.மு. கணேசன் அம்பலம் - பாலசுப்பிரமணியன் | ரூ. | 5001 |
| திரு. சி.கா. சொக்கலிங்கம் அம்பலம் | ரூ. | 5001 |
| திரு. அருணாசலம் அருணகிரி அம்பலம் | ரூ. | 5001 |
| | மொத்தம் ரூ. | **86,005** |

## வடகுடி

| | | |
|---|---|---|
| **வடகுடி நாட்டார்கள்** | ரூ. | **11,111** |
| திரு. செ.கு.சித.ஆறு. சுந்தரராஜ் | ரூ. | 25,001 |
| திரு. மா. முத்து.சுப்பிரமணியன் - சந்திரா | ரூ. | 5001 |
| திரு. வெ. மெ. சோலைமலை அம்பலம் | ரூ. | 5001 |
| திரு. நெ. சுப்புக்குமார் (பெங்களூர்) | ரூ. | 1001 |
| திரு. நெ. ரவிக்குமார் (பெங்களூர்) | ரூ. | 1001 |
| திரு. A. சுப்பிரமணியன் - மணிமேகலை (பெங்களூர்) | ரூ. | 501 |
| | மொத்தம் ரூ. | **48,617** |

## பள்ளத்தூர்

| | | |
|---|---|---|
| **பள்ளத்தூர் நாட்டார்கள்** | ரூ. | **25,000** |
| திரு. கோ.மு.ந.பி. சுப்பிரமணியன் சேர்வை | ரூ. | 25,001 |
| திரு. கோவை வாழ் பள்ளத்தூர் நாட்டார்கள் | ரூ. | 15,001 |
| திரு. ஆ.பெரி. முத்துராமலிங்கம் - வேல்முருகன் | ரூ. | 10,500 |
| திரு. ந.கரு. அருணாசலம் - நெல்லியான் | ரூ. | 10,001 |
| திரு. பூ.சி.பூ.வ. சொக்கலிங்கம் சேர்வை | ரூ. | 10,000 |
| திரு. கொ.ராம. சின்னச்சாமி - புவனேஸ்வரி | ரூ. | 5,555 |
| திரு. பா.ராம.ச. பழநியப்பன் சேர்வை | ரூ. | 5,101 |
| திரு. கோ.ந. சின்னையா சேர்வை | ரூ. | 5,101 |
| திரு. பெரி. அருணாசலம் - அருணாதேவி | ரூ. | 5,008 |
| திரு. மா.பெரி. சோ. சோலையப்பன் சேர்வை | ரூ. | 5,001 |
| திரு. கோ.பா.ராமகிருஷ்ணன் சேர்வை | ரூ. | 5,001 |
| திரு. கோ.சி. கணேசன் சேர்வை | ரூ. | 5,001 |

| | | |
|---|---|---|
| திரு. கோ.சி. வெள்ளைச்சாமி சேர்வை | ரூ. | 5,001 |
| திரு. கம. சுப. சி. ஆண்டியப்பன் - தியாகராஜன் அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. வா.பி. வெள்ளைச்சாமி மெய்யப்பன் அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. ச.பெரி.மெ. நெல்லியான் அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. கரு. குழ. பழநியப்பன் சேர்வை - சாவித்திரி | ரூ. | 5,001 |
| திரு. ஆ.வெ. பெ.லெ. ராமநாதன் & டாக்டர் லெ. ராஜேந்திரன் | ரூ. | 5,001 |
| திரு. கோ.சுப. ராதாகிருஷ்ணன் சேர்வை | ரூ. | 5,001 |
| திரு. ஆ.வெ.லெ.ச. தன்ய குமார் சகோதரர்கள் | ரூ. | 5,001 |
| திரு. சா.மு. கணேசன் - சுபத்ரா | ரூ. | 5,001 |
| திரு. சி.வெ.ஆ.சிதம்பரம் சேர்வை | ரூ. | 5,001 |
| திரு. க.சி.ஆ. சின்னச்சாமி அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. பொ.ராம. சோலையப்பன் அம்பலம் | ரூ. | 1,001 |
| திரு. ஊ. சுப. ராமச்சந்திரன் அம்பலம் | ரூ. | 1,001 |
| திரு. கா.ராம.நடேசன் அம்பலம் | ரூ. | 1,001 |
| திரு. ஆ.சி. விக்கிரமாதித்தன் (பெங்களூர்) | ரூ. | 501 |
| திரு. ராம. நெல்லியான் அம்பலம் - நெ. வள்ளியப்பன் | ரூ. | 501 |
| திரு. பொ. மு. ஜெகதீசன் அம்பலம் | ரூ. | 101 |
| திரு. நா. பாலாஜி | ரூ. | 101 |
| | மொத்தம் ரூ. | **1,90,489** |

## மணச்சை

| | | |
|---|---|---|
| மணச்சை நாட்டார்கள் | ரூ. | **12,101** |
| திரு. கி. முருகேசன் அம்பலம் & முரு. சோலைமலை | ரூ. | 50,001 |
| திரு. சி.நா.ஆ. வெங்கடாசலம் | ரூ. | 5001 |
| திரு. சுப. அழகப்பன் (பெங்களூர்) | ரூ. | 1001 |
| | மொத்தம் ரூ. | **68,104** |

## கொத்தரி

| | | |
|---|---|---|
| கொத்தரி நாட்டார்கள் | ரூ. | **10,001** |
| திரு. கும. சோலை அழகர் அம்பலம் & கும. சோலை விளத்தன் அம்பலம் | ரூ. | 5001 |
| திரு. கும. சபாபதி அம்பலம் - கணேசன் அம்பலம் | ரூ. | 5001 |
| திரு. மு. சொ. சித. சோலைமலை அம்பலம் - பொன்னம்மாள் | ரூ. | 5001 |
| | மொத்தம் ரூ. | **25,004** |

## கானாடுகாத்தான்

| | | |
|---|---|---|
| கானாடுகாத்தான் நாட்டார்கள் | ரூ. | **11,000** |
| திரு. N. சேதுராமன் & N. ராஜேந்திரன் | ரூ. | 20,001 |
| திரு. எ.சுப. வெள்ளைச்சாமி அம்பலம் | ரூ. | 15,000 |
| திரு. ஆ.பெரி. ராம.ராமசாமி அம்பலம் | ரூ. | 10,001 |
| திரு. ராம. சண்முகம் அம்பலம் | ரூ. | 10,001 |
| திரு. கொ.சி.ராம.கணேசன் - ராமசாமி | ரூ. | 10,001 |
| திரு. மு.அழ.ராம. பாலவிளத்தன் அம்பலம் | ரூ. | 5,301 |
| திரு. மு.அழ.பிரமன் சேர்வை | ரூ. | 5,001 |

| | | |
|---|---|---|
| திரு. மு.அழ.நாகராஜன் சேர்வை - சாந்தி | ரூ. | 5,001 |
| திரு. கொ.லெ.பெரி. அழகுராமலிங்கம் அம்பலம் & திரு. கொ.லெ.ராம. பெருமாள் அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. ந.பி.சோ. காளிமுத்து - சீதாலெட்சுமி | ரூ. | 5,001 |
| திரு. கரு.பி.மீனாட்சி சுந்தரம் | ரூ. | 5,001 |
| திரு. கரு.பி.மீ.பெரியநாயகி | ரூ. | 5,001 |
| திரு. கரு.பி.மீ. ரமேஷ் | ரூ. | 5,001 |
| திரு. கரு.பி.மீ. செந்தில்குமார் | ரூ. | 5,001 |
| திரு. கொ.லெ.ராம. பெருமாள் - செந்தில்நாதன் | ரூ. | 5,001 |
| திரு. ப.சொ.சோலைமலை அம்பலம் & சொ.துரைசிங்கம் அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. பொ.பிர.ராம. சோலைமலை சேர்வை | ரூ. | 1,001 |
| திரு. வயி.அருணாசலம் அம்பலம் | ரூ. | 1,001 |
| திரு. ராம. நாகராஜன் (பெங்களூர்) | ரூ. | 1,001 |
| திரு. பெரி. சந்தர் (பெங்களூர்) | ரூ. | 1,001 |
| திரு. M.G.S. பாண்டியன் | ரூ. | 101 |
| | மொத்தம் ரூ. | **1,35,420** |

## நேமத்தான்பட்டி

| | | |
|---|---|---|
| **நேமத்தான்பட்டி நாட்டார்கள்** | ரூ. | **10,051** |
| திரு. B. ஜெயராம் பிரபு | ரூ. | 5,100 |
| திரு. கா.பெரி. ராமநாதன் அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. சித.பெரி.சிதம்பரம் | ரூ. | 5,001 |
| திரு. ஆ.சோ.ராம. ராமசாமி சேர்வை | ரூ. | 5,001 |
| திரு. கா.பெரி.கு.சோ. ராமசாமி சேர்வை | ரூ. | 5,001 |
| திரு. சித. பெரி. சோலைஅழகர் சேர்வை | ரூ. | 5,001 |
| திரு. பெரியையா (பெங்களூர்) | ரூ. | 501 |
| திரு. ராம. ராகவன் - இந்திரா (பெங்களூர்) | ரூ. | 501 |
| திரு. தூ. ஆ.பழ. ஆண்டியப்பன் (பெங்களூர்) | ரூ. | 101 |
| | மொத்தம் ரூ. | **41,259** |

## பலவான்குடி

| | | |
|---|---|---|
| **பலவான்குடி - செங்கனி நாட்டார்கள்** | ரூ. | **10,001** |
| திரு. அழ. சுப்பையா பழநியப்பன் | ரூ. | 10,501 |
| திரு. A.K.M. பாண்டியன் அம்பலம் | ரூ. | 10,001 |
| திரு. த. வி. சோ.ராம. ராமச்சந்திரன் | ரூ. | 5,102 |
| திரு. அ.வீர. நெல்லியான் சேர்வை | ரூ. | 5,101 |
| திரு. அ.வீர. சுப்பையா சேர்வை | ரூ. | 5,001 |
| திரு. க. சோலைமலை அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. முரு. பெரியசாமி அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. த.வி.சோ.ராம. சோமசுந்தரம் அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. கா.சி.வைரவன் அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. முரு. சொக்கலிங்கம் அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. பழ. பெரியய்யா, சோலைமலை அம்பலம் | ரூ. | 5,001 |

| | | |
|---|---|---|
| திரு. கு. சோ. சின்னையா அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. சேனாதிபதி சேர்வை, சே.லெ.சோலைமலை | ரூ. | 5,001 |
| திரு. A.K.M. லெட்சுமணன் | ரூ. | 1,111 |
| திரு. அழ. குமரப்பன் அம்பலம் | ரூ. | 1,001 |
| திரு. பழ. சாமிநாதன் அம்பலம் | ரூ. | 1,001 |
| திரு. கரு. ராமகிருஷ்ணன் அம்பலம் | ரூ. | 1,001 |
| திரு.S.சொக்கலிங்கம் | ரூ. | 1,001 |
| திரு. ம.அ.பெ. கணேசன் அம்பலம் | ரூ. | 501 |
| | மொத்தம் ரூ. | **91,331** |

## காரைக்குடி

| | | |
|---|---|---|
| **காரைக்குடி நாட்டார்கள்** | ரூ. | **11,001** |
| திரு. கரு. சுப. கண்ணன் அம்பலம் | ரூ. | 25,000 |
| திரு. AL.S. சேது அம்பலம் | ரூ. | 20,001 |
| திரு. மு.அ.மெ.மெ. பாண்டித்துரை அம்பலம் | ரூ. | 20,001 |
| திரு. நெ.ராம. முத்துராமன் அம்பலம் | ரூ. | 11,001 |
| திரு. ஆ.பொ.வெ.சா. குடும்பத்தார் | ரூ. | 10,001 |
| திரு. ராம.மெ.ராம. நாகப்பன் அம்பலம் | ரூ. | 10,001 |
| திரு. ஆ. நாராயணன் - நா. வைரஜோதி | ரூ. | 5,001 |
| திரு. ராம. சோமசுந்தரம் அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. மெ. மெய்யப்பன் சேர்வை - தங்கம் | ரூ. | 5,001 |
| திரு. பெரி.கி.ராமகிருஷ்ணன் அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. லெ.மெய்யப்பன் - வள்ளியம்மாள் | ரூ. | 5,001 |
| திரு. ராம. செந்தில் வடிவேல் அம்பலம் | ரூ. | 5,001 |
| திருமதி. SP. காளிமுத்து அம்மாள் | ரூ. | 5,001 |
| திரு. K.விஜயசரவணன் | ரூ. | 5,001 |
| திரு. சி.பெரி.சி.மெ.ந. சந்திரசேகரன் | ரூ. | 1,001 |
| திரு. சி.கு.மெ. நடராஜன் அம்பலம் | ரூ. | 1,001 |
| திரு. கரு. மீனாட்சி சுந்தரம் சேர்வை | ரூ. | 501 |
| திரு. ராமச்சந்திரன் (பெங்களூர்) | ரூ. | 101 |
| திரு. N. மீனாட்சி சுந்தரம் | ரூ. | 101 |
| திரு. பொ. சொக்கலிங்கம் | ரூ. | 101 |
| திருமதி. மெ. அழகம்மை | ரூ. | 51 |
| | மொத்தம் ரூ. | **1,49,871** |

## கழநிவாசல்

| | | |
|---|---|---|
| **கழநிவாசல் நாட்டார்கள்** | ரூ. | **10,001** |
| திரு. முத்துப்பட்டணம் சி.ஆனந்தன் அம்பலம் | ரூ. | 25,000 |
| திரு. க.சுப.அ. கணேசன் அம்பலம் | ரூ. | 15,000 |
| திரு. சுப.பழநிவேலு - உமையாள் | ரூ. | 5,001 |
| திரு. சுப.பழ. சரவணன் - ராஜேஸ்வரி | ரூ. | 5,001 |
| திரு. சுப.பழ. கணேசன் - பத்மசுந்தரி | ரூ. | 5,001 |
| திரு. லெ.லெ.ப. சிவநேசன் அம்பலம் | ரூ. | 5,001 |

| | | |
|---|---|---|
| திரு. நா. சேது அம்பலம் - பெரியநாயகி | ரூ. | 5,001 |
| திரு. கீ.கரு. சீனிவாசன் அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. சித. விசுவநாதன் அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. சோ. சிவராஜ் அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. லெ.லெ.ப. பாலசுப்பிரமணியன் அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. கீ. கரு. மாணிக்கவாசகன் அம்பலம் | ரூ. | 5,001 |
| திரு. அழ. சுப்பிரமணியன், அழ. கோபாலகிருஷ்ணன் | ரூ. | 5,001 |
| திரு. ராம. சொக்கலிங்கம் அம்பலம் | ரூ. | 3,000 |
| முத்துப்பட்டணம் ஆ. காசி அம்பலம் | ரூ. | 1,001 |
| திரு. AL. நெல்லியான் (பெங்களூர்) | ரூ. | 1,001 |
| திரு. சுப.சொ. சுப்பையா அம்பலம் | ரூ. | 1,001 |
| திரு. மு. சோ.லெ. ரவிச்சந்திரன் | ரூ. | 1,001 |
| திரு. மு.அ.வெ. சிந்தாமணி அம்பலம் - அழகு மீனாள் | ரூ. | 1,001 |
| திரு. சுப. ஆறுமுகம் அம்பலம் | ரூ. | 501 |
| திரு. மு. ராமசாமி | ரூ. | 501 |
| திரு. மு. சந்திரன் | ரூ. | 101 |
| திரு. மு. அழகப்பன் | ரூ. | 101 |
| திரு. S. பழநியப்பன் | ரூ. | 101 |
| திரு. சோ. அழகப்பன் | ரூ. | 101 |
| திரு. ராம. ராதாகிருஷ்ணன் | ரூ. | 101 |
| திரு. சு. விஜயன் | ரூ. | 101 |
| | மொத்தம் ரூ. | **1,14,625** |

## சுட்டிநெல்லிபட்டி

| | | |
|---|---|---|
| சுட்டிநெல்லிபட்டி நாட்டார்கள் | ரூ. | 11,001 |

## முள்ளாங்காடு

| | | |
|---|---|---|
| முள்ளாங்காடு நாட்டார்கள் | ரூ. | 10,503 |

## உலுப்பகுடி

| | | |
|---|---|---|
| திருமதி கரு. மீனாட்சி அம்மாள் | ரூ. | 5,001 |
| திரு. K. ராஜாராம் | ரூ. | 5,001 |
| திரு. ராம. சதாசிவம் சேர்வை | ரூ. | 1,101 |
| திரு. ச. சீனிவாசன் (பெங்களூர்) | ரூ. | 1,001 |
| திரு. S. நடராஜன் - மணி குடும்பத்தார் (பெங்களூர்) | ரூ. | 1,001 |
| திரு. சோலைமலை - மல்லிகா (பெங்களூர்) | ரூ. | 251 |
| திரு. பாண்டியன் - சோலைமுத்து (பெங்களூர்) | ரூ. | 101 |
| திரு. S.நெல்லியான் (பெங்களூர்) | ரூ. | 51 |
| | மொத்தம் ரூ. | **13,508** |

| | | |
|---|---|---|
| தேவகோட்டை டாக்டர் S. ராமநாதன் & டாக்டர் R. தேவசேனா | ரூ. | 5,001 |
| ராயவரம் திரு. RM. லெட்சுமணன் | ரூ. | 5,001 |
| கர்நாடகா வல்லம்பர் பேரவை (பெங்களூர்) | ரூ. | 5,001 |
| வடசீமை நாட்டார்கள் | ரூ. | 2,005 |

# ஆறு

பாவலர்மணி ஆ. பழநி, காரைக்குடி.

1. அல்லெடுத்து வைத்ததெனும் கடற்பி றந்தாய்!
அருளெடுத்து வைத்ததெனக் குளிர்ச்சி கொண்டாய்!
வில்விடுத்த கணையென்ன வீறு கொண்டு
வியனிலத்து மழைக்காலாய்ச் சிதறிப் பாய்ந்து,
கல்லறுத்து மண்ணறுத்துக் காடும் மேடும்
கண்ணாறு கண்ணாறாப் பிரிந்து சென்று,
நெல்லறுத்துக் களமர்களம் குவிக்க வென்று
நிலமறுத்து நடந்துவரும் ஆற்றுப் பெண்ணே!

2. குன்றிருந்து குதிக்கின்றாய் சிறுமி போலக்,
கூடுகின்ற சமவெளியில் மடுக்கள் தோறும்
நின்றுநின்று நடக்கின்றாய் மங்கை போல,
நிலத்தில் வளர் உயிர்க்குலத்தை வாழ வைக்கச்
சென்றுசென்று வேண்டுமுண வூட்டிச் செல்லும்
சீர்த்தியையும் நீபெற்றாய் தாயைப் போல,
சென்றழித்தல் சேர்ந்தாரைக் காத்தல் என்ற
செயல்செய்தாய் எங்கட்கோர் இறையைப் போல.

3. நீவளைந்து நடந்ததனால் எங்கள் வாழ்வு
நிமிர்ந்ததம்மா! நீசினந்து நிமிர்ந்தா யானால்
தீயளைந்த துன்பங்கள் கோடி கோடி
தேடிவரும் வாழ்க்கைமுறை வளைந்தே போகும்;
காவளைந்து கழனியெலாம் கலந்து சென்று
கடல்மகனின் தடந்தோளில் கலக்க வென்று
பூமலைந்து புகழ்மலைந்து தமிழர் வாழ்வில்
பொருள்மலியத் திருவளர நடந்தா யம்மா!

4. பன்னரிய வடபுலத்தில் நதிகள் எல்லாம்
பாய்ந்தெழுந்து மக்கள்தமை அழிக்கும்; இந்தத்
தென்னகத்தின் யாறேநீ அமைதி காத்துத்
தென்னைமுதற் செந்நெல்வரை விளைக்கக் கண்டேன்;
என்னஇது விந்தையென மலைத்தல் செய்யேன்;
இருநிலத்துப் பண்பாடும் விளங்கக் கண்டேன்;
அந்நிலத்தி னியல்பாலே திரியும் நீரென்
றாய்ந்துரைத்த குறள்வாக்குப் பொய்க்கா தன்றோ?

5. தலைகாட்டும் பசும்புல்லை வளரச் செய்து
தறிகெட்ட நாடோடிக் கூட்டத் தாரை
நிலையாக ஓரிடத்தில் நிலைக்க வைப்பாய்;
நீதிமுறை நாகரிகம் பண்பாட் டோடு
கலைவளர்ச்சி மொழிவளர்ச்சி காண வைப்பாய்;
கருத்தின்றி விலங்குகளாய் அலைந்த மாந்தர்
நிலைமாறித் தேவரென உயர்ந்தா ரென்றால்
நீகொடுத்த கொடையம்மா இந்த வாழ்வு.

6. காரோடும் வழியெல்லாம் மழையி றங்கக்
கரைபுரண்டு நீயோட, மதுரை வேந்தன்
தேரோடும் பொழுதாடும் கொடியைப் போலச்
செந்நெல்லின் குலைவிளைந்து காற்றி லாட,
ஊரோடும் உலகோடும் பகைவ ளர்த்தே
ஒன்றுதற்கும் இடமின்றி வறுமை யோட
யாரோடும் உறவாடிப் புகழ்வ ளர்த்தாய்
யாரேநின் போற்றுணைவர்க் காணு கில்லேன்!

7. மேவவரும் அணைகளுக்குட் சிறைப்பி டிப்பார்
மிகவிழிப்பாய்ப் பூட்டிவைப்பார்; திறந்த போதும்
ஏவலர்போல் இருகரையும் தொடர்ந்து நிற்க
இடைநெறியில் உனையழைத்து நால்வ ரப்புக்
காவலுக்குள் மீண்டும் உனைக் கட்டி வைப்பார்;
கடுகேனும் சினங்கொள்ளாய்! ஊர்க்கு நன்மை
ஆவதற்குத் தன்னுருவை அழித்துக் கொள்வாய்
ஆரேநின் னீகத்தின் நிகராய் ஆவார்

8. நீர்த்துறையில் ஒதுங்கவைப்பாய்; நீநி னைத்தால்
நெடியகரை மோதுவிப்பாய்; நீரோட் டத்தில்
ஆர்த்திருக்கும் சுழலுக்குள் அமிழ்த்தி வைப்பாய்;
அடுமணலின் மடுவின்கீழ் செருகி வைப்பாய்;
பேர்த்துமவை வெளிக்கொணர்வாய் சுமந்து சென்று
பெருங்கடற்குத் திறைதருவாய்; செயல்நி னைந்தால்
நீத்தரிய பழவினையால் உயிர் களாடும்
நிகழ்வெல்லாம் நடத்துகிறாய் உனைய டைந்தால்.

9. நீர்க்குமிழி தோற்றுவிப்பாய்; மனித வாழ்வின்
நிலையாமை காட்டுவிப்பாய்; சுடுஞா யிற்றின்
தீக்கதிரால் பிளவுண்ட நிலத்தி னூடே
திடுதிடென நீநடப்பாய்; சந்து செய்வாய்
போக்கினிலே தளர்வில்லாய்; ஓய்வே இன்றிப்
புகழ்புரியும் செயலுடையாய்; புலவர் பாடும்
வாக்கினிலே வாழ்கின்றாய்; உன்றன் வாழ்க்கை
வையகத்து மானிடர்க்கோர் பாட மன்றோ?

10. பொன்றிகழும் மலரிதழில் துளியாய் நிற்பாய்;
புக்கவெயிற் கதிராலே அழிந்து போவாய்;
வன்றிகழப் பஃறுளியும் சேர்ந்தா றாவாய்;
வானிவந்த ஆல்மரமும் பேர்த்துச் சாய்ப்பாய்;
ஒன்றியென இருப்பாரை வலிமை கொண்டோர்
ஒருநொடியில் வீழ்த்துதலும், ஒருங்கி ணைந்து
நின்றியலும் நிலைபெற்றால் பகைவ ரெல்லாம்
நிலையழிந்து வீழுதலும் இயற்கை தானே!

11. கார்நடக்கும்; நடந்தாற்றான் உலகில் யாண்டும்
கலிநடக்க வொட்டாமல் உழவர் கட்டும்
ஏர் நடக்கும்; நடந்தாற்றான் மனித வாழ்வில்
இசை நடக்கும் திசையனைத்தும் செல்வ தான

சீர் நடக்கும் செயல்நடக்கும்; நெஞ்சை யள்ளும்
சிற்பமுதற் கலைநடக்கும்; நடக்கும் வாய்மை;
பார்நடக்க வைக்கின்ற யாறே நின்போல்
பயனடக்க வாழ்ந்தாரைக் காண்கி லேனால்.

(ஆலமரச் சருகொன்று நீரில் வருகிறது)

தேர்மிசை வருஉம் திருவுடை மன்னனின்
நீர்மிசை வருஉம் ஆலிலைச் சருகு! நின்
தோற்றமும் வளர்வும் ஆற்றலும் காணின்
ஏற்றமும் இறக்கமும் எத்தனை பெற்றுளை!
தளிராய் நின்றநின் னெழிலா லன்றோ
தென்கால் எழுந்து நின்றோள் அணைந்தது!
ஆலின் தளிரா அல்லை! அல்லை!
மாலின் நிறமென மயங்கியோர் உண்டே!
தண்மையும் மென்மையும் தடவி உணர்ந்தோர்
பெண்மகள் கன்னமும் பெறாஅ திதுவென
மொழிந்ததும் கேட்டுளேம்; கேட்டதாற் பெண்மனம்
அழிந்ததும் கேட்டுளேம் அன்றே! பயணியர்
தெறுஉம் ஞாயிறு தெரித்த கதிரான்
வெருஉம் வேளையில் விதித்த குடையென
இன்னிழல் நல்குநின் னிசைபெரி தன்றோ!
எந்நிழல் வாழ்நரும் நின்னிழல் வதிய
அவாவ வாழ்ந்த அரசு நீ யலையோ!
தளிரில் இலையில் தழுவிய காற்றே
விளியும் நாளில் விரட்டுத லென்னோ!
தாங்கிய கிளைதான் தவிர்க்குமே வுறவை
ஈங்கவர் நிலைதான் நின்னிலை என்கோ!
கல்லா இளமை யாண்டுண்டு கொல்லோ
நில்லா ததுவெனும் நெடுமொழி பெரிதால்!
நின்கா லிருந்தோர் தங்கால் வீழ்ந்தனை!
ஏற்றிய மனித்ரே எற்றினர் காலால்;
எழிலும், நலமும், யாவர்க்கு முதவும்
தொழிலும் இழந்து தொல்கவின் வாடிச்
சருகெனும் புதுப்பெயர் தரித்தநின் நிலைமைக்
குருகுமென் னுள்ளம் ஓ!ஓ! சருகே!
இன்னும்நின் வாழ்க்கைப் பயணம் இறுதியை
நண்ணவு மிலையோ! நடத்துதி பயணம்
(சருகை ஆற்றில் போட்டு)
திரைகட லோடியும் திரவியம் தேடெனும்
உரையினை எண்ணி ஓடுகின் றனையோ!
கண்ணறி யாதவோர் பொருளாய்க் கரந்து
மண்ணிடைக் கிடந்தாய்! மரமென வளர்ந்தாய்!
தளிரெனா இலையெனாச் சாம்பிய பழுப்பெனா
அளியநின் பிறவி அறாஅது போலும்;
நீரினுள் அழுகி நிலத்தினுட் கரந்தோர்
வேரினுள் நுழைந்து மீளவும் பிறவி
எடுக்கும் ஆவலால் ஏகுவை போலும்!

********

# எது பக்தி?

சோ. சண்முகவள்ளி, பலவான்குடி.

சிவசாமி, நூறு முறை சிவன் சந்நிதி முன், விழுந்து விழுந்து கும்பிட்டார். உடல் முழுக்க திரு நீற்றுப் பட்டை, அங்கங்கே கீற்றாய்... குருக்கள் இவரைப் பார்த்து வெள்ளந்தியாய்ச் சிரித்தார். "தினம் சிவன் முன்னால,விழுந்து, விழுந்து, கும்பிடறேள். நூறு தடவைக் கோவிலைச் சுத்தி வாரேள். ஏதாச்சும், விசேஷ காரணமிருக்கா?" - பாகவதர் போல் கரகரப்பான குரல், குருக்களுக்கு... "சாமியைக் கும்பிட, காரணம் வேறு வேணுமா ஐயா?"... - சிவசாமியை வியப்புடன் பார்த்தார் குருக்கள்-... "நாளைக்குச் சிவனுக்கு அபிஷேகம், பண்றேன்னேளே?"... "ஆமா ஐயா! அபிஷேகச் சாமானெல்லாம் வாங்கி வைச்சுடறேன். அபிஷேகம் பண்ணிடுங்கோ"... என்று பயபக்தியாய்ச் சொன்னார் சிவசாமி.

"சிவசாமியைத் தெரியுமோ? பெரிய பக்தர்.. ரொம்ப நேரம், சந்நிதி முன்னாலே விழுந்து, விழுந்து கும்பிடுவார். நூறு முறை, பிரகாரம் சுற்றி வருவார். அவ்வளவு பக்தி."- குருக்கள், யாரிடமோ சொல்லிக்கொண்டிருந்தார்... அதைக் கேட்டபடியே சிவசாமி புன்னகையோடு திரும்பினார். கண்கள் ஓரிடத்தில் நிலைத்தன... இவர் மகன் ராம். தெப்பக் குளப்படியருகே கல்லைத் தண்ணீருக்குள் வீசியபடி நின்றான். "ஏன்டா, சாமி கும்பிடலியா?" என்று சிவசாமி கோபத்தோடு கத்தினார். "அதெல்லாம் கும்பிட்டாச்சு அப்பா!" - என்ன அலட்சியமான பதில்? அவன், எப்போதுமே இப்படித்தான். இவர், வற்புறுத்தலுக்காக அலுத்துக் கொண்டே வந்தவன், ஏனோ தானோவென்று, சாமி முன்பு, கன்னத்தில் இரண்டு தட்டு, தட்டிக் கொண்டு, நகர்ந்தான்... பற்றிக் கொண்டு வந்தது இவருக்கு. பக்தியே உருவான தனக்கு இப்படி பக்தியே இல்லாத, மகன்! அபிஷேகச் சாமான்களோடு வீட்டிற்கு வந்தார் அவர். அபிஷேகச் சாமான்களை வைக்க, இடம் தேடினார்...

நாளைக்கு, அறுவடை, ஆட்களுக்குச் சொல்லிவிட வேண்டும்... வீட்டு டி.வி.யில் 'சந்திரமுகி' படம் ஓடிக் கொண்டிருந்தது. 'அடேயப்பா! அந்த ஜோதிகாப் பொண்ணு, என்ன நடிப்பு நடிக்குது?'.... ஓரத்தில் அமர்ந்திருந்த மகளைப் பார்த்தார்... இவளுக்கு, இரண்டு பவுன் சங்கிலி போட்டால்தான், கணவன், வீட்டுக்குத் திருப்பி அனுப்ப முடியும்.. கடைசி பையன் குமார், ஹாஸ்டலில் இருக்கிறான். அங்கு, சாப்பாடெல்லாம், ஒழுங்காக இருக்கிறதோ என்னமோ? இன்று அப்துல்கலாம் சென்னை, வருகிறாராமே... டி.வி.யில் கண்டிப்பாகப் பார்க்க வேண்டும்... சாப்பிடும்போது, "மெட்டி ஒலி" கண்டிப்பாகப் பார்க்க வேண்டும். ஹூம்... மாணிக்கம், என்றுதான் திருந்தப் போகிறானோ?... இப்படியே பல்வேறு எண்ணக் குவியல்களுக்கிடையில், அபிஷேகச் சாமான்களை வைத்தவர், தூங்கப் போனார்... மறுநாள் "ஐயய்யோ! அபிஷேகச் சாமான்களை, எங்கே வைத்தோம்?" - பரபரப்பாகத் தேடினார் அவர். அவர் அங்கும் இங்கும் தேட, நேற்று அத்தனை அலட்சியமாகச் சாமி கும்பிட்ட மகன் ராம், குரல் கொடுத்தான்... "அபிஷேகச் சாமான்களை பீரோவிலே வைச்சீங்கப்பா! என் மனசெல்லாம் அதிலேதான் இருந்தது"... தன் மனசு அந்நேரம் எங்கிருந்தது என்பதை நினைத்தவுடன், வெட்கத்தோடு தலைகுனிந்தார் பக்தர்.

# செத்தும் கெடுத்தான் சீதாபதி!

சா. நடராசன், சென்னை.

சிறுகுடி கிராமத்திலேயே பிரபல மானவர்கள் மூன்று பேர்கள்தான் - தலைவர், சின்னப்பண்ணை, கணக்கப் பிள்ளை சீதாபதி. கிராமக்கணக்கப் பிள்ளை என்பதால் ஊரில் அத்தனை பேர் விலாசமும் இடங்களின் பட்டா நம்பரும் அவருக்கு அத்துபடி.

விவரம் தெரிந்த நாளிலிருந்து நாற்பது ஆண்டுகளாய் சாதிச்சான்றிதழ், வருமானச் சான்றிதழ் போன்றவற்றிற்கு பிள்ளைகள் போனபோதெல்லாம் "அடே கணேசன் பையனா? உங்கப்பன் ஒரு உதவாக்கரை... உன் சித்தப்பன் கிட்ட ஏமாந்தவனாச்சே!" என்றும், கட்ட மாட்டார்கள் என்று தெரிந்தும் "ஏண்டா சிவகாமி வீட்டில் உன் பையனுக்குப் பொண்ணு கேட்கலாமே?" என்றும் சொல்லி அத்துடன் இரு குடும்பத்து உறவையும் முறித்துவிடுவார்.

இந்தக் கிராமத்தில் நடந்த ஒரு வரப்புச்சண்டையில் இவர் மேலும் குட்டையைக்குழப்பி, அரிவாள் வெட்டு, மம்மட்டி அடி என்று கேஸாகி, பத்து வருடமாகப் பெருமாள் குடும்பத்தை டவுனுக்கும், வக்கீலிடமும் அலைய விட்டவர் நம் சீதாபதிதான்.

நாட்டு வக்கீல் என்று பெயரெடுத் திருந்தாலும், பிரச்சனைகளுக்கு அவர் கூறும் வழிமுறைகளில் பல பேர் தலையைப் பிய்த்துக் கொள்ளவும் கோர்ட்டுக்குப் போக வைப்பதிலும், அடி தடியில் இறங்குவதும் நிச்சயம். 'மேக்கெடுதி' 'வில்லங்கம்' 'சகுனி' எனப் பலரும் பல விதமாகப் பேசுவது அவருக்கும் தெரியும்.

ஊரிலே எல்லோரும் ஒவ்வொரு வழியில் இவரிடம் பாதிப்பு அடைந்திருந்தனர். அவர் திண்ணையில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தாலே சிலபேர் அவர்கண்ணிலே படாமல் பக்கத்து வீதிகளில் சென்று விடுவர்.

ஒருவர் வீட்டுத்தோட்டத்தில் களை நிறைய இருந்ததால், சீதாபதியைக் கூப்பிட்டு "உங்கள் வீட்டுப் பசுவிற்கு நம் தோட்டத்தில் நிறைய புல் இருக்கு. வந்து பிடுங்கிக் கொள்ளுங்கள்" என்று சொன்னார். இவ்வாறு கூப்பிட்டதன் நோக்கம் - இவ்வளவு புல்லா என்று அவர் நினைத்தால், அடுத்து களை மண்டாது என்பதற்காகவே. ஆனால் சீதாபதி தோட்டத்தை வந்து பார்த்தவுடன் "களை மண்டினால் கூட செடிகள் நல்லா வளர்ந்து இருக்குது" என்று சொன்னவுடன் தோட்டம் காய்ந்து வறண்டதாகச் கூறுவர்!.

வெளியூரில் வேலை செய்யும் ஒருவர் போய், "ஏங்க சீதாபதி! உன் தம்பி செட்டிய வீட்டில் அடமானம் வைத்த பங்கை நீ போய் திருப்பி எடுத்துக் கிட்டியாமே? நியாயமா?" என்று கேட்டவுடன் அவர் "ஏய்யா, நீங்கல்லாம் வெளியூரில் போய் யார் தலையையாவது தடவி காசடிச்சிடுறீங்க! நாங்க எங்க கெட்டிக்காரத்தனத்தை வளைவுக் குள்ளேயும், பங்காளிகிட்டேயும், பக்கத்து வரப்பிலேயும்தானே காட்ட முடியும்?" என்று பொட்டிலடித்தாற் போல சொன்னார். தன்னைப்பற்றி ஊரார் நினைப்பதை அறிந்தும் இவரால் மாற்றிக்கொள்ள முடியவில்லை. இயற்கைக்குணம். வாயிலே வருவதெல்லாம் கோக்குமாக்கு, இடியாப்பச் சிக்கல் ஏற்படுத்தும் வார்த்தைகளே! அறுபது வயசாகும்போது முதுகிலே ஒரு கட்டி வந்தது. சீதாபதி டவுனுக்குப் போய் வைத்தியம் பார்த்தும் ஆறவில்லை. ஒரு மாதம் ஆனவுடன் அவருக்கே 'இது கடைசிப் படுக்கை' எனத்

தெரிந்துவிட்டது. பிள்ளையும் இல்லை. பொண்டாட்டி புண்ணியவதி ஐந்து வருடத்துக்கு முன்னேயே போய்ச் சேர்ந்துவிட்டாள். சாப்பாடும் ஏறவில்லை என்றவுடன் படுத்த படுக்கையாகி விட்டார்.

ஊரிலே உள்ள பெரிய மனிதர்களையெல்லாம் வரவழைத்து, சீதாபதி உருக்கமாக "நான் வாழ்க்கையிலே ரொம்பத் தப்பு பண்ணிட்டேன். இந்த ஊர்க்காரங்களுக்கு கெடுதலும் சிண்டு முடிதலுமே செய்துகொண்டு இருந்து விட்டேன். என் மனசாட்சி என்னை இந்த ஊரிலேயே புதைக்கக் கூடாது என்று சொல்லுது. தயவு செய்து நான் செத்து விட்டால் என் பிணத்தைப் பக்கத்து ஊரிலே கொண்டு போய் புதைத்து விடுங்கள். இதுவே என் கடைசி ஆசை." என்று கூறிவிட்டு ஒருவாரம் கழித்து இறந்துவிட்டார்.

ஊர்க்காரர்களும் பிணத்தை அவர் விருப்பப்படி தூக்கிக்கொண்டு பக்கத்து ஊருக்கு எடுத்துச் சென்றனர். இதைக் கேள்விப்பட்டவுடன் பக்கத்து ஊர்க் காரர்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து ஊர் எல்லையிலே வந்து பிணத்தைத் தடுத்து மறித்தனர்.

"யோவ்! உங்க ஊர்ப் பொணத்தை எங்கள் ஊரில் புதைக்கக் கூடாது. நாங்கள் ஒத்துக்கொள்ளமாட்டோம். கெட்ட ஆவி, பேயும் சேர்ந்து வரும். நீங்க நாளைக்கு சமாதிகூட கட்டணும்பீங்க? சரியா வராது. உடனே பிணத்தை எடுத்துக்கொண்டு போயிடுங்க" என்றனர்.

சிறுகுடிக்காரர்களும் சீதாபதியின் கடைசி ஆசையைக் கூறியும் அவர்கள் ஒத்துக் கொள்ளவில்லை. நான்கு இளவட்டங்கள் இருபக்கமும் 'டாஸ்மாக்' உதவியுடன் "இதை மீறி உள்ளே வந்தால் காலை வெட்டுவோம்: வந்து பாருங்கடா" என்றும், "வரத்தான்டா செய்வோம். என்னடா பண்ணுவீங்க?" என்றும் பேச்சை வளர்த்து, வெட்டு, குத்து, என்று ஆகி, மொத்தத்தில் இருபக்கமும் ஆறு உயிர்கள் போய்விட்டன.

இருக்கிற காலத்திலேதான் சண்டை மூட்டியது போதாது என்று செத்தும் பலரைச் சாகடித்தது பற்றி, இப்போதும் இரண்டு ஊர்க்காரர்களிடம் கேட்டோம் என்றால் "செத்தும் கெடுத்தான் சீதாபதி" என்று கூறுவது வழக்கமாகிவிட்டது.

*பின்குறிப்பு* : நம் ஊரில் 50 வருடங்களாக சிரம தசையில் யாராவது 40 செண்ட் வயலை விற்க முன் வந்தால், அப்போது இருந்த ஒரு பத்திரம் எழுதும் மேதாவி, ஜீவிதப்பங்கு கால் பாகத்தை விற்பதாக எழுதி கிரையம் முடிப்பார். விற்பதோ 40 செண்ட் வயல்; பெற்றதோ அதற்குரிய மதிப்பு ஆயிரம் ரூபாய். ஆனால் ஜீவிதப்பங்கு என்று எழுதியதால், பின்னர் கிடைக்கும் காலி மனைப் பிரிவினைகள், உரிமைகள் அனைத்தும் வாங்கியவர்களைப் போய்ச்சேரும். இதனால் நம்மவர் பலர் ஏழையானார்கள். பத்திரம் எழுதியவரோ வாரிசு இல்லாமல் செத்துப்போனார்.

இதையெல்லாம் தெரிந்த நம் ஊர்ப் பெரியவர்கள், புள்ளிக்கணக்கில் இனி வரும் சொத்துக்களைப் பிரிப்போம் என்று முடிவெடுத்திருக்கலாம். ஒரு பிள்ளை வைத்திருப்பவனுக்கு, 4 பிள்ளை பெற்றவனுக்கு அதிகமாகக் கிடைக்குமே என்ற பொறாமை, வளவுக்குள்ளே அவன் நல்லா வந்துருவானே என்ற பொச்சரிப்பு, ஏதோ இந்தப் பிரிவிளைக்குத்தான் அவன் பிள்ளைகளைப் பெற்று வளர்த்ததுபோல இளக்காரம் ஆனதால், வெளி ஆள் அனுபவிச்சாலும் பரவாயில்லை, நம் சாதிக்காரன், பங்காளி நல்லா இருக்கக் கூடாது என்று நம் சீதாபதி போல் வாழ்ந்து விட்டனர். இதுவரை நடந்த ஜீவிதப் பங்குகளை நாம் மறுத்து, சட்டச் சிக்கல் ஏற்படுத்தாமல் இனிமேலாவது புள்ளிக் கணக்கில் வருங்காலத்தை அமைக்க வேண்டுமாய்க் கேட்டுக்கொள்கிறேன்.

# பெண்ணின் பெருமை

சின்னு, காரைக்குடி.

படைப்பு என்பது ஒரு நோக்கம் கொண்டது. ஒரு சிற்பி கல்லில் கலை வண்ணம் காண்கிறான். ஒரு கை வினைக் கலைஞன், தான் தயாரிக்கும் கை வினைப் பொருளில் கலைத் திறனைக் காட்டி மகிழ்கிறான். ஆனால் இவற்றையெல்லாம் நுணுக்கமாகப் பார்த்து ரசனையோடு அனுபவித்து, தன் எழுத்துத் திறனால் பிறர் அறிந்து பாராட்டும்படி செய்பவன் எழுத்தாளன் ஒருவனே. தான் கண்டதை, கேட்டதை மனத்தில் இருத்தி, அன்றாட வாழ்க்கையில் சகஜமாக நடக்கும் நிகழ்வுகளை, குடும்பப் பின்னணியில் வைத்து எழுதி நம் முன்னே காட்சியாக தந்து விடுவதில் எழுத்தாளர்கள் வல்லவர்களே.

அப்படி ஒரு சிறந்த எழுத்தாளர் எழுதிய ஒரு நாவல் சமீபத்தில் வெளி வந்ததை நான் படித்தேன். அது முழுக்க முழுக்க நமது வல்லம்பர் சமுதாயத்தை மையமாகக் கொண்டு எழுதப்பட்டிருந்தது, குறிப்பிடத்தக்கது.

பாலை மரமும் வீர மரமும் நிறைந்து நிற்கும் காடுகளடங்கிய பாலைப் பகுதியில், வில்லோடும் அம்போடும் வீரமரபினராக குடும்பம் குடும்பாக பல சிற்றூர்களில் வாழ்ந்து வந்தவர்கள் வல்லம்பர். கிராமத்தில் அம்பலம் செய்து அம்பலகாரர்களாக, கடமை, நீதி தவறாத தலைவர்களாக வாழ்ந்து வந்துள்ளார்கள் என்று கேட்டு அறியும்போது நமக்கு சமுதாய உணர்வு மேலோங்கி நிற்கிறது. அதை ஒரு எழுத்தாளன் நம் கண் முன்னே கொண்டு வரும்போது, அதில் சமுதாய அக்கறை தெரிகிறது. சமுதாயப் பழக்க வழக்கங்கள். வீர உணர்வுகள். பெண்ணுரிமை, -இவைகளையெல்லாம் நாம் அறிய முடிகிறது. கடந்த காலத்தில் நடந்த வைகளில் கொள்ள வேண்டியவைகளை வரவேற்று, தள்ள வேண்டியவற்றைத் தள்ளி விட்டு, புதிய சமுதாய அமைப்பை உருவாக்கி, முன்னேற்றம் காண வேண்டும் என்ற முனைப்போடு இருக்கும் அந்த ஆசிரியரின் முத்தான படைப்புதான் "விடிவெள்ளி" என்னும் நாவல். அதனைக் கல்லூரியில் பாடம் நடத்தும் விரிவுரையாளர் போல், நம் சமுதாய வகுப்பில் விரிவுரை செய்ய முன் நிற்கிறேன். கேளுங்கள் .... ஒரு எழுத்தாளன் கதையைப் படைக்க வேண்டும் என்று நினைத்து விட்டால், காலம், நேரம் இடம் தேவையில்லை, மனம் ஒன்றுதான் வேண்டும். நடக்கும் போதே ஒருகாட்சியைக் கண்டுவிட்டால் அது மனதில் பதிந்து, கரு உருவெடுத்து, கதையாக மாறிவிடும். பேராசிரியர் டாக்டர். மு.வ. அவர்கள், சென்னை பாரி முனையில் நடந்து கொண்டிருந்தபோது, ஒரு முடவன் கரித்துண்டால் தார் ரோட்டில் பல சித்திரங்கள் வரைந்ததைப் பார்த்ததன் விளைவுதான் அவர் எழுதிய நாவல் "கரித்துண்டு." நான் கல்லூரியில் படித்துக்கொண்டிருந்தபோது ஒரே இரவில் படித்து முடித்த நாவலும் அதுதான். எளிமையான நடை, விறுவிறுப் பான சம்பவங்கள் கொண்ட ஒரு புதுமைப் படைப்பு. அதற்குப் பிறகு இன்றுதான் நான் ஒரு நாவலை முழுமையாக ஒரே இரவில் படித்து முடித்தேன் என்றால் அதுதான் பேராசிரியர் டாக்டர். *அய்க்கண்* அவர்கள் எழுதிய "*விடிவெள்ளி*" நாவல்

உங்களுக்குத் தெரியும் என்று நினைக்கிறேன். "வெள்ளி முளைச்சாச்சு. கீழ்வானம் வெளுத்தாச்சு... பொழுது விடிஞ்சாச்சு" என்று சொல்லிக் கொண்டே கிராமத்திலிருக்கும் பெரியவர்கள், ஏர் கலப்பையைத் தூக்கிக்கொண்டு, மாடுகளை ஓட்டிக்கொண்டு வயலில் உழுது வரப் புறப்பட்டுச் செல்வார்கள். ஆக விடிவெள்ளி ஒரு துவக்கத்தின் அறிகுறி. வாழ்க்கையில் முன்னேற்றம் பெற நமக்கு அது ஒரு காலம் காட்டி. நாவல் 'விடிவெள்ளி' இப்போது

புலர்ந்திருக்கிறது. அதிலே காணும் கம்பீர மான ஆண்மை, உயர்ந்த பெண்மை, மனித நேயம், புதிய சமுதாய சிந்தனைகள் - இவை அனைத்தும் இன்றையக் கால கட்டத்தில் நம் சமுதாய மக்களால் பின்பற்ற வேண்டியவை. அதே நேரத்தில், பயனற்ற தேவையற்ற மஞ்சு விரட்டு, மாட்டு வண்டிப் பந்தயங்கள் - ஆசிரியர் கூறியுள்ளது போல் தவிர்க்கப்பட வேண்டியவை. உதாரணமாக மஞ்சு விரட்டுக் காளையைப் பிடித்து மடக்கி, அதன் திமிலைத் தழுவுபவனுக்கே, தன் பெண்ணைக் கட்டிவைப்பார்கள் பெற்றோர்கள் என்ற ஒரு பழக்கம் அன்று இருந்திருக்கிறது.

ஆனால் அந்தப் பழக்க வழக்கங்கள் இன்று நடைமுறையில் இல்லையே? பின் ஏன் மஞ்சு விரட்டு நடத்த வேண்டும்? என்று கேட்கிறார் ஆசிரியர். நியாயம்தான்: நாமும் குரல் கொடுக்கிறோம், இன்றையத்தேவை "அறியாமை விரட்டு" ஒன்றுதான்! நம் சமுதாயப்பிள்ளைகள் அனைவரும் கல்வியால் முன்னேற்றம் காணவேண்டும். இன்று நாம் கல்வியில் ஒரு மறுமலர்ச்சி கண்டு வருகிறோம் என்பது உண்மைதான் என்றாலும் இன்னும் பெரும் வளர்ச்சி கண்டால் பெருமைதானே?

அடுத்து, இந்த நாவலைப்படிக்கும் போது என் மனத்தில் மின்னல்கீற்றென ஒரு நினைவுதோன்றியது. அது நான் கல்லூரியில் பி.ஏ. படிக்கும் போது ஆங்கில வகுப்புக்கு "தி ஃபோர்சைட் சாகா" என்ற ஆங்கில நாவலை பாடமாக வைத்திருந்தார்கள். அது ஒரு மூன்று தலைமுறை பற்றி குடும்பப் பின்னணியில் எழுதப்பட்ட நாவல். உண்மையில், பின்னித்தான் எழுதப் பட்டிருந்தது. குடும்பத்தலைவர், அவரது மகன்கள், மருமகள்கள், பேரன்கள், பேத்திகள் என்று "குரோனாலாஜிக்கல் ஆர்டரில்" (Chronological Order) படம் வரைந்து விளக்கம் காட்டி எழுதப்பட்டிருந்து. அதில் ஒவ்வொருவருடைய குணாதிசயங்கள், விருப்பு, வெறுப்புகள், மனித இயல்புகள் இணைந்து வாழ்தல் என்று விதவிதமான பரிமாணங்கள் கொண்டு எழுதப்பட்ட நாவல்.

அந்த வகையில் நான் "விடி வெள்ளி" நாவலுக்கும் ஒரு வரைபடம் போட்டு, நாவலாசிரியர் இழையோடி வரும் அடுக்கடுக்கான சம்பவங்களை எப்படி பின்னி எழுதியுள்ளார் என்பதை ரசித்துப் படிக்க முடிந்தது. இதோ அந்த வரைபடம்! உங்களுக்கும் தெரியட்டுமே!. அதன் மூலம் ஆசிரியரின் எழுத்து வண்ணத்தில் மிளிர்ந்து தோன்றும் அம்பலகாரரின் குடும்பப்பாங்கு, பெண்களின் தன்னிச்சையான முடிவு, தியாக உணர்வுகள், குழந்தைப் பாசம், கல்விக்கு முக்கியத்துவம், கிராமத்தில் சமூகத்தொண்டு என ஒருமுகமாகப் பரிமளிக்கின்றன.



முத்தையா அம்பலகாரரின் முதல் மனைவிக்கு இரண்டு பையன்கள். ஒருவன் அழகப்பன், மற்றவன் சுப்பையா. முத்தபையன் அழகப்பன் ஒரு கலாரசிகன். அதே நேரத்தில் மஞ்சு விரட்டு போன்ற வீரவிளையாட்டுகளில் முன் நிற்பவன். சுப்பையா சிறு பையன். தாய் கருப்பாயி, மஞ்சள் காமாலை வந்து மாண்டு போனாள். அதனால் பையன்களை வளர்க்க முத்தையா அம்பலம் இரண்டாம் திருமணம் செய்து கொண்டார். அங்கே வள்ளி என்ற பெண்மணி இரு குழந்தைகளுக்கும், சித்தியாக வரவில்லை - பெற்ற தாயாகவே வந்து சேர்ந்தாள். “என்ன அப்பு, ஒரு சமுதாயத்தில் இப்படியும் உண்டா?” என்று மூக்கின் மேல் விரலை வைக்காதீர்கள்! இது போன்ற நிகழ்வுகள் சமுதாயத்தில் தொடரவேண்டும் என்பதே ஆசிரியரின் விருப்பம். அதனால்தான், தான், குழந்தை பெற்றுக்கொள்ளாமல் அம்பலகாரரை ஏமாற்றிக் கொண்டிருந்தாள். எங்கே தனக்குக் குழந்தை பிறந்து விட்டால், மூத்தாள் குழந்தைகளுக்குத் துரோகம் செய்து விடுவோமோ என்ற அச்சம்.. ஆனால், தன்னை மலடி என்று ஊரார் சொல்லிவிடக் கூடாது. அதனால் தன் கணவருக்கு எந்த அவமானமும் வந்துவிடக்கூடாது என்று நினைத்து தன் மனத்தை மாற்றிக் கொண்டதன் விளைவாக அவளுக்கு தெய்வானை, உமையாள் என்ற இரண்டு பெண் குழந்தைகள் பிறந்தன. விதி அவளையும் விட்டு வைக்கவில்லை. ஆக நான்கு குழந்தைகளும் தாயற்ற நிலையில்.... எவ்வளவு சொல்லியும், மூன்றாம் தாரம் வேண்டவே வேண்டாம் என்று மறுத்து விட்டார் முத்தையா, பதிலாக அழகப்பனுக்கு திருமணம் செய்து வைத்து ஒரு மருமகளை கொண்டுவரத் திட்டமிட்டார். முதலில் அழகப்பன் மறுத்தாலும், தம்பி தங்கை களைக் காப்பாற்றிவர வேண்டும் என்ற பாச உணர்வால் திருமணத்திற்குச் சம்மதித்தான். மீனாட்சி ஒரு கலைவாணி. வீணை வாசிப்பதில் வித்தகி. அழகப்பனும் கலை, இலக்கியம் இவற்றில் ஈடுபாடு கொண்டவன். இருவருக்கும் திருமணம் நடந்தேறினாலும் மீனாட்சி, தாய் ஸ்தானத்திற்கு தயாராகவில்லை. இங்கே மீனாட்சியின் பாச உணர்வை நாம் காணமுடிகிறது.

அடுத்து மஞ்சு விரட்டுக்காளையை அடக்கப்போய் அமரராகிறான் அழகப்பன். மீனாட்சி விதவையாகிறாள். குழந்தை இல்லாதவள் விதவையானால் கொண்டு வந்த சீதனத்தோடு தன் தாய் வீட்டுக்குத் திருப்பி அனுப்பப்படவேண்டும். இது அன்று வழக்கத்திலிருந்து வந்த ஒன்று. ஆனால் மீனாட்சி அப்படி செய்யவில்லை. நாத்தனார்மார்களைக் காப்பாற்றிக் கரை சேர்க்க வேண்டும் என்ற தாயுள்ளம் கொண்டு தன் கொழுந்தன் சுப்பையா அம்பலகாரரை மறுமணம் செய்து கொண்டு, அதே வீட்டில் அவருக்கு வாழ்க்கை துணைவியாகவும், குழந்தைகளுக்குத் தாயாகவும் இருந்து சேவகம் செய்கிறாள். இது பெண்ணின் சீர்திருத்தக் கொள்கையை வலுப்படுத்துவதாக அமைந்துள்ளது. பேர் சொல்ல ஒரு பிள்ளை வேண்டும் என்ற எண்ணம் மீனாட்சிக்கு ஏற்பட்டதன் விளைவு ஓர் ஆண்மகவைப் பெற்றெடுத்து, தன் மாமனார் நினைவாக முத்து என்று பெயர் வைக்கிறாள். அவன் மற்ற இளைஞர்களைப் போல் இல்லாமல் படிப்புக்கு முக்கியத்துவம் கொடுத்து டாக்டராகிறான். அவனது ஆசை, கிராமப்புற இளைஞர்களையெல்லாம் வெளியூர்களுக்கு அனுப்பித் தொழில் கற்று வரச்செய்யவேண்டும். அதனால் சமுதாயம் உயர்வடைந்து பிறரோடு போட்டி போட்டு வளர வேண்டும் என்ற பரந்த நோக்கம் காரணமாக, தான் வெளிநாடு செல்லாமல் கிராமத்திலேயே ஏழை எளியவர்களுக்கு இலவச மருத்துவ உதவி செய்ய எண்ணி அங்கேயே கிளினிக்கில் சமூக சேவை செய்து வந்தான். நல்ல உள்ளங்களுக்குத்தான் எவ்வளவு சோதனை? மஞ்சுவிரட்டுக் காளையால் குத்தித் தூக்கி எறியப்பட்ட வனைக் காப்பாற்றப்போய், அந்த மாடே முத்துவுக்கு எமனாக இருந்துவிட்டதே? பயனற்ற மஞ்சுவிரட்டு வேண்டாம் என்று குரல் கொடுத்தவன் பேச்சை, காளையும்

கேட்கவில்லை! தன் காரியத்தை கச்சிதமாக முடித்துவிட்டது. ஊராரால் ஒப்பாரிதான் வைக்கமுடிந்தது.

இந்த நேரம் பட்டணத்திலிருந்து லதா என்ற பெண் 'கிளினிக்' குக்கு வந்து சேர்கிறாள். மீனாட்சிக்கும் மற்றவர்களுக்கும் அவள், யார் என்று முதலில் தெரியவில்லை. பின்னர் முத்துவின் காதலி என்று தெரிய வரும்போது மீனாட்சி பரிவோடு, "அம்மா! நீ வாழ வேண்டிய பெண். விருப்பம்போல யாரையாவது கல்யாணம் செய்து கொண்டு சந்தோஷமாக இரு" என்று சொல்கிறாள். அப்போது குறுக்கிட்ட லதா, "பெண் என்றாலே அவளுக்குத் திருமணம் ஆகணும், குழந்தை பெறணும்னு கட்டாயம் இல்லை. நான் இங்கு என் வீட்டில் தங்கி, சமூகத் தொண்டு செய்யப்போகிறேன்". என்று தீர்க்கமான முடிவைத் தெரிவிக்கிறாள். மீனாட்சியும் அவளது அன்பிலும் பண்பிலும் திளைத்துப்போய் அப்படியே லதாவை அணைத்துக் கொள்கிறாள். இங்கு, கதாசிரியர் புராணகாலத்து திலகவதியாரை நினை வூட்டிப் பெண்ணின் பெருமைக்கு மகுடம் சூட்டுகிறார்.

கடைசியாக ஒன்று கேட்டுவிட்டு எழுங்கள்! குடும்பத்தலைவி மீனாட்சி பங்கு கொண்ட ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் அவளது குணச்சித்திரம் உயர்ந்து கொண்டே போவதைப் பார்த்தோம். அவள் மட்டுமல்ல - வள்ளி, லதா ஆகிய பாத்திரங்களும் பெண்மையின் பல்வேறு பரிமாணங்களைக் கொண்டுள்ளது என அறியும்போது நாம் நெக்குருகுகிறோம்.

மொத்தத்தில் இந்த "மண்ணின் மைந்தன்" எழுதிய கதையில், பெண்மைக்குத் தான் எத்தனை வண்ணங்கள்? பொதுவாக, பெண்கள் வீட்டுக்கு வெளியே, கணவனுக்கு அடங்கி நடப்பவர்களாகத் தெரிந்தாலும், வீட்டுக்குள்ளே அவர்கள் அதிகாரம் செலுத்தி நினைத்ததை நடத்தி முடிப்பவர்களாக இருக்கிறார்கள் என்ற ஆசிரியரின் கூற்று முற்றிலும் நிஜமான உண்மையே! இதை அனுபவ பூர்வமாக நான் சமீபத்தில் காண நேர்ந்தது. பெரிய நாயகி அம்மன் கும்பாபிஷேக நிதி திரட்டுக் குழுவினரோடு சென்னை சென்றிருந்தோம். அங்கு வாழ்ந்து வரும் நமது சமுதாய அன்பர்கள், நண்பர்கள் மற்றும் தொழிலதிபர்களைச் சந்தித்து நன்கொடை கேட்கும்போது, ஒவ்வொரு வீட்டிலும் கணவன்மார்கள், தங்கள் துணை வியரைத் தனியாக அழைத்துச் சென்று கலந்தாலோசித்துப் பின்னர் இவ்வளவு தொகை என்று குறிப்பிட்டு "எழுதிக் கொள்ளுங்கள்" என்று பெருமிதத்துடன் சொன்னதை கண்ணாரக் கண்டு மகிழ்ந்தோம். யாரேனும் நன்கொடை குறைவாக எழுத நினைத்தால் அவர்களிடம் தமாஷாக "நிதிமந்திரியைக் கலந்து கொண்டு தாராளமாக வழங்குங்கள்" என்று சொல்லிப்பெற்று வந்ததுமுண்டு.

ஆக, ஒவ்வொரு வீட்டிலும் பெண்கள் மதிக்கப்படுகிறார்கள். அவர்களுக்கும் அதிகாரம் வழங்கப் பட்டிருக்கிறது என்று கேள்விப்படும்போது பெருமைப்பட வேண்டிய விஷயம்தான். மொத்தத்தில் பெண்ணின் பெருமையே, பெருமை!



# ஊர்மிளை

**பேராசிரியர் டாக்டர் அய்க்கண்**

இக்கதை, கன்னடத்தில் மொழி பெயர்க்கப்பெற்று TARANGA என்னும் வார இதழிலும், சமஸ்கிருதத்தில் மொழி பெயர்க்கப்பெற்று SAMBHASHANA SANDESHAH என்னும் மாத இதழிலும் வெளியாகியுள்ளது.

அமைச்சர் சுமந்திரனோடு கருவூல நிதி தொடர்பான ஆலோசனையை முடித்துக்கொண்டு அவசரமாக நிலா முற்றத்தை நோக்கி வந்தான் இராமன்.

முற்றத்திற்குப் போகும் வழியில், இடுப்பளவு உயரமான தடுப்புச் சுவரின் மேல் சாய்ந்தபடி, கீழ்வானத்தில் எழும்பி நித்திலக் கிரணங்களை வாரி இரைத்துப் பிரகாசித்துக் கொண்டிருக்கும் முழு நிலவைப் பார்த்தபடி நின்ற ஊர்மிளை, மன்னன் நடந்து வரும் அரவம் கேட்டு, சட்டென்று திரும்பி, புன்முறுவலுடன் பணிந்து வணக்கம் தெரிவித்தாள்.

'அரச குடும்பத்தினர் எல்லோரும் அரண்மனை நிலா முற்றத்தில் விருந்துக்குப் போயிருப்பதாகச் சொன்னார்களே, இலக்குவன் தேவி மட்டும் அங்கே போகாமல், ஏன் இங்கே நின்று கொண்டிருக்கிறாள்' என்ற திகைப்புடன் அவளை நிமிர்ந்து நோக்கி "ஊர்மிளா! ஏன் இங்கே நின்று கொண்டிருக்கிறாய்? முழு நிலவின் அழகில் லயித்திருக்கிறாயா?" என்று சிரித்தபடி எதிரே நின்றான் அயோத்தி மன்னன்.

"ஆம், அரசே! நிலவின் முகத்திலுள்ள மறுவைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன்" என்று ஊர்மிளா சொன்ன வார்த்தைகளில் ஏதோ உட்பொருள் நெருடுவதுபோல் தோன்றியது இராமனுக்கு.

ஊர்மிளையின் இயல்பான அறிவு நுட்பம் அவனுக்குத் தெரியும். வயதில் இளையவளாக இருந்தாலும் இலக்கிய ரஸனையும் அனுபவ அறிவும் நிறைந்த புத்திசாலிப் பெண் அவள்.

"அழகிய நிலவிலே அந்த மறு இருப்பதைப் பார்த்து வருத்தப்படுகிறாயா, ஊர்மிளா?"

"இல்லை.. பார்த்து ரசிக்கிறேன்... உண்மையில், அது மறு இல்லை. நிலவின் அழகை அதுதான் நிறைவு செய்கிறது என்று எனக்குத் தோன்றுகிறது... குழந்தையின் முகத்தை அலங்கரித்துக் கடைசியில் கன்னத்தில் திருஷ்டிப் பொட்டு வைக்கிறாளே, தாய் - அது குழந்தையின் அழகைக் களங்கப்படுத்துகிறதா? இல்லையே? ... அதுதான் அழகையே அதிகப்படுத்துகிறது.... சூரியனைப்போல, மறுவே இல்லாமல் பூரண பிரகாசமாயிருந்தால், நிலவை நாம் முழுமையாக இவ்வாறு நீண்ட நேரம் பார்த்து ரசித்துக் கொண்டிருக்க முடியுமா?"

"பிரமாதம், ஊர்மிளா! ராஜரிஷி ஜனக மாமன்னருக்குப் பிறந்த மகளாயிற்றே?* நீ அறிவார்ந்த ரஸனையுடன் பேசுவதில் என்ன வியப்பு இருக்கிறது?" என்று கலகலப்பாகச் சிரித்தான் கோசல மன்னன். அவனுடைய பாராட்டால் மெல்ல நாணி முகம் சிவந்தவளாய், சுற்றும் முற்றும் பார்த்தாள் இலக்குவன் தேவி.

*சீதை, ஜனகர் உழுத மண்ணின் சாலில் கண்டெடுத்து வளர்க்கப்பட்டவள். சீதையை வளர்க்கத் தொடங்கிய பிறகு ஜனகருக்கு ஊர்மிளை என்ற ஒரே மகள் பிறந்தாள். ஜனகரின் தம்பி குசத்துவசனுக்கு, மாண்டவி, சுருத கீர்த்தி என்ற பெண்கள் பிறந்தார்கள்.

நிலா முற்றத்தில் அரச குடும்பத்தினர் எல்லோரும் கூடிப் பேசிப் பாடி மகிழும் ஆரவாரம், சரயு நதியின் நீரோட்ட ஓசையின் பின்னணியோடு சிறிது தூரத்தில் ஒலித்துக்கொண்டிருந்தது.

"அரசே! நீங்கள் நாடு திரும்பி முடி சூட்டுவிழா நடந்து நேற்றுவரை, இலங்கை, கிட்கிந்தை முதலான பல நாட்டு அரசர்களும் பரிவாரங்களும் சூழ, வீற்றிருந்த உங்களைத் தனியே தரிசிக்கவே முடியவில்லை. அவர்கள் எல்லோரும் விடைபெற்றுச் சென்ற பிறகு, இப்போதுதான் உங்களிடம் தனியே பேச முடிகிறது. அமைச்சரிடம் ஆலோசனை முடிந்தபிறகு, நிலா முற்றத்திற்கு வருவீர்கள் என்ற நம்பிக்கையில்தான், இங்கே வழியில் நான் நின்று கொண்டிருக்கிறேன்..." என்று மெல்லிய குரலில் சொல்லிக்கொண்டிருந்தாள் ஊர்மிளை.

அவள் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான் மன்னன்: "என்னிடம் ஏதாவது பேச வேண்டுமா?.. வா, அதோ விருந்தினர் மண்டபத்தில் போய்ப் பேசலாம்.." என்று பக்கத்தில், திறந்திருந்த மண்டபத்திற்குள் போய், ஓர் ஆசனத்தில் அமர்ந்து கொண்டான் அவன்.

வண்ண மரத்தைத் தழுவி நிற்கும் பசிய பூங்கொடிபோல், எதிரே அழகிய சிற்ப வேலைப்பாடு அமைந்த தூணில் சாய்ந்தபடி பணிவாக நின்றாள் அவள்.

"அரசே! உங்களிடம் ஒரு கேள்வி கேட்கவேண்டும் என்று நெடு நாட்களாகக் காத்துக்கொண்டிருக்கிறேன்-" என்று அவள் அழுத்தமான குரலில், சிவந்த இதழ்கள் இறுக்கமாய் அசைய, பேச்சைத் தொடங்கியதும், இராமன் சட்டென்று நிமிர்ந்து கொண்டான்.

'இந்தப் பெண்ணிடமிருந்து என்ன கேள்வி வெடிக்குமோ?' என்று நெஞ்சுக்குள் ஓர் உதறல் கிளம்பியது அவனுக்கு.

"*சீதாப்பிராட்டிக்கு ஏன் அக்கினிப் பரீட்சை வைத்தீர்கள்?*" என்று பட்டென்று நேரடியாகக் கேட்டாள் ஊர்மிளை.

அந்தக் கேள்வியின் கடுமையை, தன் இயல்பான புன்முறுவலால் சமனப் படுத்த முயன்றவனாய் மெல்லச் சிரித்தான் இராமன்.

"ஊர்மிளா! இந்தக் கேள்விக்கு என்ன பதில் என்று எல்லோருக்கும் தெரியும்" என்று தொடங்கி நிறுத்தினான், அவன்.

"ஆனால் - யாருமே உங்களிடம் இந்தக் கேள்வியைக் கேட்கவில்லை என்று எனக்குத் தெரியும்: விண்ணுலகத்திலிருந்து வந்த தசரத மாமன்னர்கூட, தானே இந்தக் கேள்வியைக் கேட்டுப் பதில் சொல்லிக்கொண்டாரே தவிர, யாருமே உங்களை நேருக்குநேர் இந்தக் கேள்வியைக் கேட்கவில்லை" என்ற ஊர்மிளையின் பேச்சில் ஒவ்வொரு சொல்லும் இறுக்கமான உச்சரிப்புகளாக ஒலித்தன.

நீண்ட இருக்கையிலே தன் உடலை நன்றாகப் பதிந்து கொண்டவனாய், விளக்கமாகப் பேசத் தொடங்கினான் சீதாராமன்:

"ஊர்மிளா! ஒரு மன்னன் மட்டுமல்ல - அவனுடைய மனைவியும் ஒழுக்கத்தில் சந்தேகத்திற்கு அப்பாற்பட்டவளாக இருக்க வேண்டும் என்பது என் அரசியல் கொள்கை. மன்னன் என்பவன், மக்களுக்குத் தலைவன் மட்டுமல்ல - மக்களுக்குத் தாய், தந்தை, தோழன், வழிகாட்டி, ஆசிரியன், தெய்வம் எல்லாம்.... 'மன்னன் உயிர்: மக்கள் வெறும் உடம்பு' என்ற காலம் போய்விட்டது: 'மக்கள்தான் உயிர்: மன்னன் வெறும் உடம்புதான்' என்ற அரச இலக்கணம், இந்த அயோத்தியில் பல ஆண்டுகளுக்கு முன்பிருந்தே நிலை பெற்றிருக்கிறது.."

"தெரியும்.. தசரத மன்னர், அப்படித்தான் உயிர்களெல்லாம் தங்கியிருக்கின்ற உடம்பாகத் தன்னைக் கருதிக்கொண்டு ஆட்சி செய்கிறார் என்று

என் தந்தை என்னிடம் அடிக்கடி சொல்லிப் பாராட்டியிருக்கிறார்" என்று முகமெல்லாம் பெருமை மிளிரக் குறுக்கிட்டுச் சொன்னாள் மருமகள்.

"மக்கள் எப்படி வாழவேண்டும், குடும்பம் எவ்வாறு இருக்கவேண்டும் என்பதற்கெல்லாம், முன்னோடி உதாரண மாக மன்னன் விளங்கவேண்டும் என்ற லட்சியத்தை நான் கொண்டிருக்கிறேன். ஒரு மன்னனுக்கு வீரமும் அறிவும் மட்டுமல்ல - அன்பும் கருணையும் முக்கியம். மக்களிடமிருந்து விலகிப்போய் உயர்ந்த அரியாசனத்தில் வீற்றிருப்பதை விட, மக்களின் எளிய இதயங்களில் குடியிருப்பவனே, ஆதர்ஸ மன்னன்" என்று தொடர்ந்து பேசினான் இராமன்.

"நீங்கள் இளவரசராக இருந்த சமயத்திலும், அரச குடும்பத்தினர் என்ற கர்வம் இல்லாமல், தெருக்களில் எதிரே வருகின்ற மக்களை நெருங்கி, அன்போடு பேசி, வீட்டில் உங்கள் மனைவி, மக்கள் நலமாக இருக்கிறார்களா? என்ன தொழில் செய்கிறீர்கள்? உங்களுக்கு ஏதாவது குறை இருக்கிறதா? என்று, பரிவோடு விசாரிப்பீர்கள் என்று கேள்விப்பட்டிருக் கிறேன்.." என்று உளமார ஆமோதித்தாள் கொழுந்தி.

"அப்படிப்பட்ட மன்னனின் மனைவி, இலங்கையில் கொடிய அரக்கனின் அசோக வனத்தில் பல மாதங்கள் தங்கியிருந்தபோது, அவள் அங்கே கற்பிழக்காமல் இருந்திருக்க முடியுமா என்று என் குடிமக்களில் யாராவது சந்தேகப்பட்டால்-" என்று இராமன் தொடர்ந்ததுமே, படபடப்புடன் குறுக்கிட்டாள் ஊர்மிளா:

"இல்லை... சீதாப்பிராட்டியை அறிந்த குடிமக்கள், நிச்சயமாக அப்படிச் சந்தேகப்படமாட்டார்கள்... யாராவது குடிவெறியில் நினைவு தப்பி உளறினால் கூட, இந்த அயோத்தியின் மக்கள் எவரும், என் தமக்கையைச் சந்தேகிக்க மாட்டார்கள்.... அது கிடக்கட்டும் - நீங்கள் அக்கினிப்பரீட்சை நடத்திய இலங்கையில், அயோத்தி நகரக் குடிமக்கள் யாருமே இல்லையே, சந்தேகப்பட?..." என்று ஊர்மிளை, நறுக் என்று குறுக்குக் கேள்வி எழுப்பியதும், இராமன் தடுமாறிப் போனான். அவளது கேள்வியின் கூர்மை, அவன் நெஞ்சுக்குள் சாட்டையடியாய் விழுந்து ரணப்படுத்தியது.

"இலங்கையிலே, சீதையை ஏற்றுக் கொண்டபோதே அக்கினிப் பரீட்சை நடத்திவிட்டார் மன்னர் என்று இங்கே வரும்போது சொல்லிவிடலாம், இல்லையா?" என்று தட்டுத் தடுமாறிச் சமாளித்தான் மன்னன்.

"இல்லை.... இந்தச் சமாதானத்தில் நான் திருப்தியடையமாட்டேன். அரசே! என் கேள்வி இன்னும் அப்படியே இருக்கிறது: என் கேள்விக்கு இன்னும் சரியான பதில் வரவில்லை. அதை நீங்கள் சொல்லும் வரை நான் அமைதியடைய மாட்டேன்" என்று அழுத்தந் திருத்தமாக வலியுறுத்தியபடி, கால்களை நிலையாக இறுக ஊன்றி நின்று கொண்டிருந்தாள் ஊர்மிளா.

அவளது இறுகியிருந்த முகத்தை நோக்கியபடி சிந்தனையில் மூழ்கி யிருந்தான் இராமன்.

"அரசே! நீங்கள் சாதாரண மானிடனைவிட, சாதாரண மன்னரை விட, எவ்வளவோ உயர்ந்தவர் என்று எனக்குத் தெரியும்.. என் தந்தை ஜனகரிடம் சந்நியாச அம்சம் கலந்திருப்பதுபோல, உங்களிடம் தெய்வாம்சம் இணைந்திருக்கிறது என்பதை நான் உணர்வேன்... ஆகவே நீங்கள், ஒரு சாதாரண மன்னனாக, என் தமக்கைக்கு அக்கினிச் சோதனை நடத்தவில்லை: அதற்கு வேறு காரணம் - அல்லது, காரணங்கள் - இருக்கின்றன.." என்று அழுத்தமான குரலில் சொல்லி, அவன் முகத்தில் தன் தீர்க்கமான பார்வையைக் குவித்தபடி நின்று கொண்டிருந்தாள் ஊர்மிளை....

✲ **முன்பு** ஒருமுறை - அவள் கேட்ட ஒரு கேள்வி, இப்படித்தான் இராமனை உலுக்கிவிட்டது! சாதாரண

நிலா முற்றத்தில் அரச குடும்பத்தினர் எல்லோரும் கூடிப் பேசிப் பாடி மகிழும் ஆரவாரம், சரயு நதியின் நீரோட்ட ஓசையின் பின்னணியோடு சிறிது தூரத்தில் ஒலித்துக்கொண்டிருந்தது.

"அரசே! நீங்கள் நாடு திரும்பி முடி சூட்டுவிழா நடந்து நேற்றுவரை, இலங்கை, கிட்கிந்தை முதலான பல நாட்டு அரசர்களும் பரிவாரங்களும் சூழ, வீற்றிருந்த உங்களைத் தனியே தரிசிக்கவே முடியவில்லை. அவர்கள் எல்லோரும் விடைபெற்றுச் சென்ற பிறகு, இப்போதுதான் உங்களிடம் தனியே பேச முடிகிறது. அமைச்சரிடம் ஆலோசனை முடிந்தபிறகு, நிலா முற்றத்திற்கு வருவீர்கள் என்ற நம்பிக்கையில்தான், இங்கே வழியில் நான் நின்று கொண்டிருக்கிறேன்..." என்று மெல்லிய குரலில் சொல்லிக்கொண்டிருந்தாள் ஊர்மிளை.

அவள் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான் மன்னன்: "என்னிடம் ஏதாவது பேச வேண்டுமா?.. வா, அதோ விருந்தினர் மண்டபத்தில் போய்ப் பேசலாம்.." என்று பக்கத்தில், திறந்திருந்த மண்டபத்திற்குள் போய், ஓர் ஆசனத்தில் அமர்ந்து கொண்டான் அவன்.

வண்ண மரத்தைத் தழுவி நிற்கும் பசிய பூங்கொடிபோல், எதிரே அழகிய சிற்ப வேலைப்பாடு அமைந்த தூணில் சாய்ந்தபடி பணிவாக நின்றாள் அவள்.

"அரசே! உங்களிடம் ஒரு கேள்வி கேட்கவேண்டும் என்று நெடு நாட்களாகக் காத்துக்கொண்டிருக்கிறேன்-" என்று அவள் அழுத்தமான குரலில், சிவந்த இதழ்கள் இறுக்கமாய் அசைய, பேச்சைத் தொடங்கியதும், இராமன் சட்டென்று நிமிர்ந்து கொண்டான்.

'இந்தப் பெண்ணிடமிருந்து என்ன கேள்வி வெடிக்குமோ?' என்று நெஞ்சுக்குள் ஓர் உதறல் கிளம்பியது அவனுக்கு.

"சீதாப்பிராட்டிக்கு ஏன் அக்கினிப் பரீட்சை வைத்தீர்கள்?" என்று பட்டென்று நேரடியாகக் கேட்டாள் ஊர்மிளை.

அந்தக் கேள்வியின் கடுமையை, தன் இயல்பான புன்முறுவலால் சமனப்படுத்த முயன்றவனாய் மெல்லச் சிரித்தான் இராமன்.

"ஊர்மிளா! இந்தக் கேள்விக்கு என்ன பதில் என்று எல்லோருக்கும் தெரியும்" என்று தொடங்கி நிறுத்தினான், அவன்.

"ஆனால் - யாருமே உங்களிடம் இந்தக் கேள்வியைக் கேட்கவில்லை என்று எனக்குத் தெரியும்: விண்ணுலகத்திலிருந்து வந்த தசரத மாமன்னர்கூட, தானே இந்தக் கேள்வியைக் கேட்டுப் பதில் சொல்லிக்கொண்டாரே தவிர, யாருமே உங்களை நேருக்குநேர் இந்தக் கேள்வியைக் கேட்கவில்லை" என்ற ஊர்மிளையின் பேச்சில் ஒவ்வொரு சொல்லும் இறுக்கமான உச்சரிப்புகளாக ஒலித்தன.

நீண்ட இருக்கையிலே தன் உடலை நன்றாகப் பதிந்து கொண்டவனாய், விளக்கமாகப் பேசத் தொடங்கினான் சீதாராமன்:

"ஊர்மிளா! ஒரு மன்னன் மட்டுமல்ல - அவனுடைய மனைவியும் ஒழுக்கத்தில் சந்தேகத்திற்கு அப்பாற்பட்டவளாக இருக்க வேண்டும் என்பது என் அரசியல் கொள்கை. மன்னன் என்பவன், மக்களுக்குத் தலைவன் மட்டுமல்ல - மக்களுக்குத் தாய், தந்தை, தோழன், வழிகாட்டி, ஆசிரியன், தெய்வம் எல்லாம்.... 'மன்னன் உயிர்: மக்கள் வெறும் உடம்பு' என்ற காலம் போய்விட்டது: 'மக்கள்தான் உயிர்: மன்னன் வெறும் உடம்புதான்' என்ற அரச இலக்கணம், இந்த அயோத்தியில் பல ஆண்டுகளுக்கு முன்பிருந்தே நிலை பெற்றிருக்கிறது.."

"தெரியும்.. தசரத மன்னர், அப்படித்தான் உயிர்களெல்லாம் தங்கியிருக்கின்ற உடம்பாகத் தன்னைக் கருதிக்கொண்டு ஆட்சி செய்கிறார் என்று

என் தந்தை என்னிடம் அடிக்கடி சொல்லிப் பாராட்டியிருக்கிறார்" என்று முகமெல்லாம் பெருமை மிளிரக் குறுக்கிட்டுச் சொன்னாள் மருமகள்.

"மக்கள் எப்படி வாழவேண்டும், குடும்பம் எவ்வாறு இருக்கவேண்டும் என்பதற்கெல்லாம், முன்னோடி உதாரண மாக மன்னன் விளங்கவேண்டும் என்ற லட்சியத்தை நான் கொண்டிருக்கிறேன். ஒரு மன்னனுக்கு வீரமும் அறிவும் மட்டுமல்ல - அன்பும் கருணையும் முக்கியம். மக்களிடமிருந்து விலகிப்போய் உயர்ந்த அரியாசனத்தில் வீற்றிருப்பதை விட, மக்களின் எளிய இதயங்களில் குடியிருப்பவனே, ஆதர்ஸ மன்னன்" என்று தொடர்ந்து பேசினான் இராமன்.

"நீங்கள் இளவரசராக இருந்த சமயத்திலும், அரச குடும்பத்தினர் என்ற கர்வம் இல்லாமல், தெருக்களில் எதிரே வருகின்ற மக்களை நெருங்கி, அன்போடு பேசி, வீட்டில் உங்கள் மனைவி, மக்கள் நலமாக இருக்கிறார்களா? என்ன தொழில் செய்கிறீர்கள்? உங்களுக்கு ஏதாவது குறை இருக்கிறதா? என்று பரிவோடு விசாரிப்பீர்கள் என்று கேள்விப்பட்டிருக் கிறேன்.." என்று உளமார ஆமோதித்தாள் கொழுந்தி.

"அப்படிப்பட்ட மன்னனின் மனைவி, இலங்கையில் கொடிய அரக்கனின் அசோக வனத்தில் பல மாதங்கள் தங்கியிருந்தபோது, அவள் அங்கே கற்பிழக்காமல் இருந்திருக்க முடியுமா என்று என் குடிமக்களில் யாராவது சந்தேகப்பட்டால்-" என்று இராமன் தொடர்ந்ததுமே, படபடப்புடன் குறுக்கிட்டாள் ஊர்மிளா.

"இல்லை... சீதாப்பிராட்டியை அறிந்த குடிமக்கள், நிச்சயமாக அப்படிச் சந்தேகப்படமாட்டார்கள்... யாராவது குடிவெறியில் நினைவு தப்பி உளறினால் கூட, இந்த அயோத்தியின் மக்கள் எவரும், என் தமக்கையைச் சந்தேகிக்க மாட்டார்கள்.... அது கிடக்கட்டும் - நீங்கள் அக்கினிப்பரீட்சை நடத்திய இலங்கையில், அயோத்தி நகரக் குடிமக்கள் யாருமே இல்லையே, சந்தேகப்பட?..." என்று ஊர்மிளை, நறுக் என்று குறுக்குக் கேள்வி எழுப்பியதும், இராமன் தடுமாறிப் போனான். அவளது கேள்வியின் கூர்மை, அவன் நெஞ்சுக்குள் சாட்டையடியாய் விழுந்து ரணப்படுத்தியது.

"இலங்கையிலே, சீதையை ஏற்றுக் கொண்டபோதே அக்கினிப் பரீட்சை நடத்திவிட்டார் மன்னர் என்று இங்கே வரும்போது சொல்லிவிடலாம், இல்லையா?" என்று தட்டுத் தடுமாறிச் சமாளித்தான் மன்னன்.

"இல்லை.... இந்தச் சமாதானத்தில் நான் திருப்தியடையமாட்டேன். அரசே! என் கேள்வி இன்னும் அப்படியே இருக்கிறது: என் கேள்விக்கு இன்னும் சரியான பதில் வரவில்லை. அதை நீங்கள் சொல்லும் வரை நான் அமைதியடைய மாட்டேன்" என்று அழுத்தந் திருத்தமாக வலியுறுத்தியபடி, கால்களை நிலையாக இறுக ஊன்றி நின்று கொண்டிருந்தாள் ஊர்மிளா.

அவளது இறுகியிருந்த முகத்தை நோக்கியபடி சிந்தனையில் மூழ்கி யிருந்தான் இராமன்.

"அரசே! நீங்கள் சாதாரண மானிடனைவிட, சாதாரண மன்னரை விட, எவ்வளவோ உயர்ந்தவர் என்று எனக்குத் தெரியும்.. என் தந்தை ஜனகரிடம் சந்நியாச அம்சம் கலந்திருப்பதுபோல, உங்களிடம் தெய்வாம்சம் இணைந்திருக்கிறது என்பதை நான் உணர்வேன்... ஆகவே நீங்கள், ஒரு சாதாரண மன்னனாக, என் தமக்கைக்கு அக்கினிச் சோதனை நடத்தவில்லை: அதற்கு வேறு காரணம் - அல்லது, காரணங்கள் - இருக்கின்றன.." என்று அழுத்தமான குரலில் சொல்லி, அவன் முகத்தில் தன் தீர்க்கமான பார்வையைக் குவித்தபடி நின்று கொண்டிருந்தாள் ஊர்மிளை....

⁕ **முன்பு** ஒருமுறை - அவள் கேட்ட ஒரு கேள்வி, இப்படித்தான் இராமனை உலுக்கிவிட்டது! சாதாரண

உலுக்கல் அல்ல - ஏறத்தாழ பதினான்கு ஆண்டுகளாக அவனை உலுக்கிக் கொண்டிருந்தது அந்தக் கேள்வி.....

**அன்றும்**, இதேபோல் முழுநிலவு நாள்தான்: சித்திர கூட ஆசிரமத்தின் பசுமையான சூழலில், வெள்ளிய ஒளியை உமிழ்ந்தபடி, அமைதியாக அயோத்தி நகர்ப் பரிவாரங்களின் மேல் படிந் திருந்தது நிலவு.

பகல் பொழுதின் அவல நிகழ்வுகளில் அயர்ந்துபோய், உறங்கிக் கொண்டிருந்தார்கள் அரச குடும்பத் தினரும் மக்களும் படை வீரர்களும்.... கேகய நாடு சென்றிருந்த பரதன், அயோத்திக்குத் திரும்பி வந்து, தனக்காக கைகேயி வாங்கி வைத்திருந்த அரச பதவியை உதறித் தள்ளிவிட்டு, இறந்த தந்தைக்கு ஈமக்கடன் செய்யும் உரிமையையும் இழந்த வேதனைக் குள்ளாகி, கானகம் சென்ற இராமனை மீட்டு நகரத்துக்குக் கூட்டி வந்து அரசனாக்கும் எண்ணத்தில், வசிட்ட முனிவர், அமைச்சர்கள், அரசகுடும்பத் தினர், நாற்பெரும் படை வீரர்கள், பொதுமக்கள் உடன்வர, அண்ணனைத் தேடிவந்தான்.

பரதன், படைகளுடன் சித்திரகூட மலையை நோக்கி வருவதைப் பார்த்த இலக்குவன், வழக்கம்போல் சினத்தின் சிகரத்தில் ஏறி நின்றான்

"காட்டுக்குப் போன பிறகும் நம்மைத் தொடர்ந்து வந்து அழிக்க நினைக்கும் கைகேயியின் மகனையும் படைகளையும் அழிப்பேன்" என்று வீராவேசமாகப் பொங்கிய தம்பியை அமைதிப்படுத்தினான் இராமன் :

"நீ என்னிடம் வைத்திருக்கும் அளவற்ற அன்பால், என் எதிரில் வருபவர்களெல்லாம், எதிரிகளாக உன் கண்களுக்குத் தோன்றுகிறார்கள்... பரதன் நம்மோடு போரிட வரவில்லை: தனக்குக் கிடைத்த அரசுரிமையை என்னிடம் கொடுத்து அழைத்துப்போக வருகிறான்" என்று தெரிவித்தான் இராமன்.

அரச உடை இல்லாமல், புழுதி படிந்த உடலோடும் சடாமுடியோடும் வாடிய முகத்தினனாக வந்துநின்ற பரதனைப் பார்த்து இலக்குவன் நெகிழ்ந்து போனான்.

தந்தை இறந்த செய்தி, இராமனைச் சோகவெள்ளத்தில் ஆழ்த்தியது. சித்திரகூட ஆசிரமத்திலேயே, அரசத் தாய்மார்கள். வசிட்ட முனிவர், அமைச்சர்கள் சூழ்ந்திருக்க, தந்தைக்குச் செய்ய வேண்டிய ஈமக் கடன்களையும் தர்ப்பணமாகச் செய்தான் இராமன்.

குடும்பத்தினர் எல்லோரும் அழுது புலம்பிப் பேசிக்கொண்டிருக்கும்போது, இரவுப்பொழுதாகிவிட்டது. அனைவரும் ஆசிரமத்திலேயே தங்கி உறங்கினார்கள்....

இராமனுக்கு மட்டும் அப்போது உறக்கம் ஏற்படாமல், நெஞ்சில் கவலை உசுப்பிக்கொண்டிருந்தது... மறுநாள் விடிந்ததும், பரதன் தன்னிடம் அரசுரிமையை வழங்கி நாட்டுக்குத் திரும்பக் கட்டாயப்படுத்துவான் என்று இராமனுக்குத் தெரியும். தந்தை சொல்லுக்காக வனவாசம் மேற்கொண்டி ருக்கும் இராமன். எவ்வாறு தம்பி பரதனைச் சமாதானப்படுத்தி அயோத்திக்கு அனுப்பி வைப்பது என்று நெடு நேரமாக யோசித்துக் கொண்டே மெல்ல நடந்து போய், தூரத்தே ஓர் அரச மரத்தடியில் உட்கார்ந்தான்.

அப்போது, அவனை நோக்கி ஓர் இளம் பெண் வருவதைப் பார்த்துத் திகைத்தான் அவன். நிலா வெளிச்சத்தில் அந்தப் பெண் இலக்குவனின் தேவி ஊர்மிளை என்று புலனாகியதும், இராமன் மேலும் திடுக்கிட்டுப் போனான்:

"ஊர்மிளா! நீ.. எப்படி... இந்த நேரத்தில் இங்கே வந்தாய்?.... தூங்க வில்லையா?" என்று பரிவோடு கேட்டான் அவன்.

முகமெல்லாம் துயரம் அழுத்த மாய்ப் பதிந்து, விழிகளில் ஈரம் காயாமல் இன்னும் நனைந்திருக்க, வாடிய பசும் கொடியாய் அவன் எதிரே நின்றாள் ஊர்மிளை.

"இன்று ஒரு நாள் தூங்காவிட்டால் என்ன, இனிமேல் பதினான்கு ஆண்டுகள் எப்போதும் தூங்கிக்கொண்டிருக்க வேண்டியவள்தானே?" என்று உடைந்த குரலில் ஒலித்த அவளுடைய பேச்சின் அவலம், இராமன் உள்ளத்தில் தீயாய்ச் சுட்டது.

"ஊர்மிளா!-" என்று மேலே தொடர்ந்து பேச வாயில்லாதவனாய், அவளது சோர்ந்த முகத்தைப் பார்த்தபடி இருந்தான் அவன்.

"அரசே! நீங்கள் வனவாசம் மேற்கொண்டபோது, சீதாப்பிராட்டியையும் அழைத்துச் சென்றீர்களே, அதேபோல் உங்கள் தம்பியும் ஏன் என்னை அழைத்துச் செல்லவில்லை?" என்று அழுத்தமாக ஊர்மிளை வினா தொடுத் ததும், இராமன் திணறிப் போய்விட்டான்.

அவள் அப்படி ஒரு கேள்வி கேட்பாள் என்று அவன் எதிர்பார்க்காதது மட்டுமல்ல - அவளுடைய கேள்வியின் அர்த்தமே முழுமையாக அவனுக்கு விளங்கவில்லை.

"நானாக, சீதையை அழைத்து வரவில்லை: நான் கானகம் புறப்பட்ட போது, அவளை வரவேண்டாம் என்றுதான் சொன்னேன். 'காட்டில் நீ மிகவும் துன்பப்படுவாய்: எனக்கும் துன்பம் ஏற்படுத்துவாய்' என்று தடுத்தேன் நான். ஆனால் அவள் கேட்கவில்லை: 'நீங்கள் இருக்கும் இடம்தான் எனக்கு அயோத்தி' என்று சொல்லி என் பின்னாலேயே வந்துவிட்டாள்" என்று இராமன் விளக்கி யதும், சட்டென்று குறுக்கிட்டாள் கொழுந்தி:

"அதுபோல், நானும் 'நின் பிரிவினும் சுடுமோ பெருங்காடு?' என்று கேட்டுவிட்டு, கணவரின் பின்னால் வரத்தெரியாதா?" என்று அவள் வெய்துயிர்ப்புடன் வினவியதும், இராமனுக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை.

இலக்குவனோடு காட்டுக்குவர ஊர்மிளை விரும்பிவில்லை அல்லது வர இருந்த அவளைச் சமாதானப்படுத்தி நிறுத்திவைத்து வந்துவிட்டான் இலக்குவன் என்றுதான் இராமன் இதுவரை நினைத்துக் கொண்டிருந்தான். ஆகையால், இப்போது இப்படி ஒரு கேள்வியை ஊர்மிளை கேட்டபோது, இராமனுக்குத் திகைப்பாகி விட்டது.

"அப்படியென்றால் - காட்டுக்குப் போவது பற்றி இலக்குவன் உன்னிடம் சொல்லவேயில்லையா?"

"என்னைப் பார்க்கவே வரவில்லை அரசே! அப்படி அவர் வராததிலும் சொல்லாததிலும் எனக்கு வியப்பு இல்லை. ஏனென்றால், அவரைப் பொறுத்த வரையில், அவருக்கென்று தனி முகவரி இல்லை; 'இராமபிரானின் தம்பி' என்ற முகவரி மட்டும்தான் அவருக்கு... அவரைக்கேட்டால், 'என்னைப் பெற்ற தாயும் தந்தையும் குருவும், தெய்வமும்- எல்லாம் என் அண்ணன்தான்' என்பார். என்னைக் கேட்டால் - அவருக்கு மனைவியும் நீங்கள்தான் என்பேன்.. அரசே! அவருக்கு நான் எப்படி மனைவியானேன்?... தமக்கை சீதை, உங்களுக்கு மனைவியானாள்: ஆகையால் தங்கை ஊர்மிளா, உங்கள் தம்பிக்கு மனைவியானாள்: என் தங்கைகள் மாண்டவியும் சுருதகீர்த்தியும், உங்கள் தம்பிகளுக்கு மனைவியரானார்கள். அப்படித்தானே எங்கள் திருமணங்கள் நடைபெற்றன?... அண்ணலும் நோக்கி, அவளும் நோக்கி, கண்ணொடு கண் இணை கவ்வி, உணர்வு ஒன்றிட, நீங்கள் காதலித்த பிறகு, திருமணம் செய்து கொண்டீர்கள் : ஆனால் நான் திருமணம் செய்து கொண்ட பிறகு, காதலிக்கிறேன் - அவ்வளவுதான் வித்தியாசம்! ..... ஆனாலும், என் கணவருக்கு நீங்கள்தான்

முதல் மனைவி என்பது எனக்குத் தெரியும்...” என்று, உள்ளிருந்து பொங்கிவரும் வேதனை உணர்வுகளைப் பெரு மூச்சில் மடைமாற்றிக் கொண்டு, நிதானமாகப் பேசிக் கொண்டிருந்தாள் ஊர்மிளை.

அவளுடைய குரலில் சுதியாக இழைந்த ஆதங்கம், இராமனுடைய இதயத்தைக் கூர்வாளாய் அறுத்தது. அவளது கருத்தை மறுக்க முடியா விட்டாலும், தம்பிக்காகப் பரிந்து பேச முற்பட்டான் அவன்:

“அப்படியில்லை, ஊர்மிளா! உன்னைச் சந்தித்து வனவாசம் பற்றிச் சொல்லத்தான், உன் அரண்மனைக்கு இலக்குவன் வந்தான். அங்கே தாய் சுமித்திரை, அவனைப் பார்த்ததும் ‘நீ உடனே அண்ணனோடு காட்டுக்குப் புறப்படு : தம்பி என்ற உறவில் போகாதே; வேலைக்காரன்போல் அவனுக்குப் பணி செய்யப் போ...’ என்று கட்டளையிட்டுவிட்டாள். அதனால்தான் உன்னை அழைத்துச் செல்வதுபற்றி அவன் யோசிக்கவில்லை என்று நினைக்கிறேன்.”

“அந்தக் கட்டளை, தாய் என்ற உறவில், அவர்களது விருப்பம்: ஒரு தாய், தன் மகன்களைப் பற்றிக் கவலைப்பட்ட அளவு, மருமகளைப்பற்றி நினைக்க வில்லை என்பது, வியப்பு இல்லை. ஆனால், என் கேள்வி - எல்லோருக்கும் தாய் போன்ற நீங்கள், என்ன செய்தீர்கள், என்ன செய்திருக்க வேண்டும் என்பது தான்... அயோத்தியின் குடிமக்களுக்கு மட்டுமல்ல - அரண்மனையில் இருப்பவர்களுக்கும் நீங்கள்தான் அரசர். நகரிலே, தெருவில் போவோரிடமெல்லாம் ‘உங்கள் மனைவி மக்கள் நலமாயிருக் கிறார்களா? உங்களுக்கு ஏதாவது குறை உண்டா?’ என்று அக்கறையோடு விசாரிக்கின்ற நீங்கள், உங்கள் அரண்மனையில் இருக்கின்ற கொழுந்தி யிடம் ‘உனக்கு ஏதாவது குறையிருக் கிறதா?’ என்று கேட்டீர்களா?... உங்கள் பின்னால் வரும் தம்பியின் பதினான் காண்டு வாழ்க்கை பற்றியோ, அவருடைய மனைவியின் பதினான்காண்டுப் பிரிவைப் பற்றியோ நீங்கள் நினைத்துப் பார்த்தீர்களா?”

- அவளுடைய கேள்விகள், இராமனுடைய நெஞ்சுக்குள் அக்னியாஸ் திரங்களாகப் பாய்ந்து தீப்பிழம்புகளாய்ச் சுட்டுக் கொண்டிருந்தன.....

“அரசே! வேலைக்காரனோடு வேலைக்காரியும் வருவது, பல வழிகளில் எஜமானனுக்கு லாபம்தானே?... அந்த வேலைக்காரி, தனிப்பட்ட முறையில் எஜமானிக்கு அந்தரங்கப் பணியாளாய் இருப்பாளே?” என்று விரக்திச்சிரிப்பு ஊடாக, மேலும் ஊர்மிளை சொன்னது, இராமனுடைய இதயப்புண்ணை இன்னும் ஆழமாகக் குத்திக் கிழித்தது...

இந்தக் கேள்விகளின் தாக்குதலால் இதயம் நைந்துபோன இராமனுக்கு, ஏறத்தாழ பதினான்கு ஆண்டுகளாய் இந்த மன உளைச்சல் வலித்துக் கொண்டே இருந்தது... அதிலும், தனிமையில் இருந்த சீதையை இராவணன் தூக்கிச்சென்ற பிறகு, ஊர்மிளையின் தீர்க்க தரிசனமான பார்வையின் பரிமாணத்தைப் புரிந்து கொண்டான் அவன்....

✲**வனவாசம்** முடிந்து, முடி சூட்டு விழா நடைபெற்று இராமன், அரசனான பிறகு, இப்போது ஊர்மிளை அவனை வழிமறித்துக் கேட்ட கேள்வி, அவனைத் திக்குமுக்காட வைத்தது...

“அயோத்திக்கு வந்ததும், சீதாப்பிராட்டியார் நடந்ததையெல்லாம் என்னிடம் சொல்லி அழுதார்கள். நீங்கள், அவளது கற்பைச் சந்தேகப்பட்டுவிட்டீர்கள் என்பதில் பிராட்டிக்கு ஆழ்ந்த வேதனை... ஆனால், நான் உங்களை அப்படித் தவறாக நினைக்கவில்லை.. உங்களைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியும். பிராட்டியை அக்கினிச் சோதனைக் குள்ளாகியதற்கு, வேறு ஏதோ பூடகமான காரணம், அல்லது காரணங்கள்

இருக்கின்றன என்பது எனக்குத் தெரியும். அதைத்தான் உங்களிடம் கேட்கிறேன்." என்று ஊர்மிளை சொன்னதன் அழுத்தம், அவனைத் தார்மீக நெருக்கடிக்குள் அழுத்திவிட்டது.

அறிவிலும் அனுபவத்திலும் நிறைந்த அந்தப் புத்திசாலிப் பெண்ணை, அலட்சியப்படுத்தி மறுப்பதோ, தவிர்த்து மறைப்பதோ, அவனுக்கு நியாயமாகப் படவில்லை.

உண்மையை அவளிடம் மட்டும் சொல்லிவிடுவது என்ற முடிவுக்கு வந்தான் அவன்.

இருக்கையில் மெல்ல நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு பேசத் தொடங்கினான் இராமன்;

"ஊர்மிளா! நீ யூகித்தது சரிதான் : அந்த அக்கினிச் சோதனைக்குப் பின்னே, இரண்டு காரணங்கள் இருக்கின்றன.... இரண்டு குற்றவாளிகளுக்குத் தண்டனை கொடுக்கவேண்டும் என்று தீர்மானித்தேன் நான் - ஒருவருக்கு, குற்றச்சாட்டு மறைமுகம்: மற்றவருக்கு, தண்டனை மறைமுகம்... புரிகிறதா?" என்று ஆழ்ந்த கனமான குரலில் தீர்க்கமாய் அவன் கேட்ட நுட்பமான கேள்வியின் அர்த்தத்தைப் புரிந்து கொண்டு, அந்தப் பெண் இசைவாய்த் தலையசைத்ததும், அவளது அறிவுப் பரிமாணத்தை உணர்ந்து மேலும் வியப்புக்குள்ளானான் அவன்..

"ஓர் ஆணுக்கோ அல்லது பெண்ணுக்கோ, சந்தேகம் என்பது எவ்வளவு கொடுமையான பழி என்பதைச் சீதைக்குப் புரியவைக்கவேண்டும் என்று நினைத்தேன். தன் கற்பைப் பற்றிச் சந்தேகம் ஏற்பட்டு விட்டதே என்று எப்படி ஓர் உத்தமப்பெண் துடிப்பாளோ, அப்படித்தான், தன் ஒழுக்கத்தைப்பற்றிச் சந்தேகம் ஏற்பட்டுவிட்டதே என்று ஓர் உத்தம ஆணும் துடித்துப்போவான்... மாய மான் கூவிய அபயக்குரல் கேட்டு, உடனே என்னைத் தேடி ஓடாமல், சீதைக்குப் பாதுகாப்பாக நின்று கொண்டிருந்த இலக்குவனைப் பார்த்து, அவள் எவ்வளவு கொடிய வார்த்தைகள் கூறினாள், தெரியுமா?" என்று விழிகளில் சினத்தின் வண்ணம் அழுத்தமாய்ப் படிய, ஆத்திரத்தில் உதடுகள் துடிக்கக் கேட்டான் இராமன்.

இலக்குவன் மீது அவன் எவ்வளவு பாசமும் அன்பும் வைத்திருந்தால், இத்தனை காலம் கழிந்த பிறகும், அமைதியே உருவான இராமனுக்கு இவ்வளவு ஆத்திரம் பொங்கிக் குமுறும் என்பதைப் புரிந்து கொண்டு பிரமித்தாள் ஊர்மிளை.

"தெரியும்.... இளைய பிரான் மீது, தான் கொண்ட சந்தேகம் எத்தகைய கொடிய பழி என்பதை, பின் பல தடவை நினைத்து வேதனைப்பட்டிருக்கிறாள் சீதாப்பிராட்டி: அசோக வனத்தில் சிறைப்பட்டிருந்தபோது, பழைய நிகழ்ச்சிகளை நினைத்துப் பார்த்துப் பொங்கி அழுதபோதெல்லாம், தன் பேதைமையை எண்ணி நொந்திருக்கிறாள். 'நான் இளைய பிரானிடம் கூறிய கொடிய வார்த்தைகளை அறிந்தால், என்னைச் சிறை மீட்கக் கூட கணவர் வரமாட்டார்' என்று புலம்பியிருக்கிறார்கள். அந்தப் பாவத்திற்குப் பரிகாரமாகத்தான், எந்த இளைய பிரானின் உள்ளத்தைத் தீயினும் கொடிய வார்த்தைகளால் சுட்டு வடு உண்டாக்கினாரோ, அந்த இளைய பிரானையே அக்கினிச் சோதனைக்கான தீயை மூட்டும்படி கேட்டுக் கொண்டாள்." என்று தமக்கைக்காக உள்ளம் உருகக் கண்ணீர் கசியப் பரிந்து பேசிய ஊர்மிளை, கண்களின் ஈரத்தை மெல்லிய விரல்களால் துடைத்துக்கொண்டு, "சரி... இளையபிரான் விஷயத்தில் தவறு செய்த சீதாப் பிராட்டிக்குத் தண்டனையாகத்தான் அந்த அக்கினிப் பிரவேசத்தை நடத்தினீர்கள் என்று நானே ஓரளவு யூகித்திருந்தேன்... அடுத்து, இரண்டாவதாக இன்னொருவருக்கு மறைமுகத் தண்டனை என்றீர்களே, அது யார்?" என்று ஆர்வம் துடிக்கத் தொடர்ந்து கேட்டாள்.

"இரண்டாவது ஆள்- அந்த இலக்குவனின் அண்ணன்தான்!" என்று முகத்தில் புன் முறுவல் பொலிய இராமன் நிதானமாகச் சொன்னதும், திடுக்கிட்டுப் போய்விட்டாள் ஊர்மிளை.

"என்ன சொல்லுகிறீர்கள், அரசே!.... அவருடைய அண்ணன் என்றால் - " எனத் தொடர்ந்து பேசத் துணிவு இல்லாமல், இயல்பாக விரிந்த அழகிய கண்கள் மேலும் விரிந்து இமைக்க மறந்து ஓவியமாய் நிலைபெற, திக்பிரமை பிடித்ததுபோல் நின்றாள் அவள்.

"ஆமாம்... ஊர்மிளா! உன் விஷயத்தில் தவறு செய்த எனக்கும் தண்டனை வேண்டாமா?... உன் கணவனைப் பிரிந்து பதினான்கு ஆண்டுகள் - அதுவும் திருமணமான புதிதில், பதினான்கு ஆண்டுகள் - தனித்திருந்தது, சாதாரண விஷயமா? அந்தப் பிரிவுக்கு நானும் ஒரு காரணம்தானே?... சில மாதங்கள் நானும் சீதையும் பிரிந்திருந்ததற்குள் எவ்வளவு துன்பம், சோகம், விரகம், தாபம் என்று துடித்துப் போய்விட்டோம்? பதினான்கு ஆண்டுக்காலம், கணவனைப் பிரிந்து தனிமைத் துயரில் வாடும்படி ஓர் இளம் பெண்ணுக்கு நான் செய்த பாவத்துக்கு எனக்குத் தண்டனை வேண்டாமா?" என்று தழுதழுத்த குரலில், கழிவிரக்கம் கண்ணீராய்க் கசிய நெகிழ்ச்சியுடன் கேட்டான் இராமன்.

அவனுடைய பேச்சின் பொருள், முற்றிலுமாகப் புரியாத நிலையில், அவனை ஏறிட்டுப் பார்த்தபடி நின்றாள் ஊர்மிளை.

"ஊர்மிளா! உன் விஷயத்தில் நான் செய்த பாவத்துக்கு, நேரடியாகத் தண்டனையை ஏற்றுக் கொள்ளமுடியாத சூழ்நிலை எனக்கு.... உனக்குப் புரியும் என்று நினைக்கிறேன். ஆகவேதான், எனக்கு நானே மறைமுகமான தண்டனை விதித்துக் கொண்டேன். 'ஆதர்ஸ புருஷனான இராமனா இப்படி அக்கினிச் சோதனை நடத்தினான்?' என்று நீ மட்டுமல்ல - நெஞ்சினால் பிழை செய்யாத அன்னை என்று என்னால் விமோசனம் அளிக்கப்பட்ட அகலிகை மட்டுமல்ல - காலங்காலமாக, இந்த மண்ணில் வாழும் பெண்கள், புருவத்தை உயர்த்தி என்னைப் பார்ப்பார்களே, அந்தத் தண்டனை எனக்கு வேண்டும்... 'இராமபிரானாக இருந்தாலும் அவன் இப்படிச் செய்தது தவறுதான்' என்று கைநீட்டிக் குற்றஞ்சாட்டும்போது, இராமனின் குணச்சித்திரம் சற்றே தாழ்ந்துவிடுமல்லவா? அந்தத் தாழ்வு, எனக்கு மறைமுகமான தண்டனை, ஊர்மிளா!" என்று நிச்சலனமாக அழுத்தமான சொற்களில் பிரகடனம் செய்த அந்த யுக புருஷனின் பௌருஷத்தைத் தரிசித்து மெய்சிலிர்க்க நின்றாள் ஊர்மிளை.

இராமனுக்குப் பின்னணியில் காட்சியளித்த - வானில் நிலை கொண்டிருந்த முழுநிலவில் படிந்திருந்த களங்கம், அந்த அழகின் பூர்ணத்துவத்திற்கு மேலும் பொலிவு அளிப்பதை, மீண்டும் நிதர்ஸனமாகக் கண்டாள் அவள்.....

அவளது மதிப்பீட்டில், இராமனது ஆதர்ஸ மாண்பு மேலும் கம்பீரமாக சாந்நித்தியம் கொண்டிருந்தது.

'மானுடம் வென்றதம்மா!' என்று கூவவேண்டும்போல் அவள் மனதுக்குள் ஒரு குரல் ஆரோகணித்தது....

